முஹம்மது யூசுப்
சாஹிப், A. N
சுன்னத் ஜமா அத்
சென்னை, 1932

Record no. 80843

*Muhammatu Yūcup Cāhip, A. N*
*Cuṉṉat jamā at*
*Ceṉṉai, 1932*

Record no. 80843

Bibliographic Record Target

*முஹம்மது யூசுப் சாஹிப், A. N.*
*சுன்னத் ஜமா அத். -- சென்னை : தாருல் இஸ்லாம் புஸ்தகசாலை, 1932.*
*[iii], vii, 133, 14 p. ; 18 cm.*
*Record no. 80843*

*Muhammatu Yūcup Cāhip, A. N.*
*Cun̲n̲at jamā at. -- Cen̲n̲ai : Tārul Islām Pustakacālai, 1932.*
*[iii], vii, 133, 14 p. ; 18 cm.*
*Record no. 80843*

# ۃ والجماعت

# சுன்னத் ஜமாஅத்

BY

"தாருல் இஸ்லாம்" ஆசிரியர்

மௌலவீ பாஜில் ஹாபிஸ்

ஏ. என். முஹம்மது யூசுஃப் சாஹிப் (பாகவீ)




பிரசுராலயம்:

தாருல் இஸ்லாம் புத்தகசாலை,

சென்னை.

# 22




# سنة والجماعت

# சுன்னத் ஜமாஅத்


BY

"தாருல் இஸ்லாம்" ஆசிரியர்

மௌலவீ பாஜில் ஹாபிஸ்

ஏ. என். முஹம்மது யூசுப் சாஹிப் (பாகவீ)





"தாருல் இஸ்லாம்" ஆசிரியர்

பா. தாவூத்ஷா சாஹிப் பி. ஏ.,

அவர்களால் தமிழ் திருத்தப்பட்டது.


பிரசுராலயம் :

தாருல் இஸ்லாம் புஸ்தகசாலை,

தபாற்பெட்டி நெ. 15, சென்னை.

விலை] 1932 [~~அணா~~.

2-50




# முகவுரை

இப்பூவுலகின்பால் ஆதி முதற்கொண்டு எம்பிரான்[ஸல்] அவர்கள் காலம்வரை எண்ணற்ற எத்தனையோ சமயங்களும் மதங்களும் தோன்றியிருக்கின்றன வென்பதை எமது குர்ஆனுடைய போதனைகளால் நன்கு தெரிந்துகொள்ளுகின்றேம். எனவே, இங்ஙனம் தோன்றிய மார்க்கங்களெல்லாம் அந்தந்தச் சமயங்களில் வசித்து வந்த மாக்களை மக்களாய்த் திகழ்வுறச் செய்யும் மேலான நோக்கத்தைக் கொண்டு தக்கதொரு ஷரீஅத்தை (வழியை) நிர்மாணம் பண்ணிக் கொண்டே யிருந்தன வென்பதையும் எமது குர்ஆன் ஷரீபின் உபதேசங்களினாலேயே நன்கு உணர்ந்து கொள்ளுகின்றேம். எமது வள்ளல்[ஸல்] அவர்களுக்கு முன்வந்த தீர்க்கதரிசிகளெல்லாம் சர்வகுணங்களிலும் சம்பூர்ணமா யில்லாமலிருந்ததனால், அப்படிப்பட்ட ஒவ்வொருவரும் ஒரு சில மக்களைச் சீர்திருத்திச் செவ்விதாய வழியில் செலுத்துவான் வேண்டியே நபிமார்களாக அனுப்பப்பட்டிருந்தனர். மேலும் அவர்களுடைய நபித்துவத்தின் நோக்கத்தின்படியே அன்னார் கொண்டுவந்த வேதங்களெல்லாம் ஒரு குறிப்பிட்ட சில மக்களை மட்டுமே அவற்றின்படி நடாத்திச் செல்லக்கூடியவைகளாகவு மிருந்தன. எனவே, பொது

வாய்க் கவனிக்குமிடத்து, எமது நபிகள்[ஸல்] அவர்களுக்குமுன் இப்பாருலகில் தோன்றியிருந்த மார்க்கங்களெல்லாம் சர்வதேசங்களிலு முள்ள சகல மக்களாலும் சாமான்ய முறையில் கைக்கொண் டொழுகி வருதல் கூடாதனவா யிருந்தனவென்றே கூறி முடிக்கலாம்.

எனவே, முன் சென்ற நபிமார்களுக்குப் பின்னும் பின்னும் நபிமார்கள் தோன்றிக் கொண்டிருந்த காரணத்தால், எந்நபியின் பாதையும் (ஷரீஅத்தும்) சமயமும் ஒரு குறிப்பிட்ட முறையைச் சுட்டிக் காட்டி, இதன்படியேதான் எல்லா மக்களும் இறுதிநாள்வரை ஒழுகிச் செல்லவேண்டும் என்று ஸ்திரப்படுத்திச் சொல்லமுடியாமற் போயிற்று. அங்ஙனம் சொல்வதும் இயலாத காரியமாகவே யிருந்து வந்தது. என்னெனின், இவ்வுலகின்பால் எந்நபியின் காலத்தில் மக்கள் எவ்வளவு முன்னேற்ற மடைந்தவர்களா யிருந்தனரோ, அதற்குத்தக்கவாறுன முறையிலேயே அன்னாருக்குப் பொருத்தமான முறையில் உபதேசம் பண்ணவேண்டியதா யிருந்தது. ஊன்றிக் கவனிப்பவர்கள் இதுதான் சரியான முறை யென்பதையும் ஏற்றுக்கொள்வார்க ளென்பதி லொன்றும் சந்தேகமில்லை. இக்காரணம் பற்றியேதான் முந்திய நபிமார்களுடைய எந்த மார்க்கமும் எந்தச் சட்டதிட்டங்களும் சர்வ மக்களும் ஒழுகிச் செல்லும் முறையில் நெடுங்காலமட்டும் நிற்கவில்லை. ஆனால், எமது வள்ளல்[ஸல்] அவர்கள் மாத்திரமே இவ்வுலகின் முடிவுகாலமட்டும் தோன்றக்கூடிய மக்களுக்கெல்லாம் ஒரு பரிபூர்ண தீர்க்கதரிசியாய்த் தோன்றி யிருக்கின்றார்க



ளாகையால், இவர்கள் கொணர்ந்த மார்க்க போதனையும் பரிபூர்ண முள்ளதாகவும், சர்வமக்களும் சாதாரணமாய் ஒழுகி நடக்கக்கூடிய முறையிலும் அமைந்திருக்கவேண்டு மென்பது ஒருபக்கில் கிடக்க, இப்படிப்பட்ட சத்திய போதனைகளின் கட்டுப்பாடெல்லாம் நிலைகுலையாமல் அப்படியே யிருக்கவேண்டியதும் அத்தியாவசியமா யிருக்கின்றது.

இக்காரணம் பற்றியேதான் எமதாண்டவனுங் கூடத் தன் திருமறையில், ليوم اكملت لكم دينكم واتممت عليكم نعمتى ورضيت لكم الاسلام دينا "இன்று நுங்களுடைய மார்க்கத்தைப் பரிபூர்ணமாகச் செய்து விட்டேன் ; மேலும் நுங்கள்மீது என்னுடைய அருட்கொடையைச் சம்பூர்ணமாக்கி விட்டேன் ; மேலும் நுங்களுக்காகஇஸ்லாத்தையேசரியானசன்மார்க்கமாக நான் ஏற்றுக்கொண்டு விட்டேன்"—(5 : 3) என்று முஸ்லிம்களாய நம்மைப் பார்த்துக் கூறுகின்றான். இங்ஙனம் இஸ்லாத்தின் சம்பூர்ண நபியாம் முஹம்மத் முஸ்தபா[ஸல்] அவர்கள் இப்பாருலகில் தோன்றுவதற்கு முன்வந்து கொண்டிருந்த எந்தச் சமயசம்பந்தமாகவும் வேத சம்பந்தந்தமாகவும் இப்படிப்பட்ட பரிபூர்ணத்துக்குரிய சொல்லைக்கொண்டு ஆண்டவன் பெருமைப் படுத்தவில்லை யென்பது உண்மையான ஒரு விஷயமாகும். மேலும் இந்த இஸ்லாம் மார்க்கமானது இறுதிநாள்வரை நீடித்திருக்கக்கூடியதாகவு மிருக்கின்றதென்பதை எமது குர்ஆனுடைய 83-ம் அத்தியாயத்தின் வாயிலாய் விளங்கியும் கொள்ளுகின்றோம். எனவே, இப்படிப்பட்ட மேன்மையான ஒரு மார்க்கம் நீண்டகாலமட்டும் நிலைத்திருக்க வேண்டுமாயின், இதன்

போதனைகளும் சட்டதிட்டங்களும் அதிஜாக்கிரதை யுடன் காப்பாற்றப்பட வேண்டுமென்பதை யாம் ஈண் டெடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. இதனால் தான், எமதாண்டவனே தன் வேதத்தில், "நாம் உபதேசத்தை வெளிப்படுத்தி யிருக்கிறோம்; இன் னமும் அதனை நாமே பாதுகாப்பவராயு மிருக்கின் றோம்" (15: 9) என்று அறைந்துகொண் டிருக்கின் றான். இதற்கொப்பவேதான், எமது மாசற்ற மறை யான குர்ஆன் ஷரீபும் ஹதீத் ஷரீபும் (முஹம்மத்[ஸல்] அவர்களுடைய வாக்கியமும்) ஆதிகாலந் தொட்டு இதுகாறும் சுமார்1363 ஆண்டுகளாக மாற்றமும் திருத் தமுமில்லாமல் சுத்த பரிசுத்தமாகவே இருந்து வருகி கின்றன வென்பதைக் கல்வி ஞானமுள்ள எவரும் மறுக்க முன்வர மாட்டாரென்பது திண்ணம்.

இதனால்தான் தம் உம்மத்தோர்களாய நம்மை நோக்கி எமது நபிகள்[ஸல்] அவர்கள், عليكم بالقران وبسنتى "குர்ஆனின் போதனைகளையும் என்னுடைய பாதையையும் (ஷரீ அத்தையும்) நீங்கள் பற்றிக் கொள் ளுங்கள்," என்றுதிருவாய் மலர்ந்தருளியுள்ளதாய் ஒரு வாக்கியமும் காணப்படுகின்றது. அன்றியும், عليكم بسنتى وسنة الخلفاء الراشدين "என்னுடைய வழியையும் (செயல்களையும்) நேர்மையான (என்னு டைய பிரதிநிதியான) குலபாக்களுடைய வழியையும் பற்றிக்கொள்ளுங்கள்," என்று மற்றுமொரு திரு வாக்கியமும் காணப்படாமலில்லை. இப்படிப்பட்ட இன் னமும் எத்தனையோ வாக்கியங்க ளெல்லாம் எம்பி ரான்[ஸல்] அவர்கள் கூறியிருப்பதாய்த் தெரிந்து கொள் ளுகின்றோம். எனவே, நாம் சிறிது ஆழ்ந்து கவனிக்கு



மிடத்து, எம்பிரான்[ஸல்] அவர்கள் காட்டிச் சென்ற சுன்னத்தின்படி நடந்து செல்லுகின்றவர்களான ஜமா அத்தார் (கூட்டத்தார்) களே, சுன்னத் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்களாவார்க ளென்பதை நன்குணர்ந்துகொள் ளல் வேண்டும். எமது நபிகள்[ஸல்] அவர்கள் காட்டிச் சென்ற மார்க்கத்தில் சரியாக நடந்து செல்லாதவர்க ளுள் சிலர், "நாங்களும் ஸுன்னத்ஜமாஅத்தைச் சேர்ந் தவர்கள்தாம்; இல்லை! நாங்கள்தாம் சுன்னத் ஜமாஅத் தென்னும் கூட்டத்தார்கள்; இதர உலகமக்களெல்லாம் முஸ்லிம்களென்றுசொல்லிக்கொள்ள லாயிக்கில்லாதவர் களா யிருக்கின்றார்க" ளென்றும், "முஸ்லிம்களென்று பெயர் வைத்துக்கொண்ட போதினும், அவர்களெல் லாம் முனாபிக் களாகவும், முல்ஹித்களாகவும், பாஜிர் களாகவும், பாஸிக் களாகவுமேதாம் காணப்படுகின் றனர். எனவே, இப்படிப்பட்டவர்களை யெல்லாம் நமது ஸுன்னத்ஜமாஅத்துக்குள் கொணர்ந்து சேர்த் துக்கொள்வது கூடா" தென்றும் வெட்கமின்றிக் கூறித் திரிகின்றனர். இதனைக் கண்ணுறும்போது அளவற்ற ஆச்சரியப்பட வேண்டியதா யிருக்கின்றது.

இதற்குக் காரணமென்னவெனின், ஸுன்னத் ஜமாஅத் தென்ப தென்ன? இதன் கொள்கைக ளென்ன? எதைக் கைவிட்டவர் ஸுன்னத் ஜமா அத்தையே விட்டு விட்டவர்? என்பதை நிர்ணயம் பண்ண இவ்வறியா மாக்களுடைய காங்களில் இதற் குரிய உரை கல்லொன்று இல்லாமலிருப்பதே யாம். இதனால்தான் ஒன்றுமறியாச் சாதாரண நேயர்களான முஸ்லிம்களை யெல்லாம், இந்த 'ஸுன்னத் வல்ஜமா அத்' தென்னும் பதத்தைக்கொண்டு அதிகம் ஆட்டி

வைத்துக் கொண்டிருக்கின்றனர் பலர். இப்படிப் பட்ட நடுக்கத்தையும், பயத்தையும், அறியாமையையும் அகற்றுவான் வேண்டியே, மௌலானா செய்யித் ஸுலைமான் நத்வீ, "ஸுன்னத் ஜமாஅத்" தென்றால் என்ன? இதன் கொள்கைக ளென்ன? என்பது சம்பந்தமாக எழுதியிருக்கும், "அஹ்லுஸ் ஸுன்னதி வல் ஜமாஅத்" என்னும் உர்தூ பிரசுரத்தையே தமிழில் மொழி பெயர்த்து இதோ நம் நேயர்களான முஸ்லிம்களாய நுங்கள் முன்னிலையில் சமர்ப்பித்திருக்கின்றோம். எனவே, இதனை நம் நேயர்கள் சிறிது ஆழ்ந்து கவனித்து, உண்மையை உணர்ந்து கொண்டு, தங்கள் அனாவசிய அச்சத்தைத் தாமே நிவர்த்தி செய்து கொள்வார்களென்றே எதிர்பார்க்கின்றோம்.

பொதுவாய்க் கவனிக்கு மிடத்து, குர்ஆனும், ஹதீதும் இஸ்லாத்தின் மூலக் கொள்கைகள் சம்பந்தமாக எத்துணைத் தூரம் எவ்வளவு விளக்கமாக எம்மாத்திரம் கூறிக்கொண் டிருக்கின்றனவோ, அவற்றினை அப்படியே ஏற்றுக்கொள்ளல் வேண்டும். இவற்றினை ஏற்றுக்கொண்டதன் பின், ஒவ்வொருவரும் பிரதி விஷயத்தையும் மேற்கொண்டு விவரித்துக் கொண்டு செல்வார்களாயின், அது விரிப்போரின் சொந்த அபிப்பிராயமாகும். இதற்கும் ஸுன்னத் ஜமாஅத்தின் மூலக் கொள்கைக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. இப்படியில்லாமல், மேலே காட்டிய இரண்டு விதமான கொள்கைகளையே ஏற்றுக்கொள்ள மறுப்பார்களாயின், அப்படிப்பட்டவர்களை ஸுன்னத் ஜமாஅத்தாருள் சேர்ந்துகொண்டவர்கள் என்று



கூறும் விஷயத்தில் அதிகம் கவனித்தல் வேண்டும். இவ்வாறில்லாது தாடிக்கும், மீசைக்கும், கிராப்புக்கும், கேவலம் சிகைக்கும் கௌரவத்தைக் கொடுக்க வேண்டும் என்று ஒரு பல முஸ்லிம் மக்களையே ஸுன்னத் ஜமாஅத்தினின்றும் நீக்கிக்கொண் டிருப்பதுடன் நில்லாது, இஸ்லாத்தினின்றே இப்படிப்பட்டவர்களை நீக்கிவிடவும் சில குறுகிய மனப் பான்மையைக் கொண்ட மாக்கள் பெரு முயற்சி செய்துகொண்டு வருகின்றனர். எனவே, இந்நூலைக் கவனித்து, விஷயத்தை உணர்ந்துகொண்ட முஸ்லிம்களை ஏமாற்றப் பார்க்கலா மென்பது முடியாதென்பதை அன்புடன் தெரியப்படுத்திக் கொள்ளுகின்றோம். இதில் விசேஷமென்னவெனின், ஸுன்னத் ஜமாஅத் தென்பதன் கொள்கைகளென்ன வென்பதை உணர்ந்துகொண்டில்லாத சில மக்களும், 'ஸுன்னத் ஜமாஅத் போய் விட்டது! போய்விட்டது!!' என்று கூக்குரலிடுவதுதான்.

ஆகவே, எம்முடைய இச்சிறிய முயற்சியினால் வெளியிடப்பட்டிருக்கும் இந்த "ஸுன்னத் ஜமாஅத்" என்னும் நூலில் விளக்கப்பட்டிருக்கும் விஷயங்களை நன்குணர்ந்துகொண்டு, மெய்யான ஸுன்னத் ஜமாஅத்தின் கொள்கைகளினின்றும் நாம் அனைவரும் வெளிச் செல்லாமலிருக்கும்படி நம்மைக் காப்பாற்றிக் கொள்ள, எல்லாம் வல்ல அந்த ஆண்டவன் ஒருவனே போதுமானவன். அவன் ஒருவனே நம்மை நேரான வழியில் நடாத்தி வைக்கக் கூடியவனாகவுமிருக்கிறான். வஸ்ஸலாம்!

சென்னை, 26-12-1932. } இங்ஙனம்: ஹாபிஸ், முஹம்மது யூசுபு (பாகவீ)

بسم الله الرحمن الرحيم

نحمده ونصلي على رسوله الكريم

اهل السنة والجماعة

لمولانا سيد سليمان (ندوى)

# ஸுன்னத் ஜமாஅத்



புகழடங்கலும் அல்லா(ஹ்)வுக் குரியதாகும்; சலவாத்தும் சலாமும் எம் பிரான்[ஸல்] அவர்கள் மீதும், அவர்கள் கிளையார் கோத்திரத்தார் மீதும், தோழர்கள் மீதும், மற்றும் எல்லா முஸ்லிம்கள் மீதும் உண்டாவனவாக!

சமூகம், தேசம், தலைசிறந்த பெரியார் முதலியவர்கள் சம்பந்தமான சரித்திரங்களை மிக்க பிரியத்துடன் மானிடர்கள் வாசித்து வருகின்றனர். இதன் பயனாக, இவை ஆதியில் எவ்வாறிருந்தன? பிறகு எவ்வாறு மாற்றமடைந்தன? என்பனபோன்ற விஷயங்களை அனேகமாய்ச் சகல மனிதர்களும் உணர்ந்து

கொண்டுதா னிருக்கின்றனர். ஆனல், சொற்கள் சம்பந்தமான சரித்திரங்க ளென்ன? இவை ஆதியில் எவ்வாறு கொள்ளப்பட்டு வந்தன? நாள் செல்லச் செல்ல இவைகளுள் எத்துணைப் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன? இவைகளுள்ளும் சமூகங்களுக் கும் தேசங்களுக்கும் மாணிடர்களுக்கும் ஏற்பட்ட னவே போலுள்ள மாறுதல்கள் உண்டாயினவா? இல்லையா? என்பனபோன்ற விஷயங்களைக் கவனித் திருக்கின்றீர்களா? இதற்கு விடையில் இல்லை என்றே மறுமொழி கூறுவது மிகையாகாது. எனவே, சொற் பதங்களுள் சிலவற்றைத் தங்களுக்கு எடுத்துக் காட்டு கின்றேன். இவற்றினின்று மற்றும் விஷயங்களைச் சீர் தூக்கிப் பார்த்துக் கொள்வீர்களாக. உதாஹரணமாக,

صبر ஸ'ப்'ர் என்னும் பதத்தின் உண்மையான அர்த்தம் மன உறுதி, பொறுமை, சகிப்புத்தன்மை, ஹிருதயம் கலக்கமில்லா திருத்தில், மனஉறுதியுடன் கஷ்டங்களைச் சகித்துக்கொள்ளல் என்பன போன்ற வைகளாம். ஆனல், இதுசமயம் இந்த 'ஸப்ர்' என் னும் சொல் எப்பொருளில் உபயோகிக்கப்படுகின்ற தெனின், யாரேனும் அக்கிரமமாய் வாய்க்கு வந்தவா றெல்லாம் ஏசினும் அவை யனைத்தையும் நாம் கேட்டுக்கொண்டு வாய்பொத்தி யிருக்கவேண்டும்; யாரேனும் நம்மை அடிப்பாராயின், அதைப் பெற்றுக் கொண்டு, "ஏ ஆண்டவனே! நாங்கள் இதை யெல் லாம் பொறுத்துக்கொண் டிருக்கின்றோம். எனவே, நீதான் ஏழைகளின் அக்கிரமங்களுக்குப் பதில் வாங்கக் கூடியவஞ யிருக்கிருய்" என்று சொல்லிவிட்டு நாம் சும்மா இருந்துவிடவேண்டும் என்பதே. மானமற்ற



தனமாகத் தாத்பரியங் கொள்வது இதைவிட அதிகப் பட்டதாகவா இருக்கின்றது?

ظلم ளு'ல்ம் (ஜுல்ம்) என்னும் பதத்தின் அர்த் தத்தைக் கவனிக்கும்போது, இதன் உண்மையான தாத்பரியமாவது: ஒரு மனிதன் தனக்காகவோ, அல்லது இதார்களுக்காகவோ, எளியோருக்காகவோ, வலியோருக்காகவோ, அரசன் பிரஜைகளுடனும் பிர ஜைகள் அரசனுடனும், அல்லது வேறு யாருக்காயினும் ஒரு விஷயத்தில் எல்லையைக் கடந்து அப்புறம் செல்வ தாகும். குர்ஆன் பூராவும் இச்சொல்லுக்கு இப்படியே தான் தாத்பரியங்கொண் டிருக்கிறது. ஆனல், இச் சொல் இதுகாலை வலியான் எளியான்மீது செய்யும் கொடுமைக்குச் சொல்லப்பட்டு வருகிறது.

شريف ஷரீ'ப் என்னும் இப்பதம் ஆதியில் ரயீஸ், தலைவர் என்னும் பதத்துக்கொத்ததா யிருந்துவந்தது. பிறகு இச்சொல் நபிகள்[ஸல்] அவர்களின் வம்ச பரம் பரையார் களுக்குச் சொல்லப்பட்டு வந்தது. ஆனல், இதுசமயம் தங்களுக்குச் சமமானதா யில்லாத இதர வர்க்கத்தார், குடும்பத்தார்களுடனே சம்பந்தம் செய்து கொள்ளாத அப்படிப்பட்ட குடும்பத்தவர்களுக்குச் சொல்லப் படுகின்றது.

دهشت த'ஹ்ஷத் என்னும் இச்சொல் ஆதியில் ஆச்சரியம், திகைப்பு முதலியவைகளுக்குச் சொல்லப் பட்டு வந்தது. ஆனல், இதுசமயம் அச்சம், பயம் முதலியவைகளுக்கே இப்பதம் சொல்லப்பட்டு வரு கின்றது.

اسلام இஸ்லாம் என்றால் முதன்முதலில் நாய கம்[ஸல்] அவர்களின் காலத்தும், ஸஹாபாக்களின் காலத்

தும் ஆண்டவன் ஒருவன், நபிமார்களெல்லாம் உண்மையானவர்கள், அல்லா(ஹ்)வின் வார்த்தைகளும் உண்மையானவையே என்று ஒத்துக் கொள்ளுதற்குச் சொல்லப்பட்டு வந்தது.) ஆனால், இதுசமயம் இந்த இஸ்லாத்திற்குள் ஆண்டவனுடைய குணவிசேஷங்களான அடைமொழிகளெல்லாம் ஆண்டவனுடைய தாத்துக்குள் (நிர்க்குணப் பிரம்மத்துள்) சேர்ந்தனவா? அல்லது வெளியானவையா? முஃஜிஜாத் தென்பது நபித்துவத்துக்கு ஆதாரங்களாகுமா? ஆகாவா? ஆண்டவன் வார்த்தைகளெல்லாம் சிருஷ்டிக்கப் பட்டனவா? அல்லவா? என்பன போன்ற வெல்லாம் இந்த் இஸ்லாமென்னும் பதத்தின் தாத்பரியத்துள் வந்து சேர்ந்து கொண்டிருக்கின்றன.

இஃது ஒருபக்கல் கிடக்க. முஸ்லிம்களுக்குள் ஒவ்வொரு காலத்திலும் இலக்ஷக்கணக்கான பிரிவினைகள் தோன்றிக் கொண்டிருந்தன. ஆனால், அவைகளெல்லாம் தண்ணீருக்கு மேலே காணப்படும் நீர்க்குமிழியே போல் தோன்றி மறைந்தன. எனவே, அதைப்பற்றி இது சமயம் நமக்கொன்றும் கவலையில்லை. ஆனால், ஒரு பெரிய சாரார் இஸ்லாம் தோன்றியது முதல் இதுகாறும் இருந்து வருகின்றனர். இவர்களைச் சார்ந்தவர்களே இவ்வகிலத்தின் அனேக பாகங்களில் இதுசமயம் வசித்தும் வருகின்றனர். மேலும் இவ் வகுப்பார் தங்களை ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்களென்று கூறிக்கொண்டுவருகின்றனர். எனவே, இதில் நாம் கவனிக்க வேண்டிய தென்னவெனின், மற்றும் இதா பதங்களில் மாறுதல் ஏற்பட்டிருப்பதே போல் இந்த "அஹ்லுஸ் ஸுன்



னதி வல் ஜமாஅதி" என்னும் இப்பதங்களிலும் மாறுதல்கள் உண்டாயிருக்கின்றனவா? இல்லையா? என்பதே யாகும். பொதுவாய்க் கவனிக்குமிடத்து, இவ்விந்திய மக்கள் யாவரும் (ஷீயா அல்லாதவர்கள்) சுன்னத்வல் ஜமாஅத்தார்களென்றே எண்ணிக் கொண்டிருக்கின்றனர். இஃது உண்மைக் கொத்ததென்று எண்ணுகின்றீர்கள்?

"அஹ்லுஸ் ஸுன்னதி வல்ஜமாஅத்" என்னும் இவ்வாக்கியம் மூன்று சொற்கள் பொதிந்ததாய்க் காணப்படுகின்றது. 'அஹ்ல்' என்றால் சொந்தக்கார மனிதர்கள், பின்பற்றுபவர்கள், அடிமேலடிவைத்து நடப்பவர்கள் என்பனபோன்ற கருத்துக்களைக் கொண்டிருக்கின்றது என்றாலும், வழியைப் பின்பற்றி நடப்பவர்கள் என்பதே இங்குக் கொள்ளவேண்டிய தாத்பரியமாகும். 'சுன்னத்' என்னும் அரபி வாக்கியத்துக்குப் பாதை என்று பொருள்கொள்ளப்படும்; என்றாலும் இங்கு நபிகள்[ஸல்] அவர்களுடைய ஜீவிதம், ஒழுக்கம், வழக்கம் முதலியவைகளையே கருத்தாகக்கொள்ளல் வேண்டும். சுன்னத் என்றால் பொதுவாய்ப் பாதை என்பதைக் கொள்வதற்கில்லை. ஆனால், நமது மார்க்க விஷயத்தில், நாயகம்[ஸல்] அவர்களின் ஒழுக்கவழக்க நடவடிக்கை களுக்குத்தாம் நமது இஸ்லாம் சுன்னத் தென்று சொல்லிக்கொண் டிருக்கின்றது. மேலும் பொதுவாய் 'ஜமாஅத்' தென்று கூட்டங்களுக்குச் சொல்லப்படுவது வழக்கம். எனினும், இங்கு நமது நபிகள்[ஸல்] அவர்களைப் பின்பற்றிய சஹாபாக்களான கூட்டங்களையேதாம் குறிப்பிட்டுக்கொண் டிருக்கின்றது. எனவே, நாம் மேலே இதுவரை சொல்லிக்

கொண்டு வந்ததிலிருந்து, 'அஹ்லுஸ் ஸுன்னதி வல் ஜமாஅத்' தென்றால் அர்த்த மென்ன வென்னும் விஷயத்தை நீங்களே மிக எளிதில் தெளிந்து கொள்ளலாம். அஃதாவது, எந்த மனிதன் தன்னுடைய நடத்தைகளுக்கு அச்சாணியாய் நபிகள்^ஸல் அவர்களின் நடத்தையையும், ஒழுக்கங்களையும், உயர் பதவியை யடைந்தவர்களான சஹாபாக்களின் நடத்தையையும் கொண்டிருக்கின்றானோ, அவனே இவ்வாறு அஹ்லுஸ் ஸுன்னதி வல்ஜமாஅதி என்று சொல்லிக் கொள்ளுவதற்கு லாயிக்கானவனாவான் என்பதே.

'சுன்னத்' என்னும் சொல்லுக்கு மாறான சொல் 'பித்அத்' தென்பதாகும். 'பித்அத்' தென்றால் அகராதியின்படி 'நவீனம்' என்று பொருள்படும். நமது ஷரீஅத்தின்படி 'பித்அத்' தென்று சொல்லப்படுமாயின், நம் நபிகள்^ஸல் அவர்களால் சொல்லப்படாமலிருக்கும் ஒரு விஷயத்தையும், இப்படியே அவர்களினின்றும் எவ்வித ஆதாரத்தையும் பெற்றுக்கொள்ளாத ஒரு விஷயத்தையும் மார்க்கத்துக்குள்ளே கொணர்ந்து புகுத்துவதாகும். எனவே, எம்பிரான்^ஸல் அவர்களும், சஹாபாக்களான பெரியார்களும் இவ்விரண்டு (சுன்னத் பித்அத்) சொற்களையும் மேற் குறிப்பிட்ட தாத்பரியத்திலேயே வழங்கி யிருக்கின்றனர். சில சமயங்களில், சுன்னத் தென்று கூறுவதற்கீடாய் "ஹுதா" என்றும், பித்அத் தென்பதற்குப் பதிலாய் "முஹ்தத்" என்றும் திருவுளமாயிருக்கின்றார்கள். இவ்விரண்டு பதங்களும் மேலே சொல்லிக்கொண்டு வந்த தாத்பரியங்களையே கொண்டிருக்கின்றன.

'சஹீஹ் முஸ்லிமில்' ஒரு விஷயம் பின்காணு



மாறு காணப்படுகின்றது. அதனைச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே நாயகம்^ஸல் அவர்கள் கண்களெல்லாம் சிவந்துகொண் டிருந்தன; தொனியும் பெரிதாய்க் கொண்டிருந்தது; கோபத்துடன் வார்த்தைகள் வெளியாய்க்கொண் டிருந்தன:—

"இதற்குப்பின் நல்ல வார்த்தைகள் ஆண்டவன் வார்த்தைகளாகும்; பாதையில் சிறந்தது முஹம்மதின் பாதையா யிருக்கிறது; காரியங்களுள் மிகக் கொடியது (ஆதாரமற்ற) புதிய ஒவ்வொரு வார்த்தையு மாகும். (நம்மிட மில்லாத) புதிய ஒவ்வொரு வார்த்தையும் வழிக் கேட்டிலேயே கொண்டு செல்லும்."

இஃது ஒரு பக்கல் கிடக்க. முஸ்னத் அஹ்மத், அபூதாவூத், திர்மதீ, இப்னுமாஜா முதலிய ஹதீது கிரந்தங்களில் பின்வரும் வாக்கியம் காணப்படுகின்றது:—

"என்னுடைய பாதையை (மார்க்கத்தை)யும், குலபாயெ ராஷிதீன்களின் (நேரய்நடந்து சென்ற பிரதிநிதிகள்) பாதையையும் நீங்கள் உறுதியாய்ப் பற்றிக்கொள்ள வேண்டும்; அதையே நாவினால் உறுதியாய்ப் பற்றிக் கொள்ளுங்கள். ஆனால், புதிதாய் உண்டாகக்கூடிய காரியங்களை(க் குறித்து) நுங்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்கிறேன். ஏனெனின், புதிதாய் உண்டாக்கப்படும் காரியங்களெல்லாம் பித்அத்தான காரியமாகும்; சகல பித்அத்துகளும் கெட்ட வழிகளில் கொண்டுசேர்க்கக் கூடியனவா யிருக்கின்றன."

அபூதாவூத், திர்மதீ, இப்னுமாஜா முதலிய கிரந்தங்களில் காணக்கிடக்கும் நாயக வாக்கியத்தையும் கவனிப்பீர்களாக:—

"உங்களுக்குப் புதிதாய் உண்டு பண்ணப்படும் காரியங்களை(க் குறித்து) அச்சமூட்டி எச்சரிக்கை செய்கின்றேன். எல்லாப் புதிய காரியங்களும் கேடான வழியில் கொண்டுசெல்லக் கூடியனவா யிருக்கின்றன."

மேலே சொல்லிக்கொண்டுவந்த நாயக வாக்கியங்களை போன்ற எத்தனையோ ஹதீதுகள் ஹதீது கிரந்தங்களில் காணக் கிடக்கின்றன. இந்நாயக வாக்கியங்களில் நபிகள் பிரான்[ஸல்] அவர்களே புதிய காரியங்கள் என்னும் வார்த்தைகளைச் சொல்லி யிருக்கின்றார்கள். புதிய காரியங்க ளென்ற லென்ன? வென்னும் விஷயம் மற்றும் இதர வேறு ஹதீதுகளினால் காணப்படுகின்றன. கவனிப்பீர்களாக. ஹஜரத் ஆயிஷா[ரலி] அவர்கள் சொல்லுகின்றார்கள்:—

"நம்முடைய இம் மார்க்கத்தில் காணப்படாத ஒன்றை இதில் சேர்ப்பானாயின், அது மறுக்கப்பட வேண்டியதாகும்."—"புகாரீ, முஸ்லிம்"

"நாம் செய்யாமலிருக்கும் ஒரு காரியத்தை ஒருவன் செய்வானாயின், அவனுடைய அச் செய்கை மறுக்கப்படக் கூடியதாகும்."—"முஸ்லிம்"

"நாம் செய்யும் காரியமேபோ லல்லாத ஒரு காரியத்தை ஒருவன் செல்வானாயின், அது மறுக்கப்பட்டதாகும்."—"அபூதாவூத்"

இந்த ஹதீதுகளால் நாம் தெரிந்துகொள்ளவேண்டுவ தென்னவெனின், நம் நபிகள்[ஸல்] அவர்கள் தங்கள் உம்மத்துக்களுக்கு அகீதாக்கள் சம்பந்தமாகவும், மார்க்க சம்பந்தமாகவும், கிரியைகள் சம்பந்தமாகவும், எப்படி எம்மாத்திரம் காட்டிக் கொடுத்துச் சென்றார்களோ, அப்படியே அம் மாத்திரமே நாம் செய்து



வரல் வேண்டும். இதுதான் ஹதீது சுன்னத்துப்படி நடந்து செல்வது என்று சொல்லப்படுகிறது. இதில் ஒரு சிறு அணுப் பிரமாணமேனும் குறைக்கவோ கூட்டவோ கூடாது. இப்படி யாரேனும் ஒருசிறிது அதிகமாய்ச் செய்து காட்டுவானாயின், அது பித்அத் (நவீனம்) என்றுதான் சொல்லப்படும். இவ்வாறான பித்அத்தை நமது பரிசுத்த இஸ்லாத்தின் காரியங்களுள் சேர்த்துக்கொள்வது முடியாது என்பதே. [ஆனால், இக்கால மக்களுட்பலர் தாங்கள் என்ன நினைக்கின்றார்களோ அப்படித்தான் மற்ற மானிடர்களெல்லா மிருக்க வேண்டுமென்றும், ஒரு சிறிதேனும் அபிப்பிராயம் மாறுபட் டிருப்பினும் அன்னார் அஹ்லுஸ்ஸுன்னதி வல்ஜமாஅத்தைச் சேர்ந்தவர்களல்லவென்றும் வாய்கூசாமற் கூறுவர். ஆனால், இன்னார் செயல்களுக்கும் எம்பிரானவர்களுடைய செயல்களுக்கு மிடையே மலைக்கும் மடுவுக்கு மிடையேயுள்ள வித்தியாசந்தானிருக்கும். (ஹாபிஸ் பாகவீ).]

இஃது ஒருபுறமிருக்க, ஒரு சமூகத்தாருள் சரியான சன்மார்க்க சீர்திருத்த மேற்பட்டதன்பின் வீணை குழப்பங்களும் விகற்பங்களும் எவ்வாறு (உண்டாகின்றனவென்று நீங்கள் எண்ணலாம். எனவே, இதுவும்) எப்படி ஏற்படுகின்றது என்பதை ரசூல்[ஸல்] அவர்கள் நன்குணர்ந்தவர்களா யிருந்தார்க ளாகையால், இதன் விவரத்தைப் பின் காணுமாறு விளக்கி யிருக்கின்றார்கள். கவனிக்க:—

"அல்லா(ஹ்) அனுப்பிய ஒவ்வொரு நபிக்கும், அவரது உம்மத்துக்களுள் சொந்தமான பல சிஷ்யர்களையும், அவர்களின் வார்த்தைப்படி கோணமல்

நடந்து செல்லும் சோதரர்களேயும் உண்டுபண்ணி யிருக்கின்றான். இவர்களுக்குப் பின் சிலர் தோன்றுகின்றனர்; இவர்கள் செய்து கொண்டிராதவைகளை அவர்கள் சொல்வார்கள்; சொல்லப்படாததையே செய்வர். அவர்களுடன் கரத்தினுல் யார் பெருமுயற்சி செய்கிறுரோ அவரும், தம் ஹிருதயத்தினுல் யார் பெருமுயற்சி செய்கிறுரோ அவரும் மூமினுவார். இதற்கு மேல் ஒரு கடுவத்துணையேனும் அப்புறம் ஈமானில்லே.''—''முஸ்லிம்''

* * *

மேலே சொல்லப்பட்டு வந்ததிலிருந்து, எமது வேதத்தில் கூறப்பட்டும், நபிகள்[ஸல்] அவர்களாலும் அவர்களது சஹாபாக்களான தோழர்களாலும் செய்து காட்டப்பட்டும் வந்திருப்பதைக் காட்டினும் ஒரு சிறிதும் கூட்டவோ குறைக்கவோ கூடாது என்பதையும், அப்படியே ஒருவன் செய்வானுயின், அவன் நபிகள்[ஸல்] அவர்களின் சுன்னத்தை அழித்துக்கொண்டும், நாயகமவர்களால் கொள்ளப் படாத கொள்கைகளான பித்அத்தை வளர்த்துக்கொண்டும் வருகின்றுன் என்றேதான் கொள்ளப்படுதல் வேண்டும் என்பதையும் செவ்வனே தெரிந்து கொள்ளுகிறேம். எனவே, மேலே கூறிய ''அஹ்லுஸ் ஸுன்னதி'' என்பதன் தாத்பரிய மென்ன? இச் சொல் சம்பந்தமாய் எம்பிரான்[ஸல்] அவர்கள் என்ன சொல்லி யிருக்கின்றுர்கள்? என்பதை ஒருவாறு தெரிந்துகொண்டீர்கள். மேலும் 'வல்ஜமாஅத்' என்னும் பதத்தின் விஷயமாய் நபிகள்[ஸல்] அவர்கள் என்ன சொல்லி யிருக்கின்றுர்களென்பதையும் பின்னே தெரிந்துகொள்வீர்கள்.



எமது இஸ்லாம், இவ்வுலகில் தோன்றிக் கிடக்கின்ற பிரிவுகளனைத்தையும் திரஸ்கரித்து, சகல வகுப்பார்களேயும் ஒன்றுசேர்த்து, ஏக சகோதரத்துவத்துள ஆக்கிவிட வேண்டுமென்றே தோன்றிற்று. எதற்காக நம் இஸ்லாம் தோன்றிற்றே, அதனை இது முடித்தே சென்றது. எப்படி எனின், பலவாறுய்ப் பிரிந்துகிடந்த கூட்டங்களனைத்தையும் ஒன்று சேர்த்தது, அறிமுகமில்லா வர்க்கத்தார்களே யெல்லாம் அன்னியோன்னியமானவர்களாய்ச் செய்தது. எனவே, அன்னவர்களிடையே காணப்பட்ட வேறு பாடுகளே யெல்லாம் விலக்கித் தள்ளி, ''இஸ்லாமியச் சமூகம்'' என்னும் சிறப்புவாய்ந்த மேலான வட்டத்துள் அன்னவர்களே யெல்லாம் கொண்டுவந்து ஒன்றுசேர்த்தது. இதன்பயனுய்ப் பிறவியினுலுண்டாகும் சகோதரத்துவத்தை விட இந்தச் சோதரத்துவமே, முஹாஜிர் அன்ஸார்போன்ற உண்மையான முஸ்லிம்களிடையே சிரேஷ்டமென உண்டாய் விட்டது.

இதுவுமல்லாமல் எந்த வர்க்கத்தாரும் அல்லது சமூகத்தாரும் ஒன்றுசேர்ந்து, அவர்களெல்லாரும் உயிர் நாடியான ஏதேனுமொரு விஷயத்தில் ஒற்றுமையாய்க் காணப்பட்டா லல்லாது, அவர்கள் எவ்விஷயத்திலும் முன்னுக்கு வரமாட்டார்களென்பதை உலகம் நன்கறிந்திருக்கின்றது. அன்றியும், ஒற்றுமையே அந்த வர்க்கத்தாரின் உயிர்நாடியாகவும், உருவாகவும், பாதுகாப்பாகவும் அவர்களுடைய முக்கியக் கருத்தாகவு மிருக்கவேண்டும். இங்ஙனம் ஒன்றித்து ஒற்றுமையாய்ப் போய்க் கிடக்கும் அவர்கள் உலகத்தின் இதர வகுப்பார்களிடையே கண்ணியம் வாய்ந்த ஒரு மகா

பெரிய வர்க்கத்தினராய்க் காணப் படுகின்றனர். இவ்வித ஒற்றுமையே அவர்களைச் சமூகக் கட்டுப் பாடுடைவர்களாகவும், குடும்ப ஒற்றுமை யுள்ளவர்களாகவும் செய்து, நாளுக்குநாள் மேலான வகுப்பார்களாய்ச் செய்துகொண்டு வருகின்றது. இவ்வித ஒற்றுமையென்னும் கட்டுப்பாடு ஒரு சமூகத்தாருள் உடைந்து கிடக்குமாயின், அவர்கள் நாளுக்குநாள் க்ஷீணதசையையேதான் அடைந்துகொண்டு வருவார்கள். ஆகவே, நாளடைவில் அவர்கள் இவ் வுலகினின்றும் மறைந்துவிடுவதும் ஆச்சரியமன்று

ஆகையால், இதுசமயம் சீர்திருத்த மடைந்த நாடுகளென்று சொல்லப்படும் ஐரோப்பாவின் மேம்பாடெல்லாம் "தேசீய ஒற்றுமை" என்னும் இச்சொல்லுக்குள் அடங்கிக் கிடக்கின்றது. எனவே, நமது இந்தியரும் அன்னவர்களேபோல் முன்னேற்ற வகுப்பார்கள்தா மென்று சொல்லப்பட வேண்டுமாயின், இந்தியாவின் மக்களெல்லாம் மார்க்கத்திலோ, தேசீயத்திலோ,பாஷையிலோ ஒன்றுபட்டவர்களாக ஆதல்வேண்டும். இம்மாதிரியான காரியங்களுளொன்றில் இன்னவர்களெல்லாம் ஒற்றுமை யாகாதவரை இந்திய மக்கள் மேலானவர்கள்தா மெனக் கொள்ளப்படப் போவதில்லை. ஆனால்,எமது இஸ்லாம் இவ்வண்ணமாய சோதரத்துவத்தை ஒரு தேசத்தாருக்கோ, அல்லது ஒருவர்க்கத்தாருக்கோ மட்டும் கொண்டு வாராது, உலகின்பால் காணக்கிடக்கும் மானிட கோடிகளெல்லாம் ஒருங்கே ஏக சோதரத்துவத்துள் ஆய்விட வேண்டுமென்று கோருகின்றது; இதனால்தான் உலகின்கண் சாந்தமும் சமாதானமும் நிலவுமெனவும் இஸ்லாம் போதித்துக்



கொண்டிருக்கிறது. இவ்விதச் சகோதரத்துவத்தைக் கொண்டிரா ததனாலேதான் உலகின்பால் அடிக்கடி யுத்தங்கள் பல நிகழ்ந்த வண்ணமாகவே யிருந்து கொண்டிருக்கின்றன. எப்படியெனின், ஐரோப்பாவின் மக்களெல்லாம் தேசத்துக்காகவோ அல்லது உறவின் முறையார் என்பதற்காகவோதான் ஒற்றுமையாயிருக்கின்றனர். இவ்வாறாய ஒற்றுமை ஓர் எல்லைவரைதா னிருக்கும் என்பதை நாம் சொல்லவேண்டுவதின்று. எனவே, இதரர்க ளெல்லாரும் இவர்களுக்குப் பகைவர்களேபோல் காணப்படுவது சகஜமே. இதன் பயனைத்தான் ஐரோப்பாவின்கண் இலக்ஷக் கணக்கான கூட்டுச் சமூகங்கள் இதுசமயம் உண்டாய்க் கிடக்கின்றன. இவ்வாறிருந்தும் இதுசமயம் இங்கிலீஷ்காரர்கள் ஜெர்மானியருடன் யுத்தஞ்செய்ய நாடுகின்றார்களில்லை. ஆனால், இங்கிலாந்தே அந்த ஜெர்மானியுடன் மல்லாடிக்கொண் டிருக்கின்றது.

எனவே, தேசியத்தினாலோ, அல்லது உறவின் முறையாரென்னும் பந்துத்துவத்தினாலோ உலக மன்பதைகளெல்லாம் ஒருங்கே ஒன்றுசேர்ந்து ஒற்றுமையுடனிருப்பார்கள் என்பது ஒருபோதும் முடியாது. ஆகையால்தான் எமது இஸ்லாம், மானிடர்களெல்லாம் சகோதரர்களாய் விளங்குவது இதர காரணங்களினாலெல்லாம் முடியாதென்று, மார்க்கத்தையே அடிவேராகவும், நடுநாயகமாகவும் நிர்மாணித்து, இதன் பயனைச் சகலரும் ஒற்றுமையாக வேண்டுமென விரும்புகின்றது. ஆகவே, எத்தேசத்தவ ராயினும், எந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்க ளாயினும், எந்நிறமுடையவராயினும் அதைப்பற்றி யொன்றும் கவலை

யில்லை. இஸ்லாமென்னும் உயரிய சாந்தி மதத்தை ஒருவன் கைக்கொண்டு விடுவானாயின், நிச்சயமாக அவன் எவ்விதப் பாகுபாடுமின்றி இஸ்லாத்தின் சோதரத்துவத்துள் நுழைந்து விடுகின்றான். இதனால் தான் எமது குர்ஆனில் ஆண்டவன்,

"(ஆண்டவன்மீதும், அவனது ரசூலின்மீதும்) நன்னம்பிக்கை கொண்டவர்க ளெல்லாம் சோதரர்க ளாவர்," என்றும், எம்பிரான்ஸல் அவர்கள்,

"மூமின்களெல்லாம் தங்களுக்குள் உதவிசெய்யும் விஷயத்திலும், தயாளமாய் நடந்து கொள்வதிலும் ஒரே உடம்பேபோ லிருக்கின்றனர். (உடம்பின்) ஓர் அவயவம் கஷ்டப்படுமாயின், அதன் மற்ற அவய வங்களும் சேர்ந்து ஜுரத்தினாலோ, நோவினாலோ கஷ் டப்படுகின்றன," என்றும், பின்னும் எம்பிரானவர்கள்,

"ஒரு மூமினானவன் மற்றொரு மூமினானவனுக்கு, சுவரில் காணப்படும் கற்களுள் சிலவற்றை மற்றும் சில பற்றிக்கொண் டிருப்பதேபோல் (உதவியாளனாய்) இருக்கின்றான்," என்றும், மேலுமவர்கள்,

"ஒரு முஸ்லிம் மற்றொருமுஸ்லிமுக்குச் சோதரனா யிருக்கின்றான். (எனவே) அவனுக்கு அநியாயம் செய்யமாட்டான், அன்றியும், உதவி செய்யாமலு மிரான்," என்றும், இன்னமுமவர்கள்,

"ஒவ்வொரு முஸ்லிமின் இரத்தத்தையும் அநு வசியமாய் ஓட்டுவதும், அவன் சொத்துக்களை அப கரித்துக் கொள்வதும், அவனது மரியாதையைப் போக்குவதும் மற்ற முஸ்லிம்களின்மீது ஆகாத கரு மங்களா யிருக்கின்றன," என்றும், மேலு மவர்களே,

"உன்னுடைய சோதரன் அநியாயத்துக் குட் பட்டவனாகவோ, அல்லது அநியாயக் காரனாகவோ எப்படி யிருப்பினும், அவனுக்கு உதவி செய்வீராக," என்றும் திருவாய் மலர்ந்தருளி யுள்ளார்கள்.



மேலே சொன்ன இவ்விறுதித் திருவாக்கியத்தை நாயக மவர்கள் திருவுள மாயவுடன், அங்கிருந்த ஒரு சஹாபி, "ஏ நாயகமே! அக்கிரமத் துள்ளானவனுக்கு உதவி செய்யவேண்டியது சரிதான். ஆனால், அக்கிர மம் செய்யும் அவனுக்கு எவ்வாறு உதவி செய்வது?" என்று வினவ, எம்பிரான்ஸல் அவர்கள், "அக்கிரமம் செய்யாமல் தடுப்பதே இவனுக்குச் செய்யும் உதவி யாகும்" என்று மறுமொழி சொன்னார்கள். மேலும் இஸ்லாமிய வர்க்கத்தினர் ஒற்றுமை சம்பந்தமாய் நபி கள் திலகமவர்கள் என்ன சொல்லி யிருக்கின்றார்க ளெனின்,

"என்னைச் சார்ந்த உம்மத்துக்களை வழிக்கேட்டின் மீது அல்லா(ஹ்) ஒன்று சேர்க்க மாட்டான்; அல் லா(ஹ்)வின் (உதவியென்னும்) கை கூட்டத்தினரின்மீ திருக்கின்றது; தனியே பிரிந்து சென்றவன் நரகில் தனியே ஆவான்," என்பதே.—(திர்மதீ)

"என்னைச் சார்ந்த உம்மத்துக்கள் 73 கூட்டங்க ளாய்ப் பிரிந்து விடுவார்; 72 கூட்டங்கள் நரகிலும், ஒரே கூட்டம் சுவர்க்க லோகத்திலும் போய்ச் சேரு வார்கள். இவர்கள்தாம் (உண்மையான நல்ல நேர்மை யான) கூட்டத்தினர்."

இஃதே போன்ற இன்னமு மனேக நாயக வாக் கியங்களால் "அஹ்லுஸ் ஸுன்னதி வல் ஜமாஅதி" என்னும் இச்சொற்களின் விவரம் நன்கு விளங்கக் கிடக்கின்றது.

* * *

இஸ்லாத்துக்குள் காணப்படும் 'சுன்னத், ஜமாஅத்' என்பனவற்றுள் முதன் முதலாய் ஜமாஅத் என்பதன் அஸ்திபாரந்தான் உடைந்தது; இவ்வாறு உடைந்து அனேக பிரிவுகளாய் முஸ்லிம்கள் பிளவுபட்டு விட்டனர். அன்றியும், இப் பிரிவுகள் மார்க்க சம்பந்தமாக உண்டாகாமல் அரசாங்க விஷயமாகவே பிரிந்தன. இஸ்லாம் தன்னுடைய ஒரே நிலைமையினின்று உதுமானியா, சபாயியா வென்னும் இரண்டு விதமான கூட்டங்களாக ஆதியில் பிரிந்தன. இதன் விவரமெப்படி யென்பதையும் சிறிது கவனிப்பீர்களாக:—

இவ்விரண்டு பிரிவினையும் சஹாபாக்களுடைய இறுதிக் காலத்திலேயே உண்டாய்விட்டன. நாயகம்[ஸல்] அவர்களின் மூன்றாம் கலீபாவான உதுமான்[ரலி] அவர்கள் அரசு செலுத்தி வந்தபோது, அக்காலத்திலுண்டான சிலர், இவர்கள் சரியானபடி நீதி பரிபாலனம் செய்யவில்லை யென்றும், எனவே இவர்கள் கிலாபத்துக்கு லாயிக்கானவர்களா யில்லை யென்றும் சொல்லி வந்தனர். இவர்களல்லாது வேறு சிலர் இவர்களுக் கெதிரியாய் உதுமான்[ரலி] அவர்கள் செய்யும் அரசாட்சியே சிரேஷ்டமான தென்றும், மேலான தென்றும் முழுதும் ஆதரித்துக்கொண் டிருந்தனர். எனவே, உதுமான்[ரலி] அவர்களை ஆதரிப்பவர்கள் உதுமானியாக்க ளென்றும், இவர்களுக் கெதிராய் நின்றவர்கள் சபாயியாக்களென்றும் சொல்லிக்கொண்டு வந்தனர். (இப்னுஸபா வென்னும் ஒரு யூதன் நவ் முஸ்லிமா யிருந்தான். எனவே, இவன்தான் உதுமான்[ரலி] அவர்களுக் கெதிரியாய் நிற்பவர்களை யெல்லாம் ஒன்று



சேர்த்து அன்னவர்களுக்குத் தலைவனாகவு மிருந்தான். இதனால்தான், இவனைச் சார்ந்தவர்கள் சபாயியாக்களென அழைக்கப் படுகின்றனர்.)

உதுமானியா வென்னும் கூட்டத்தின ரெல்லாம் அரபிகளாகவே காணப்பட்டனர். ஆனால், சபாயியாக்களுள் அரபிகளும், அரபிகளல்லாத அஜமிகளும் கலந்தவர்களா யிருந்துவந்தனர். இதுவுமல்லாமல் இவ்விருவர்களின் இயற்கைச் சுபாவ குணங்களே ஒன்றுக்கொன்று மாறுபட்டிருந்தன. அரபிகள் தங்கள் மனத்துக்குப் பிடிக்காவிடின், வாளை எடுத்துக்கொள்ளும் குணங்களைக் குடிகொண்டவர்களா யிருந்தனர். அரபியல்லாதவர்களோ சகல காரியங்களையும் வாய்ப்பேச்சினாலேயே முடித்துக் கொள்ளும் ஸ்வபாவங்களைக் கொண்டவர்களா யிருந்தனர். இதன் பயனாய் இந்த சபாயியாக்க ளென்னும் வகுப்பானது ஒரு சில யுத்தங்களுக்குப் பின் இரண்டு பிரிவுகளாய், அலவிய்யா (அலீயைச் சேர்ந்தவர்கள்—ஷீஆ) வென்றும், காரிஜிய்யா வென்றும் நாமம் பூண்டு வெளிக் கிளம்பிற்று. ஆனால், காரிஜிய்யா வென்னும் இக் கூட்டத்தினரை ஆதியில் ஹரூரிய்யா வென்னும் நாமங்கொண்டே அழைத்துக் கொண்டிருந்தனர். (ஏனெனின், ஹரூர் என்னும் ஒரு ஸ்தல மிருக்கின்றது; அங்கிருந்தே காரிஜிய்யா வென்னும் இக் கூட்டத்தினர் முதன்முதலாகக் கிளம்பினர். எனவே, ஹரூரிய்யா வென்று இவர்கள் அழைக்கப்பட்டனர்.) இவர்க ளெல்லாம் பூராவாக அரபிகளா யிருந்துவந்தனர். எனவே, இவர்கள் சொல்லும் ஒவ்வொரு விஷயத்தையும் கத்தியின் பலத்தினால் கட்டாயம் ஒப்புக்கொண்டே தீரவேண்டு

மெனச் சில நூற்றாண்டு வரை மக்களைக் கஷ்டப்படுத்திக் கொண்டிருந்தனர். இவர்கள் எக்காலத்திலும் முஸ்லிம் கலீபாக்களுக்குத் தலைசாய்த்து நடக்கவே யில்லை.

அலவிய்யா வென்னும் கூட்டத்தினருள் அரபிகள் மிகச் சிலராகவே யிருந்துவந்தனர்; அரபியல்லாத அஜமிகள்தாம் இதில் அதிகமா யிருந்தனர். ஆகையால், இந்த அஜமிகள் தங்களுடைய ஒவ்வொரு காரியத்தையும் வாய்ப்பேச்சினாலும், தந்திரங்களினாலுமே சாதித்துக்கொண்டு வந்தனர். அரபிகள் தங்களது பூர்விக குணத்தின்படியே ஊக்கந் தளராம லிருந்து வந்தனர். இந்த அலவீ வகுப்பார்களுள் சில அன்ஸாரிய்யீன்களு மிருந்தனர். ஆதலால், நாயக வாக்கியங்களைக் கூறும் முஹத்திதீன்கள் இதில் அதிகமா யிருந்துவந்தனர். இவ்வளவுடன் நில்லாது, இவர்கள் ஹஜரத் உதுமான்[ரலி] அவர்களைவிட ஹஜரத் அலீ[ரலி] அவர்களே மகா மேலானவர்க ளெனவும் எண்ணிக் கொண் டிருந்தனர்.

உதுமானியா என்னும் அக்கூட்டத்தினர் பனூ உமையாக்களின் காலமான ஒரு நூற்றாண்டுவரை நீடித்துக்கொண் டிருந்தனர். இதில் சில பெரிய சஹாபாக்களும் முஹத்திதீன்களு மில்லாமலில்லை. அஸ்மாவுர் ரிஜால்க ளென்ற ஹதீதின் மூலப் புருஷர்களையும், அவற்றின் கோவையையும் கவனிக்கப் புகும்போது, அவர்களிற் சில பெரிய முஹத்திதீன்கள் உதுமானியாக்களாகவும், சிலர் அலவிய்யாக்களாகவும் தென்படுகின்றனர். ஆனால், பனூ உமையாக்களின் வீழ்ச்சிக்குப்பின் இன்னவர்களின் நாமமே காணப்படவில்லை.



மேலே சொல்லப்பட்டு வந்த இக்கூட்டத்தினர்கள் தங்களுக்குள் தேசத்தைப் பங்குபோட்டு எடுத்துக் கொண்டனர். எனவே, உதுமானியா வென்னும் வர்க்கத்தினர் ஷாம்தேசத்திலும், அலவிய்யா ஹாரூரிய்யா இராக் தேசத்திலும், அஹ்லுஸ் ஸுன்னத் ஹிஜாஜிலும் காலங்கடத்தி வந்தார்கள்; மேலும் ஆதியில் உதுமானியாவுக்கும் அலவிய்யாவுக்கு மிடையே அபிப்பிராயபேத மென்னவெனின், உதுமானியா வென்பவர்கள் ஹஜரத்அலீ[ரலி] அவர்களைவிட உதுமான்[ரலி] அவர்களே மேலானவர்களென எண்ணிக்கொண் டிருந்தனர். அலவிய்யாக்களோ இதற்கு விரோதமான எண்ணமுடையவர்களா யிருந்துவந்தனர். ஆனால், இவ்விரு வர்க்கத்தினர்களும் "ஷைகைன்" என்று கொள்ளப்படும் ஹஜரத் அபூபக்ர் உமர்[ரலி] இருவர்களும் மேலானவர்கள் தாமென ஒத்துக் கொண்டிருந்தனர். காலம் செல்லச் செல்ல உதுமானியர்கள் (நவூதுபில்லா) ஹஜரத் அலீ[ரலி] அவர்களைத் தூஷணை செய்யத் தலைப்பட்டு, நாஸிபிய்யாவென்னும் கூட்டத்தினர்க ளெனச் சொல்லப்பட்டனர். ஆகையால் அதனைத் தடுக்கவேண்டியது அத்தியாவசியமாயிற்று. இதன் பயனாய் ஹஜரத் அலீ[ரலி] அவர்கள் தாம் மேலானவர்களெனச் சொல்லிக் கொண்டிருந்த அலவீ கூட்டத்தினர்கள், ஹஜரத் உதுமானவர்களைச் சேர்த்துக்கொண்டு பொதுவாக, பனூ உமையாக்கள் மீது மாத்திரம் நிந்தனை சொல்லாது, முந்திய மேலான இரண்டு கலீபாக்களையும் சேர்த்து நிந்திக்கத் தலைப்பட்டனர். எனினும், சிறிது கவனிக்குமிடத்து, இந்த அலவிய்யாக்கள் நெடுங்காலத்துக்குப் பின்னரே இவ்

வாறான துஷ்டமார்க்கத்தி லிறங்கினார்கள் என்பது தெரிய வருகின்றது. ஏனெனின், பனூ உமையாக்களின் கெட்ட எண்ணங்களேயும், காரிஜிய்யாக்களின் துஷ்ட மனோபாவங்களேயும் மேன்மை தங்கிய ஸஹாபாக்களே நேரில் கண்டனம்பண்ணி யிருக்கின்றதாக ஸஹீஹ் ஸித்தாக்களான ஹதீது கிரந்தங்களில் காணக் கிடக்கின்றது. ஆனால், அலவிய்யாக்கள் சம்பந்தமாக ஸஹாபாக்கள் எங்கேனும் ஒரு வார்த்தையேனும் சொல்லியிருக்கின்றார்களா வென்றால், அஃதொன்றையும் யான் கண்டுகொள்ள வில்லை.

இம்மாதிரியாகப் பிரிவினையை உண்டுபண்ணிக் கொண்ட வகுப்பார்கள் ராஜீய சம்பந்தமாக மாத்திரம் நில்லாது, மார்க்க சம்பந்தமாகவும் அபிப்பிராய பேதங் கொள்ளத் தலைப்பட்டு அதற்குரிய அஸ்திபாரத்தையும் நிலை நாட்டினார்கள் என்பதை ஏற்கெனவே தெரிந்து கொண் டிருக்கின்றீர்கள். எனவே, இவர்களுள் முதன் முதலாக அபிப்பிராய பேதமேற்பட்ட தெவ்வாறெனின், ஜமல், ஸிப்பீன் முதலிய யுத்தங்களில் கலந்துகொண்டவர்களுள், அல்லாஹுத் தஆலாவின், "அக்கிரமமாக ஒரு மூமினானவனை ஒருவன் கொல்லுவானாயின், அவனுடைய தண்டனையானது எப்பொழுதும் நரகலோகத்தில் ஸ்திரப்பட் டிருப்பதாகும்" (4:93) என்னும் இவ்வாக்கியத்துக்குப் பொருத்தமானவர்கள் யார்? இதினின்றும் அப்புறப்பட்டுப் பரிசுத்தமானவர்கள் யார்? என்று வாக்குவாதம் செய்துகொண்டு அனுவசியமாக அபிப்பிராய பேதங் கொண்டவர்களாய் நின்றார்கள்.

இம்மாதிரியான விதண்டா வாதங்கள் முதன்



முதலாகக் கூபாவினின்றுமே உண்டாயிற்று. அது சமயம் சில ஸஹாபாக்கள் இவ்வுலகினில் ஜீவித்துக் கொண்டிருந்தனர். எனவே, அவர்களிடம் சென்று இதன் சம்பந்தமாய், மேலே கூறப்பட்ட (4:93) அவ்வாக்கியம் மாற்றப்பட்டுவிட்டதா? என வினவினார்கள். இதற்கவர்கள் குர்ஆனின் இவ்வாக்கியம் மாற்றப்படவில்லை. ஆனால், இவ் வாக்கியம் இறுதியில் வெளியான குர்ஆன் வாக்கியங்களுள் உள்ளதாயிருக்கிறதென விடையிறுத்தார்கள். எனவே, இவ் வாக்கியத்தை உணர்ந்தவர்களா யிருந்தும், யுத்தம் செய்வான்வேண்டிப் புறப்பட்ட இரு சாரார்களும் நரகத்தைச் சார்ந்தவர்களென காரிஜிய்யாக்கள் கூறிக்கொண்டிருக்கின்றனர். இதனுடன் நில்லாது, இந்த காரிஜிய்யாக்கள், 'ஆண்டவனது ஆணையை உணர்ந்துகொண்டு, அவனது வாக்கியத்துக்கு நேர்விரோதமாக மூமின்களைக் கொல்லுவதற்காகப் புறப்பட்ட இருசாரார்களும் காபிர்களே. இதனால்தான் நீடித்த காலம் நரகத்தில் காபிர்களை வேதனை செய்வேன் என்று அச்சமூட்டுவதேபோல், மூமின்களைக் கொன்ற இன்னவர்களுக்கும் நீண்டகாலம் நரகத்திலிருக்க வேண்டிவருமென ஆண்டவன் அச்சமூட்டி எச்சரிக்கை செய்திருக்கின்றான். மேலும், இம்மாதிரியான பெரும் பாபம் செய்பவர்களெல்லாம் மூமின்களா யிருத்தல் முடியாது,' என்பனபோன்ற வார்த்தைகளைச் சொல்லிக்கொண் டிருந்தனர். இந்த ஆயத்தின் கருத்தைக் கவனிக்கும்போது, சர்வ சாதாரணமாக இவர்கள் சொல்வது சரியென்றே ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிருந்தது.

இதன்பயனாக இன்னார் தாம் சொல்வதுதான் சரியென்று பொதுமக்களை ஏமாற்றிவந்தார்கள். இதையுணர்ந்த சில மனிதர்கள் இவர்கள் சொல்லும் அபிப்பிராயமேதான் உண்மையானதெனக் கொண்டு காரிஜீகளாய் மாறிவிட்டனர் என்று 'முஸ்லிமில்' ஒரு விஷயம் காணப்படுகின்றது. அதுசமயம் எதிர்பாரா வண்ணம் ஹஜ்ஜுடைய காலம் வந்தது. எனவே, இவர்கள் மக்காவுக்குச் சென்று ஹஜ்ஜு செய்து கொண்டு மதீனாவுக்குச் சென்றார்கள். ஆங்குப் பிராபல்ய ஸஹாபியாய ஜாபிர் பின் அப்துல்லா வென்னும் பெரியார் தம்முடைய சிஷ்யகோடிகளுக்குப் பாடம் கற்பித்துக்கொண் டிருந்தார்கள். அவர்களைக் கண்டவுடன் காரிஜிய்யாக்கள் தங்கள் சந்தேகத்தை அவர்கள் முன் எடுத்தோதினார்கள். இதைக் கேட்டவுடன் அவர்களுடைய சந்தேகத்தை இவர்கள் நிவாரணம் பண்ணினார்கள். ஆகையால், இந்த காரிஜிய்யாக்களுள் ஒருவரை விட்டு மற்றையோரெல்லாம் தாங்கள் முன் எண்ணிக்கொண் டிருந்ததெல்லாம் தவறென்பதை நன்குணர்ந்து கொண்டு தவ்பா செய்தார்கள்.

இவர்களுக்கு மாத்திரம்தான் குர்ஆனிலிருந்து ஓர் ஆயத்துக் கிடைத்தது; அதன் பயனாய்ச் சந்தேகமுண்டாயிற்றென் றெண்ணிவிட வேண்டாம். இவர்களுடைய எதிரிகளும் தாங்கள் கூறுவதுதான் சரியென்று கூறிக்கொண்டு பின்கண்ட குர்ஆன் வாக்கியத்தை ஆதாரமாகக் கொண்டிருந்தனர்:—

"மூமினானவர்களுள் இரண்டு கூட்டத்தினர் சண்டையிட்டுக் கொள்வார்களாயின், இவ்விருவர்களிடையே சமாதானத்தை உண்டுபண்ணி வையுங்கள்.



(இல்லை) ஒரு கூட்டத்தார் மற்றொன்றின்மீது அக்கிரமம் செய்துகொண்டே யிருப்பாராயின், அக்கிரமம் செய்துகொண் டிருக்கும் இக் கூட்டத்தினர் ஆண்டவன் ஆணையின் பக்கல் வந்து சேரும்வரை நீங்கள் அவர்களுடன் மல்லாடுங்கள்—" குர்ஆன். (49:9)

எனவே, அலவிய்யாக்களும், உதுமானிய்யாக்களும் தங்களுக்கு மேலே சொல்லிய இவ்வாயத்து ஒன்றே ஆதாரமென்றும் கூறி, ஒவ்வொருவரும் தாங்கள் சொல்வதுதான் உண்மையானதென்றும் எதிர்சாரார் நேரான முறையி லில்லையென்றும் இருவரும் விவாதித்து நின்றனர்.

மேலே சொல்லப்பட்டு வந்ததிலிருந்து விஷயத்தை ஒரு சிறிது உணர்ந்து கொண்டிருப்பீர்கள். எனவே, இனி அஹ்லுஸ் ஸுன்னதி வல்ஜமாஅத்தின் தாத்பரியமென்ன வென்பதைச் சிறிது ஆராய்வாம். கவனிப்பீர்களாக. உதுமான் ரலி அவர்கள் காலத்தில் உண்டான கலகத்திலிருந்து இதுவரை அலவிய்யா, உதுமானிய்யா, ஹரூரிய்யா (அல்லது காரிஜிய்யா) வென்னும் இம் மூன்று கூட்டங்களும் தேசத்தின் எல்லாத் திசைகளிலும் பரந்து மட்டிலடங்காதனவாய்க் கிடந்தன. மேலும் இம்மூன்று கூட்டங்களும் இஸ்லாத்தின் மூலக் கொள்கைகளான எந்த ஸிராத்துல் முஸ்தகீமான நேரான பாதையினின்றும், சரியான சன்மார்க்கத்தினின்றும், முக்கிய மூல அஸ்திபாரத்தினின்றும் நெடுந்தூரம் விலகிச்சென்று கிடந்தனரோ அதற்குத்தான் ஸுன்னத்தென்றும், ஜமாஅத்தென்றும் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. இதன்படி அப்படியே ஒழுகிச்செல்லும் அம் மனிதர்களே அஹ்லுஸ்

ஸுன்னதி வல்ஜமாஅதி என்று சொல்லிக் கொள்ள லாயிக்கானவர்களா யிருந்தார்கள். மேலு மிவர்கள் மார்க்க விஷயத்தில் நாயகம்[ஸல்] அவர்களுடைய போதனை எங்ஙன மிருந்ததோ அதினின்றும் ஒரு சிறிதும் அகன்றுபோகா மலிருந்தனர். அன்றியும், இவர்கள் இராஜீயவிஷயத்தில், அதிகமான ஸஹாபாக்களின் கூட்டம் எவ்வாறு அபிப்பிராயங் கொண்டிருந்தனரோ அவ்வாறே இவர்களும் நடந்துகொண்டனர். எனவே, இவ்வுட் சண்டைகளுள் கலந்துகொண்டவர்களுள் சிலர், அமீர் முஆவியா[ரலி] அவர்களை ஆதரித்து வந்தனர். இவர்கள்தாம் உதுமானிய்யாக்கள். மற்றுஞ் சிலர் அலீ[ரலி] அவர்களை ஆதரித்து வந்தனர்; இவர்கள்தாம் அலவீகளென்னப் படுபவர்கள். வேறு சிலர் மேலே கூறப்பட்ட இரு பிரிவினர்களையும் கொடியவர்களென எண்ணிக் கொண்டிருந்தனர். இவர்கள் ஹரூரிய்யா, அல்லது கவாரிஜுகள் என்று அழைக்கப்பட்டு வருகின்றனர். இதனிடையே ஸுன்னத் ஜமாஅத்தார்கள் யாரென்றால், மேலே சொல்லிவந்த உதுமானிய்யா, அலவிய்யாக்களுள் யாரையும் தூஷணை செய்யாதவர்களும், ஜமல் ஸிப்பீன் போன்ற இடங்களில் சென்று யுத்தம் செய்தவர்களின் அசல் எண்ணம் எவ்வாறிருந்தது? அன்னவருள் யார் நல்லவர்கள்? யார் தூர்த்தர்கள்? என்பன போன்ற விஷயங்களில் தலை யிடாமல் ஒதுங்கி ஒரு பக்கமா யிருந்தவர்களு மாவார்கள். எனவே, இதன் பயனாக, மேற் குறிப்பிட்டபடி ஒரு கூட்டத்திலும் சேர்ந்துகொள்ளாமல் நடு நிலைமையாக நின்ற இக் கூட்டமேதான் ஸுன்னத்வல் ஜமாஅத்தார்களென்று



அழைக்கப்பட்டு வந்தது. ஒருதலைப்பக்ஷமா யிருந்தவர்களல்ல. மேலும் இவ்வுட் சண்டையை ஸுன்னத் ஜமாஅத்தார், மார்க்கச் சண்டை யன்று, இராஜீயச் சண்டை யென்றே எண்ணி வந்தனர். மேலு மிவர்கள் இம்மாதிரியான விதண்டா வாதச் சண்டைகளில் கலந்துகொள்வது மஹா கொடியதெனவே எண்ணி வந்தனர்.

மேலே கூறப்பட்ட அதுசமயம் ஆயிரக் கணக்கான ஸஹாபாக்கள் ஜீவித்து வந்தனர். ஆனால், இச் சண்டைகளிலும் சச்சரவுகளிலும் எத்தனை ஸஹாபாக்கள் கலந்துகொண்டிருந்தனர் என்பதைக் கவனிக்கப் புகுவோமாயின், மிகச் சிலரையே அதில் கண்டுகொள்ளுகின்றோம். பொதுவாகக் கவனிக்குமிடத்து, எல்லா ஸஹாபாக்களும் அச் சண்டைகளில் கலந்துகொள்ளவில்லை யென்றே சொல்வது மிகையாகாது. மேலும் அக் கலகத்தில் கலந்துகொண்ட ஒரு சில ஸஹாபிகள், எதிரில் காணப்படும் முஸ்லிம்களைக் காபிர்களென்றோ பாஸிக்குகளென்றோ (நவூதுபில்லா) எண்ணினார்களில்லை. (எனினும், முஸ்லிம்கள் அதுசமயம் ஒருவிதக் கஷ்டத்துள்ளாக்கப்பட்டு, ஆண்டவனால் சோதிக்கப்பட்டனர் என்றே எண்ணிக்கொண்டிருந்தனர். உதாஹரணமாக,) அம்மார் பின் யாஸிர்[ரலி] அவர்கள் ஹஜரத் அலீ அவர்களையே மிகவாக ஆதரித்து வந்தார்கள். இதனால் ஹஜரத் ஆயிஷா[ரலி] அவர்களின் சைன்னியங்களுக்கு எதிரிடையாய் யுத்தவீரர்களைக் கூபாவின்கண் திரட்டும் சமயம் என்ன சொல்லிக்கொண் டிருந்தாரென்பதைக் கவனிப்பீர்களாக:—

“நிச்சயமாகவே ஹஜரத் ஆயிஷா[ரலி] அவர்கள்,

இவ்வுலகினில் நாயகம்[ஸல்] அவர்களின் மனைவியா யிருக்கின்றார்கள்; மறு உலகிலும் நாயக மவர்களுடைய மனைவியா யிருக்கலா மென்பதை நான் நன்கறிவேன். ஆனால், இது சமயம் நீங்கள் ஆயிஷா[ரலி] அவர்களை ஆதரிக்கப் போகின்றீர்களா? அல்லது அலீ[ரலி] அவர்கள் பக்கம் சேரப் போகின்றீர்களா? வென்பதை அல்லா(ஹ்) பரிசோதனை செய்கின்றான்."

இதுமட்டுமா? இச்சண்டையின் முடிவில் ஹஜரத் ஜுபைர்[ரலி] அவர்களின் சிரசு துண்டிக்கப்பட்டு, ஹஜரத் அலீ[ரலி] அவர்கள் வசம் கொணரப் பட்டது. இதைக் கண்டதும் அலீ[ரலி] அவர்கள், ஜுபைரைக் கொன்ற கொலைப்பாதகனை இப்னு ஸபிய்யா நரக லோகத்தையே அடைவான் என்று கூறியதுடன் நில்லாது, நாங்கள் யார் தெரியுமா? எங்கள் விஷயமாகவே தான் எமதாண்டவன் தனது திருமறையில், "அவர்களின் மனத்துக்குள் காணப்பட்ட பொறாமையை நாம் நீக்கிவிட்டோம். (மேலு மவர்கள் சுவன பதியில்) சோதரர்களாய் எதிருக் கெதிராய்ச் சிம்மாசனங்களி லமர்ந்திருப்பார்கள்," என்று அறிவித்திருக்கின்றான், என்று கூறி இவ்வாறு கொலை செய்வது மகா கொடிய காரியமெனக் கண்டித்தார்கள்.

இதுவுமல்லாமல் அமீர் முஆவியாவுக்கு ஹஜரத் அலீ[ரலி]யுடன் இராஜீய விஷயமாக எத்துணை விரோத மிருந்த தென்பதை நாம் நுங்களுக்குச் சொல்லவேண்டுவதின்று. இவ்வாறிருந்தும் மார்க்கச் சட்ட சம்பந்தமாக ஏதேனும் அவசியம் ஏற்பட்டு விடுமாயின், ஹஜரத்அலீ[ரலி] அவர்களிடம் முஆவியா வரும்படி யாகவேயிருந்து வந்தது. ஹஜரத் ஆயிஷா[ரலி] அவர்கள் ஹஜ



ரத் அலீ[ரலி] அவர்களுக்கு விரோதமாக யுத்தம் செய்வான் வேண்டிப் படைகளைத் திரட்டிக்கொண்டு வந்தார்க ளெனினும், மார்க்க சம்பந்தமாக ஏதேனுமோர் விஷயம் சொல்லவேண்டு மாயின், ஹஜரத் அலீ[ரலி] அவர்களை மேலானவர்க ளென்றே ஏற்றுக்கொண்டிருந்தனர்.—"முஸ்லிம்"

மேலே சொல்லிக்கொண்டு வந்ததிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டிய தென்னவெனின், இந்தச் சண்டைகளில் சில ஸஹாபாக்களான உன்னத மஹான்கள் கலந்துகொண் டிருந்தார்க ளெனினும், அதன்பயனாக விரோதப் பான்மையான பிரிவினைகளை உண்டுபண்ண வேண்டுமென்று நாடினார்க ளில்லையென்பதேயாம். ஆனால், இதனைத் தங்களுக்கிடையே ஏற்பட்ட ஓர் அபிப்பிராய பேதமான விஷயமென்றே கொண்டிருந்தனர். எனவே, (ஸுன்னத் வல் ஜமாஅத் தென்னும்) பெரிய கூட்டத்தினர் இம்மாதிரியான சண்டைகள், ஆராய்ச்சியின் பயனாக ஏற்பட்ட தவறுதல்களேயன்றி, வேண்டுமென்றே அவர்கள் செய்த தவறன்றென்றும் கூறுகின்றனர். இதனுடன் நில்லாது அலவிய்யாக்களும், உதுமானிய்யாக்களும் காட்டிய ஆண்டவனின் திரு வாக்கியத்தைப் பூராவாகவும் இவர்கள் காட்டுகின்றனர். அஃதென்ன வெனின்:—

"மூமின்களுள் இரண்டு கூட்டத்தவர்கள் தங்களுள் சண்டையிட்டுக் கொள்வார்க ளாயின், அவ்விருவர்களிடையே சமாதானம் செய்து வையுங்கள். (இல்லை) அவர்களிருவருள் ஒருவர் மற்றொருவரின் மீது அக்கிரமம் செய்வாராயின், அக்கிரமம் செய்துகொண்டிருக்கும் அவர்கள் ஆண்டவனது ஆணையின்

பக்கல் வந்து சேரும்வரை அவர்களுடன் மல்லாடுங்கள். (இதன்பின்) இவர்கள் (அக்கிரமத்தி னின்றும்) விலகிக் கொள்வார்களாயின், அவர்களிடையே நியாயமாகவும், நீதியாகவும் சமாதானம் செய்து வையுங்கள். நிச்சயமாகவே அல்லா(ஹ்) நீதிமான்களை நேசிக்கின்றான். மூமின்க ளெல்லாரும் சோதரர்களாவர். எனவே, நீங்கள் உங்கள் சோதரர்க ளிடையே சமாதானத்தை நிலவும்படி செய்யுங்கள். நீங்கள் அருள் பாலிக்கப்படுவான் வேண்டி அல்லா(ஹ்)வுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள்.''—(49:9,10)

(இவ்வாக்கியத்தைக்கூறி, ஸுன்னத்வல் ஜமாஅத்தென்னும் பெரிய வர்க்கத்தினர், ஸஹாபாக்களின் காலத்தில் நடந்த யுத்தத்தில் சம்பந்தப்பட்ட எவ்வகுப்பாரையும் கெட்ட வார்த்தைகளைக் கொண்டு ஞாபகப்படுத்தாதிருப்பதே மேலெனக் கூறுகின்றனர். இஃது ஒரு பக்கல் கிடக்க.) அச் சண்டையில் கலந்துகொள்ளாது ஒதுங்கிநின்ற ஸஹாபாக்கள் இஸ்லாத்தின் இழிவுகாலத்தைப்பற்றி அவர்கள் கூறிக்கொண்டிருக்கும் பரிதாபகரமான வார்த்தைகளையும், மேலும் எம்பிரான்[ஸல்] அவர்களுடைய திருவாக்கியங்களையும் உபதேசங்களையும் எத்துணை விசாரத்துடனும் கைசேதத்துடனும் கூறிவந்தார்களோ அப்படிச் சாற்றும் வார்த்தைகளைக் கவனிக்கும் போது, கண்களினின்றும் தானே தண்ணீர் வழிந்தோடும்படியா யிருக்கின்றது. உதாகரணமாக, ஈரான் தேசத்தைப் பிடித்து இஸ்லாத்தின் கொடியை நாட்டிய ஹஜ்ரத் ஸஃதுப்னு அபீவக்காஸ்[ரலி] அவர்கள் வெளிவாரது வீடடங்கி அதுசமயம் காலங்கடத்தினர். மேலுமிவர்கள், 'யாரேனும் என்



வீட்டில் வந்து நுழைந்து வாளால் என்னைக் கொலை செய்யினும் யானொன்றும் அவரைத் துன்பப்படுத்தக் கையை உயர்த்தப் போவதில்லை,' என்றும் கூறிக் கொண் டிருந்தனர். ஸஹ்ல் பின் ஹனீப்[ரலி] அவர்களை நோக்கி, "நீங்களேன் இந்த யுத்தத்தில் கலந்து கொள்ளவில்லை?'' என்று ஒருவர் வினவியபோது, "என்னுடைய வாளை (ஒரு காலத்தில்) உறையினின்றும் வெளியாக்கித் தோளின்மீது வைத்துக்கொண்டு விடுவேனாயின், கஷ்டமான எல்லா விஷயங்களும் தீர்ந்துவிட்டனவென்றே எண்ணிக்கொள்ளுவேன். ஆனால், இதுசமயம் என்ன செய்வதென்று ஒன்றும் தெரியாமல் திகைத்து நிற்கின்றேன்,'' எனக் கூறினார்கள். இவ்வண்ணமே ஹஜ்ரத் அலீ[ரலி] அவர்கள் தங்களுடன் ஒரு பெரியாரைச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று வேண்டிய போது, அவர் "ஏ சோதர! தங்களின் சிறிய தந்தையாரின் குமாரரான சோதரர் ரசூலுல்லா[ஸல்] என்னிடம் சொன்னதாவது, இம்மாதிரியான சமயம் வருமாயின் விறகினுலான வாளை வைத்துக்கொள்ளவேண்டும். இவ்வாறு சொல்லி யிருக்கின்றார்கள். எனவே, விறகினுலான கத்தியைக் கொண்டு நான் நடக்கச் சித்தமாயிருக்கிறேன்,'' என விடை யிறுத்தார்கள். இதுவுமல்லாமல் அதே சமயத்தில் ஹஜ்ரத் அபூ மூஸா அஷ்அரீ[ரலி] ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] முதலியவர்கள் என்ன சொன்னார்க ளெனின், "இது எம்மாதிரியான காலமெனின், இதில் உட்கார்ந்திருப்பவனைக் காண உறங்குபவனும், நின்றுகொண் டிருப்பவனை விட உட்கார்ந்திருப்பவனும், நடப்பவனைக் காண நின்றுகொண் டிருப்பவனும், ஓடிக்கொண் டிருப்பவனை விட நடப்பவனும் மேலான

வனு யிருக்கின்ருன்,'' என்று கூறியிருக்கின்றனர்.

அதுசமயம் சில ஸஹாபிகள் தங்கள் இல்லங்களி னின்றும் சிறிய பட்டிக்காடுகளான கிராமங்களுக்கும், வேறு சிலர் மலையடி வாரங்களுக்கும் சென்று விட்ட னர். இன்னமும், சிலர் தங்கள் அபிப்பிராயங்களுக் கொப்ப இரண்டு யுத்தப் படைகளுடனும் சேர்ந்து மிருந்தனர். என்ருலும் அந்த ஸஹாபாக்கள் வாளைக் கையிலேந்தி யுத்தம் செய்தார்க ளென்பது காணப் படவில்லை. இஃதேபோல் இன்னமுமனேக விஷயங் கள் ஹதீது கிரந்தங்களில் காணக்கிடக்கின்றன.

சென்ற பாராவரை "அஹ்லுஸ் ஸுன்னதி வல் ஜமாஅதி'' என்பதன் தாத்பரியத்தைத் தேசிய சம் பந்தமாக ஏற்பட்ட பிரிவினைகளின் பொருட்டால் ஒரு சிறிது உணர்ந்துகொண் டிருக்கிறீர்கள். ஆனுல், இதே "அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமா அத்'' என்னும் சொல் கால மாறுபாட்டால் மற்ருெரு விதமாகவும் மாபெரும் மாறுதலை யடைந்திருக்கின்றது. எனவே, இதையும் தங்கள் முன் சமர்ப்பிக்கின்றேன். கவனிப் பீர்களாக.

இம்மாறுதலைக் கூறுவதற்கு முன் ஒரு சிறிய முக வுரையைக் கூறிவிட வேண்டியது அத்தியாவசிய மாய்க் காணப்படுகின்றது. ஒவ்வொரு மனிதனுக் கும் சில இயற்கையான குணங்களும் இயல்புகளும் இருப்பதேபோல் ஒரு சமூகத்தாருக்கும், வர்க்கத்தின ருக்கும் அப்படியே சில இயற்கைக் குணங்களும் இயல்புகளு மிருக்கின்றன. எனவே, அரபி சமூகத் தினர் தாங்கள் இயற்கையில் நாடிய காரியத்தை அம லில் செய்து காட்டுபவர்களா யிருந்தார்கள். ஈரானியர்



களோ (பர்ஷியர்) தங்களியற்கைப்படி ஒவ்வொருகாரி யத்தையும் தங்கள் நாவினுலும் எண்ணங்களினுலும் சிந் தனையினுலுமே நிறைவேற்றிக் கொள்ளுபவர்களா யிரு ந்தனர். இதுவுமல்லாமல் அரபிகள் ஈரானியர்களுடன் கலந்து கொள்ளாது இருந்த காலம்வரை தாங்கள் கோரிய காரியங்களைச் செயலினுல் செய்து காட்டிக் கொண் டிருந்தார்க ளென்பதை இஸ்லாமின் சரித் திரத்தை உணர்ந்த ஒவ்வொரு மனிதரும் தெரிந்து கொண்டே யிருப்பார். இக்காரணம் பற்றியேதான் முஸ்லிம்கள் இதர வர்க்கத்தாரை முன்மாதிரியாகக் கொண்டு பின்பற்றி நடந்து, செயலில் செய்து காட்டிக் கொண் டிருக்கும் இந்தச் சக்தியை இழந்துவிட வேண்டாமென விலக்கப்பட் டிருக்கிருர்கள். இதுவுமல் லாமல் ஹஜரத் உமர்[ரலி] அவர்கள் ஒரு சமயம் முஸ்லிம் சிபாஹிகளை ஈரான்தேசப் பாதுகாப்பு உத்தியோகங் களுக் கனுப்பும்போது அவ் வுத்தியோகஸ்தர்களை நோக்கி, 'ஈரானியர்களி னின்றும் சுகந்தேடும்படி யான குணங்களை நீங்கள் கற்றுக்கொண்டு விட வேண்டாம். அன்றியும், அன்னவரின் நடை உடை பாவனைகளையும் கற்றுக்கொண்டு அவர்களேபோல் நீங்களும் நடக்கவேண்டாம். இவ்வாறு நடந்து கொள் வதனுல் இஸ்லாத்தில் காணப்படும் வீரியத்தையும், தைரியத்தையும், தீரத்தையும், செய்கையையும் அழித்து விட வேண்டாம்' எனவும் உபதேசம் செய்திருக் கிருர்கள்.

ஈரான் பிடிபட்டதன்பின் அராபியர்களுக்கும் அல்லாதவர்களுக்கு மிடையே எல்லைப்புற ஹத்தை ஏற்படுத்தி ராணுவஸ்தலங்களான கட்டடங்களைக்கட்ட

வேண்டியது அவசியமாயிற்று. எனவே, இதன் பயனாகவே கூபாவும் பஸராவும் பட்டணங்க ளாக்கப்பட்டன. இவ்விரண்டு நகரங்களும் சில நாட்களுக்குள், அங்கு வசித்துக் கொண்டு வரும் மனிதர்கள் அரபிகளுடையவும் அஜமிகளுடையவும் இயற்கைக் குணங்களையும் சமபாகமாகக் கைக்கொண்டு ஒருவித நவீனத் தோற்றத்துக் குரியதாய்க் காணப்பட்டன. இதனுட னில்லாது அதன் சுற்றுப்புறங்களில் பார்ஸீ வகுப்பார்களுள் ஒப்புக்கொள்ளாததும், அரசாங்க மார்க்கத்துக்குப் புறம்பானதுமான நிராகரிக்கப்பட்ட மார்க்கப் பிரஷ்டர்களான பார்ஸீகளும் வசித்து வந்தனர். இன்னவர் அச்சமற்று வசித்து வருவதற்கு இதுவே தகுந்த இடமாயிருந்துவந்தது. அன்றியும் அரபிகள் எல்லைப்புறத்தில் தக்க சைன்னியங்களை வைப்பதற்கும் இந்த ஸ்தலத்தையே சரியானதெனத் தேர்ந்தெடுத்துக்கொண் டிருந்தனர்.

அக்கினிக் காற்றும் நீர் வறக்ஷியுமுள்ள அரப் நாட்டில் ஜனித்துக் கிடந்த அரபிகளுக்கு, தஜ்லா புராத்தென்னும் நதிக்கரைகளில் அமைந்து கிடந்த இந்த இராக் பகுதியானது ஓர் உல்லாச நந்தவனமேபோல் காணப்பட்டது. இதைவிட உயர்ந்த ஸ்தலம் இவர்களுக் கில்லையென்றே சொல்லலாம். (இக்காரணம் பற்றியே அரபிகள் ஏராளமாக அங்கு வந்து வசிக்கத் தலைப்பட்டனர். இதன் பயனாக இப்பட்டணம் மார்க்கக் கல்வி விஷயத்திலும், ஆசார சீர்திருத்தத்திலும் உன்னதமான ஸ்தானத்தை அடைந்திருந்தது. மேலும் அரபிகளுள்ளும் அஜமிகளுள்ளும் இயற்கையாக அமைந்து கிடக்கும் மன



மாறுபாடுகளும், விகற்பங்களும் விருத்தியாய்க் கொண்டு, செல்வதிலும் இந்நகரம் ஒரு சிறிதும் பின்வாங்கியதா யில்லை. இவ்விரண்டு மனப்பான்மையுடையவர்களும் ஒருவருக் கொருவர் எவ்விதப் பாகுபாடு மில்லாதவர்களேபோல் கலந்துறவாடிக்கொண்டு வந்ததன் பயனாய், அரபிகள் தங்களுக்குள் ஆழ்ந்து கிடந்த இயற்கைக் குணத்தை நாளுக்கு நாள் கைந் நழுவ விட்டுவிட எத்தனித்தனர். ஒவ்வொரு காரியத்தையும் செய்கையினால் செய்துகொண் டிருந்த இவர்கள் மனோ எண்ணங்களினாலும், வீணான ஆலோசனைகளினாலும் தங்கள் காரியங்களைச் செய்துகொண்டு விடலாமென எண்ணத் தலைப்பட்டனர்.

உதாஹரணமாக மன்பதைக ளெல்லாம், வியாதியஸ்தருக்குள்ள வியாதியானது, இரவாகும்போது மிக வாய் வலுத்து விடுகின்றதென எண்ணிக்கொள்ளுகின்றனர். உண்மையைக் கவனிக்கு மிடத்து, நோயானது இரவில் உண்மையிலேயே அதிகமாய் விடுவதில்லை; நோயின் எண்ணமே மனத்துள் ளதிகமாய் விடுகிறது. ஏனெனின், பகற் காலமா யிருக்கும்போது மனிதர்களும் பூமியின்மீதுண்டான இதர ஜந்துக்களும் தங்கள் தங்கள் வேலையைச் செய்துகொண்டிருக்கின்றன. இதன் பயனாய் எங்கும் ஓரே சப்தமாகவும், கூச்சலாகவும், குழப்பமாகவு மிருக்கின்றபடியால் நோயாளியின் நினைவும் உணர்ச்சியும் பற் பல விதமாய்ப் பரந்து கிடக்கின்றன. எனவே, இவனுக்குப் பகற்காலங்களி லெல்லாம் வியாதி சிறிது குறைவாயிருப்பதாய்த் தோன்றுகின்றது. ஆனால், இராக்காலத்தின் போதோ உலகமே நிசப்தமாகவும், அமைதியா

கவும் அரவமில்லாமலு மிருப்பதால், வியாதியஸ்தனின் நோயானது ஒருபக்கல் கிடக்க, இவனுடைய எண்ணங்களும், சிந்தனைகளும், கவலைகளும் தேகத்தின் ஒவ்வோர் மயிர்க்கால்களையும் போய்த் தீண்டுகின்றன. இவ்வாறான காரணங்களைப் பற்றியே தான் வியாதியஸ்தனின் நோயும், வருத்தமும் அதிக மாகத் தெரிகிறனவே யன்றி வேறன்று. இது தான் உண்மை.

எனவே, இமாம் ஹஸன்[ரலி] அமீர் முஆவியா முதலியவர்கள் தங்களிடையே கிலாபத் சம்பந்தமான சமாதான உடன்படிக்கை செய்துகொண்டு, இமாம் ஹஸன்[ரலி] அவர்கள் தங்கள் கிலாபத் ஸ்தானத்தை அமீர் முஆவியாவின் வசம் ஒப்படைத்தார்கள். இது போது இருதரப்பிலுமிருந்த மனிதர்களும் தங்கள் தங்கள் கருத்துக்களின்மீது நன்கு ஆழ்ந்து யோசிக்கலாயினர். இது சமயம் இவர்களிரு சாரார்களின் மனமும் அதிகமான வருத்தத்தினால் புண்பட ஆரம்பமாயின. இதுவரை இங்ஙனம் சிந்தனை செய்ய இவர்களுக்குச் சமயம் கிட்டிற்றிலது. பகற்காலங்களில் காணப்படும் சப்தங்களும், கூச்சல்களும், ஓசைகளும் ஒருவாறு ஒடுங்கிச் சாயங்கால நேரம் வந்துகொண் டிருந்தது; அதற்குப்பின் இரவும் தொடர்ந்து கொண்டே யிருந்தது. இன்னவர்களின் ஹிருதயங்களில் ஏற்கனவே உண்டாகிக்கிடந்த 'நொம்பலம்' நேரமாக வாக அதிகமாகிக்கொண்டே யிருந்தது; மேலு மிருசாரார்களும் ஒவ்வொரு காரியத்தையும் அமலிற் செய்து காட்டுவதை விடுத்து மனோ எண்ணங்களினாலும் தந்திரங்களினாலுமே முடிவுசெய்து கொள்வதே மேலானதென எண்ணலாயினர். ஆகவே, இவர்கள் இவ்வண்ணமான கருத்



தை ஹிருதயத்துள் புகுத்தியதும் முதன் முதலாக ஒரு விவாதத்தைக் கிளப்பி, இதன் பயனாய்த் தாங்கள் ஜெயமடைந்து விடவேண்டு மென்றும், தங்களுக்கு முரணான அபிப்பிராயங்களைக் கொண்டவர்களைத் தோல்வியடையச் செய்ய வேண்டுமென்றும் எண்ணி, ஒரு வீணான விவாதத்தை உண்டுபண்ணினர். இது முதன் முதலாய்க் கூபாவினின்றே தோன்றிற்று. அஃதெப்படியெனின்,

"எவனேனும் ஒருவன் மூமினை ஒரு மனிதனை அக்கிரமாய்க் கொல்வானாயின், அவனுடைய தண்டனையானது நரகலோகமாகும்; எப்பொழுதும் அதிலேயே அவன் இருப்பான்,"

என்னும் குர்ஆனின் இவ்வாக்கியத்தை முஆவியாவை ஆதரித்துக்கொண் டிருந்தவர்களான உதுமானியர்களும் இவர்களைச் சார்ந்த மற்றவர்களும், கூறித் தாங்கள்தாம் நேர்மையான மார்க்கத்தி லிருப்பவர்களென்றும், இன்னவர்களுக் கெதிரிகளே போல் காணப்பட்ட அலவியாக்க ளெல்லாம் (அலீ அவர்களை யாதரிப்பவர்) ஆண்டவனுடைய ஆணைக்கு வேறான பாதையில் தவறாகச் சென்றுகொண் டிருக்கின்றனர் என்றும் கூறிக்கொண் டிருந்தார்கள். உதுமானியர்கள் இம்மாதிரி கூறுவதைக்கண்டதும், அலவியாக்களும் இவ்வார்த்தைகளையே சொல்லி உதுமானியர்களே பாபிகளென்று பகர்ந்துகொண் டிருந்தனர். இதைக்கண்ட கவாரிஜ்கள், மேலே சொன்ன இரண்டு வகுப்பார்களும் ஆண்டவனுடைய ஆணையை உணர்ந்திருந்தும், இம்மாதிரியான யுத்தங்களைச் செய்து எவ்வளவோ முஸ்லிம் நேயர்களைக் கொலை செய்திருக்கின்றனர்.

ஆகையால், இருகூட்டத்தார்களும் ஐயமின்றியே நரக வாதிகளாவார்கள் என்று வாய்கூசாது விளம்பிக் கொண்டிருந்தனர். ஆனால், அஹ்லுஸ் ஸுன்னதி வல் ஜமாஅதி என்னும் வர்க்கத்தார்கள் இவர்களைப் பற்றித் தீமையான முடிபொன்றையும் சொல்லிவிடாது, சமாச மான தீர்மானத்தையே கொண்டிருந்தனர். எப்படி யெனின், உதுமானியர்களும், அலவிய்யாக்களுமான இருசாரார்களும் தாங்கள் தாங்களும் நேரான பாதையி லிருக்கின்றதாகவும், இதர் மாறான மார்க்கத்தி லிருக் கின்றதாகவும் எண்ணிக்கொண்டே யுத்தம் செய்து கொண்டிருந்தனர். எனவே, இன்னவரின் எண்ணங் கள் தவறேயன்றி இவர்களின் நோக்கங்களில் எவ் விதமான தீமையும் காணப்படவில்லை. ஆதலால், இரு சாரார்களுள் யார் நல்லவர் யார் கொடியவர் என்பதை எல்லா முணர்ந்தவனும், அந்தரங்க நோக்கங்களை யறிந்தவனுமான அவன் ஒருவனேதான் அறிந்திருக்கி றான் என்றும் கூறிக்கொண் டிருந்தனர்.*

---

*இவ்விஷயம் (ஹஜாத் அலீயையும், முஆவியாவையும் ஒப்பிட்டுக் காட்டுவது) ஒரு வீட்டுச் சண்டை என்கிற முறை யிலாகும். இப்படியில்லாது இருவரின் அந்தஸ்தையும் மேம் பாட்டையும் கவனிப்போமாயின், ஹஜாத் அலீயுடன் முஆவி யாவை ஒப்பிட்டுக் காட்டுவது,சூரியனுக்கெதிரே ஓர் அணுவை ஒப்பிட்டுக் காட்டுவதே போலாகும் என்பது திண்ணம். இங் ஙனமே ஹஜாத் அலீயையும் உதுமானையும் கவனிக்கப் புகு மிடத்து, ஹஜாத் அலீ அவர்களுடைய சிறப்பும் மேன்மையும் ஹஜாத் உதுமான்[ரலி] அவர்களுக்குப் பின்னேதா னிருக்கின் றனவென்று சுன்னத்ஜமாஅத்தார்களுடையபெரும்பாலோரின் அபிப்பிராய மிருந்துவருகிறது. ஆனால், முன்னோர்கள், இவ்



இதன் பிறகு கூபாவினின்றும் சில மனிதர்கள் மதீனாவிலிருந்த, ஹஜாத் இப்னு அப்பாஸ்[ரலி] அவர் கள் சமுகம் வந்து பிரஸ்தாபக் குர்ஆன் வாக்கியம் மாற்றப்பட்டு விட்டதா? வென்று வினவ, "இல்லை. இஃது இறுதியில் தோன்றிய குர்ஆன் வாக்கியமாகும்" என்று ஹஜாத்தவர்கள் விடை பகர்ந்தார்கள்—(புகாரீ முஸ்லிம்). இதுவுமல்லாமல் ஹஜாத்ஆயிஷா[ரலி] அவர்கள் சமுகத்திலும் இப்பிரச்சினைகள் நடந்தபோது, எமது திருக் குர்ஆனில் "முன்சென்ற முஸ்லிம் நேயர்களுக்கு ஆண்டவனிடம் இறைஞ்சி துஆச் செய்யவேண்டு" மென்றுதான் சொல்லப்பட் டிருக்கின்றது. ஆனால், இக்காலத்தில் சில மனிதர்கள் முன் சென்ற மூமின் சோதரர்களை வாயில் வந்தாவாறெல்லாம் வைதுகொண் டிருக்கின்றனர், என்று கூறியுள்ளார்கள். இவர்கள் சொன்னது, "ஏ எங்களிறைவனே! எங்கள் பாபங் களையும், எங்களுக்கு முன் சென்ற ஈமான் கொண்ட சோதரர்களின் பாபங்களையும் மன்னித்தருள வேண் டும்" (59:10) என்னும் திரு வாக்கியத்தையே சுட்டிக் காட்டி நிற்கின்றது.

ஆகையால், உதுமானிய்யாக்களும் அலவிய்யாக் களும் செய்து வந்த யுத்த விஷயமாக ஸுன்னத் ஜமாஅத்தார்கள் கொண்டிருக்கும் அபிப்பிராயமே

---

விஷயத்தில் அபிப்பிராய பேதங்கொண்டவர்களா யிருக்கின்ற னர். எனவே, இப்னுநதீம் தம்முடைய ஒரு கோவையில், ஹஜாத் உதுமான்[ரலி] அவர்களைவிட ஹஜாத் அலீ[ரலி] அவர் களே சிறந்தவர்களாகவும் மேலானவர்களாகவு மிருக்கின்றனர் என்று எத்தனையோ முஹத்திதீன்கள் கூறியிருப்பதாக எடுத் துக் காட்டியிருக்கின்றார்.

நலமான தென்றும், உண்மையைக் கவனிக்குமிடத்து ஒவ்வொரு முஸ்லிமும் இவ்வாறே கொள்வது தான் சிலாக்கிய மானதென்றும் புகாரீ, முஸ்லிம் போன்ற மேலான கிரந்தங்களிலும், மாபெரும் தலைவர்களான இமாம்களும் அபிப்பிராயம் கூறி யிருக்கின்றனர். ஆனால், காரிஜிய்யாக்கள் இவ்வாறு எண்ணங் கொண்டார்களில்லை. ஏனெனின், அவர்கள் பிடிவாதமாக ஒரு பாபமான காரியத்தைச் செய்வதனால் பெரும் பாபங்கள் வந்து சம்பவிக்கின்றன வென்றும், பெரும் பாபத்தை அடைபவர்கள் எக்காலமும் நரக வேதனையிற் சிக்கிக்கொள்பவர்களா யிருக்கின்றன ரென்றும், இம்மாதிரியான தண்டனைக் காளாகிறவர்கள் காபிர்களாவார்களென்றும் உறுதிகொண்டிருந்தனர். எனவே, உதுமானியரும் அலவிகளும் விஷயமுணர்ந்தவர்களா யிருந்தும், ஆண்டவனது ஆணைக்கு விரோதமாய் நடந்து பெரும் பாபத்தைச் சம்பாதித்துக் கொண்டு, எக்காலும் மீட்சி பெறமுடியாத நரக வேதனையில் காபிர்கள் சிக்கிக்கொண்டு தவிப்பதே போல் இன்னவர்களும் திண்டாடப் போகின்றனர் என்று மனப்பூர்வமாகவும் அதிக தாராளமாகவும் விளம்பி வந்தனர். இதன் பயன் யாதாயிற்றெனின், இக் கொள்கையும் எண்ணமும் காரிஜிய்யாக்களுக்கு முக்கிய சமய மூலமுதற் கொள்கையா யமைந்து விட்டது.

இதை யுணர்ந்ததும் மற்றொரு வர்க்கத்தினர் கிளம்பி, மர்ஜிய்யாவென்னும் நாமம் பூண்டுகொண்டு, ஒரு மனிதன் ஆண்டவன்மீது பரிபூரண நம்பிக்கை வைத்து ஈமான் கொண்டு விடுவானாயின், அவன் பாப காரியங்களைச் செய்வதனால் திதொன்றும் விளையப்



போவதில்லை யென்றும், எனவே, பாபங்களினால், மூமினாகிய அவன் எவ்விதத் தண்டனையையும் அடைய மாட்டானென்றும், பாபங்களினால் தண்டனையே உண்டாகப் போவதில்லை யென்றால் அவன் காபிர் என்று எங்ஙனம் சொல்வது சாலு மென்பதை நீங்களே தெரிந்து கொள்ளுங்க ளென்றும் கூறிக்கொண்டு, தங்களுக் காதாரமேபோல் காணப்படும் ஒரு சில ஹதீதுகளை வைத்துக்கொண்டு விவாதிக்கத் தொடங்கினர். அதற்குப் பின் முஃதஜிலா வென்று ஒரு கூட்டத்தினர் தோன்றி, மேலேகூறிய இரண்டு சாரார்களும் கூறியதே போல் கூறாது, பெரும் பாபங்களைச் செய்த மனிதன் மூமினாகவுமில்லை, காபிராகவுமில்லை; ஆனால், இவ்விரண்டுக்கு மிடையே மத்திபமான ஒரு ஸ்தலத்தையே தான் அடைந்திருக்கின்றான் என ஒருவித மத்தியஸ்தத்தைச் செய்து முடித்தனர்.

அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத்தினர், மேலே சொல்லிக் கொண்டுவந்த கூட்டத்தினர்களே போல் இரண்டொரு நாயக வாக்கியங்களைப் பற்றிப் பிடித்துக் கொண்டு உடனே தீர்ப்புச் செய்துவிடாமல் ஒவ்வொரு விஷயத்தையும் நன்கு ஆலோசனை செய்தும், குர்ஆனையும் ஹதீதுகளையும் பெரியார்களின் அபிப்பிராயங்களையும் ஸஹாபாக்களுடைய நேரான ஒழுக்க வழக்கங்களையும் நன்கு ஆராய்ந்ததன் பின்னுமே ஒரு முடிபைச் செய்யும் வழக்கமுடையவர்களா யிருந்து வந்தனர். எனவே, இவர்களெல்லாம் தங்கள் தங்களுக்குப் பொருத்தமான வேறான மார்க்கங்களில் சேர்ந்து கொண்டவுடன் ஸுன்னத் ஜமாஅத்தார்கள் கூறியதென்ன வெனின், பெரும் பாபங்கள் செய்வதனால்

குப்ர் வந்துவிடாதென்றும், ஆனால் இன்னோர் தாம் செய்த
குற்றங்களுக்குத் தண்டனை பெறக்கூடியவர்களாகவே
யிருக்கின்றன ரென்றும், ஆனால், அல்லா(ஹ்) தன்னு
டைய பேருளால் இவர்கள் செய்த பாபங்களை மன்
னித்துத் தண்டனைக் குள்ளாக்காது முழுதும் விடுவித்து
விடுவதும் கூடுமென்றும் கூறினர். ஆகவே, மேலே
சொல்லி வந்த காரிஜிய்யாக்களுடைய ஆதாரங்களைக்
கேட்டு, அவையே சரியானவை யெனக்கொண்டு காரி
ஜிய்யாக்களாய் மாறிப்போய் விட்டவர்கள் எதிர்பாரா
வண்ணம் மதீனாவை நோக்கிச் சென்றுகொண் டிருந்த
னர். அங்கு ஹஜரத் ஜாபிர்[ரலி] அவர்களின் சந்திப்பு
அவர்களுக்குக் கிட்டிற்று. அதுசமயம் காரிஜீகள் அவர்
களிடம், "பாபிகள் மன்னிக்கப் படுவார்களா?" என்று
வினவிய போது, பாபிகள் சம்பந்தமாகவும், இறுதி
நாளின் தீர்ப்புச் சம்பந்தமாகவும் வந்திருக்கும் எல்லா
நாயக வாக்கியங்களையும் அப்பெரியார் எடுத்தோதினார்
கள். இதைக் கேட்டவுடன் ஒருவர் தவிர எல்லா
காரிஜீகளும் தாங்கள் கொண்டிருந்த எண்ணங்களை
யெல்லாம் திரஸ்கரித்துத் தெளபா செய்துவிட்டனர்.

நாம் ஏற்கனவே எடுத்துக் காட்டியதேபோல்
இந்தப் பிரிவினைக்காரர்களெல்லாம் மனிதசமூகத்தைப்
பங்கிட்டுக் கொண்டதுடன் நில்லாது, தேசத்தையும்
பலவாறாகப் பிரிவினை செய்து கொண்டனர். எனவே,
பனீ உமையாக்களை ஆதரித்துக் கொண்டுவந்த உது
மானிய்யாக்களும் நாஸிபிய்யாக்களும் ஷாம் (சிரியா)
தேசத்தில் வதிந்துவந்தார்கள். அலவிய்யாக்களும் மற்
றும் அஜமிகளும் இராக்கில் வசித்துவந்தனர். மேலும்
பனீ உமையாக்கள் கர்பலாவின் பொட்டல் பூமியில்



நாயகத்தின் அருமைப் பேரரை எவ்விதமாய் இரக்க
மின்றிக் கொலைபுரிந்தனர்? ஹரம்ஷரீபான மக்காவில்
ஹஜரத் அபூபக்ர் ஸித்தீக்[ரலி] அவர்களின் பேரான
அப்துல்லாபின் ஜுபைர் அவர்களின் இரத்தத்தை
எவ்வாறு ஓட்டினர்? இமாம் ஜைனுல் ஆபிதீன் அவர்
களின் ஈரற்குலைத் துண்டான ஜைத் என்பவர்களின்
கழுத்தை எவ்வாறு துண்டித்தனர்? மதீனாவின்பாலி
ருந்த அன்ஸாரிய்யீன்கள் நாயக மவர்களுக்கு வலது
கரமேபோலிருந்து வேண்டிய உதவிகளைச் செய்து
கொண் டிருந்தார்களென்பதை உணர்ந்திருந்தும் அன்
னவர்களையும் இரக்கமும் தாக்ஷண்யமுமில்லாது எப்ப
டிக் கொலை செய்யத் துணிந்தனர்? பஸராவின்கண்
வசித்துவந்த மாபெரும் மேதாவிகளும், முஹத்திதுக
ளும், கல்விமான்களுமான அன்னவர்களை எவ்வாறு
இவர்கள் கொல்லத் துணிந்தனர்? என்பதை யெல்லாம்
பார்த்தவர்களும் கேள்வியுற்றவர்களும் நாவினால் ஒன்
றும் சொல்லமுடியால் அப்படியே திகைத்தவர்களாக
வும் பிரமிப்பை அடைந்தவர்களாகவும் நின்றனர்.

(அதுசமயம் பனீ உமையாக்களின் அட்டகாச
மும், அரசாங்கமும், அதிகாரமுமே எங்கும் தலை
விரித்துத் தாண்டவமாடிக்கொண்டிருந்தன. அன்னவர்
களுக்கு விரோதமாய் யாரேனும் ஒரு விஷயத்தைக்
கூறிக்கொண் டிருக்கின்றாரென ஏற்பட்டுவிடுமாயின்,
அவர் பின்னும் இவ்வுலகின்மீது உயிருடன் வாழ்ந்து
வருவதென்பதே கஷ்டசாத்தியமான ஒரு காரியமா
யிருந்துவந்தது. எனவே, எங்கும் யாரும் அன்னவர்
களுக்கு நேர்விரோதமாகப் பஹிரங்கமாக நாவினா
லொன்றும் இகழ்வுச் சொல்லைப் புகலத் தைரிய மற்ற

வர்களா யிருந்துவந்தனர்.) வாளாயுதத்தின் வேகம் நாவை ஊமையாய்ச் செய்துவிடலாம். என்றாலும், ஹிருதயத்தின்கண் முளைத்துக் கிடக்கும் கொடுமையான முட்களை அன்னவர்களின் கட்கத்தால் ஒன்றும் செய்துவிட முடியாதென்பது திண்ணம். இம்மாதிரி மனக்கசப்பை நிவாரணம் பண்ணவேண்டு மாயின், மார்க்கமென்னும் மூலிகையைத் தவிர வேறென்றும் இதற்குப் பிரயோஜனம் தாத்தக்கதா யில்லை. (அஃதாவது, பனூஉமையாக்களான இவர்கள் செய்யும் காரியங்களெல்லாம் மார்க்கத்துக்கு முரணானவையல்லவென்றும், எல்லாக் கிரியைகளையும் மார்க்க சட்டதிட்டங்களின் படியேதான் செய்துகொண்டு வருகிறோமென்று காட்டிவிட்டால் உலக மக்கள் தங்களை நிந்தனை செய்ய மாட்டார்கள் என்றும் எண்ணிக்கொண்டனர். ஹாபிஸ் பாகவீ). ஆனதால், பனீ உமையாக்களான அவர்கள் இறுதியாக ஜப்ரென்னும் ஒரு மார்க்கப் பிரச்னையைக் கைக்கொண்டனர். அஃதாவது, மனிதன் கட்டாயப் படுத்தப்பட்டவனா யிருக்கின்றான். மனிதன் செய்துகொண் டிருக்கும் ஒவ்வொரு காரியத்தையும் உண்மையில் ஆண்டவனேதான் செய்துகொண்டிருக்கின்றான். எனவே, மனிதன் தான்செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும் அவன் ஜவாப்தாரியாகமாட்டான். ஆண்டவனே இதற்குப் பொறுப்புள்ளவனாவான். ஆகவே, இவ்வண்ணமான வார்த்தைகளைச் சொல்லி, அந்த பனீ உமையாக்கள் செய்யும் அக்கிரமங்களுக் கெல்லாம் தாங்கள் ஒரு சிறிதும் ஜவாப்தாரியல்லவென்றும், ஆனால், (நவூதுபில்லா) அந்த ஆண்டவனே ஜவாப்தாரியாவான் என்றுமேகூறிக்கொண்டிருந்தனர்.



இதைக் கண்ணுறும்போது, ஷாம்தேசத்தில் வசித்துக்கொண்டு வரும் பனூ உமையாக்களான இவர்களுக்கு விரோதமாக இராக் தேயத்தில் வசித்து வந்தவர்கள் (அலவிய்யா, ஹரூரிய்யா) என்ன விதமான ஜவாபைச் சொல்லி யிருப்பார்களென்பதை நீங்களே உணர்ந்து கொள்ளலாம். ஷாம் தேசத்தவர்கள் ஜப்ர் (கட்டாயப்படுத்தல்) என்னும் இவ் விஷயத்தைச் சொன்னதும், இராக் தேசத்தில் வசித்துக்கொண்டு வருபவர்களுள் சிலர் கத்ர் (சக்தி) என்னும் விஷயத்தை விவரிக்கத் தொடங்கினர். எப்படி யெனின், மனிதன் செய்யும் நன்மை தீமையான ஒவ்வொரு காரியத்துக்கும் தானே ஜவாப்தாரியாவா னென்றும், தக்தீர் என்று ஒன்றும் எவாலும் எக்காலத்திலும் ஏற்படுத்தப்படவே யில்லையென்றும், மனிதன் செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும் அதற்குத் தக்கபடி வேண்டிய சக்தியை ஆண்டவனளிக்கப்பட்டிருக்கிறு னென்றும், மனிதன் எவ்வாறு தான்நாடுகின்றானே அப்படியெல்லாம் சுயமே தான்தான் ஒவ்வொரு காரியத்தையும் செய்துகொண் டிருக்கின்றானென்றும் கூறினர். இராக் தேசத்தில் வசித்து வந்த அஜமியான, ஸன்விஸூயா அல்லது ஸோஸன் என்னும் பெயருடையவரே முதன்முதலாக இவ்விஷயத்தை விளம்பினர். இதனை மஃபத்ஜஹ்னீ என்பவர் (சுன்னத்வல் ஜமாஅத்துக்குரிய) உசூலிய்யாத் தென்னும் மூலக்கொள்கையிற் கொணர்ந்து சேர்த்தார். அது சமயம் பஸராவினின்றும் சிலமக்கள் ஹஜரத் அப்துல்லா பின் உமர்ரலி அவர்கள் சமுகம் வந்து, 'இது சமயம் எங்களுள் சிலர் தக்தீர்என்ப தொன்றுமில்லை என்றும்,

ஒவ்வொரு விஷயமும் ஏற்கெனவே ஏற்படுத்தப்பட்டில்லையென்றும், ஆனால் ஒவ்வொரு காரியத்தையும் மனிதன் தானே முதன்முதலாய்ச் சுயமே செய்து கொண்டிருக்கிறானென்றும் கூறிக்கொண்டு வருகின்றனர். எனவே, இதன் உண்மை என்ன?' என்று வினவினர். இதைக் கேட்டதும் ஹஜ்ரத் அப்துல்லா பின் உமர்[ரலி] அவர்கள், 'அவர்களுடன் நமக்கொன்றும் சம்பந்தமில்லை; இவ்வாறே நம்முடன் அவர்களுக்கொன்றும் சம்பந்தமில்லை என்று சொல்லி விடுவீர்களாக,' என்று சொன்னார்கள். ஆனால், மஃபத்ஜுஹனீ என்பவர் இந்த கத்ரென்னும் மஸ்அலாவைச் சிறிது சிறிதாக பஸராவின்கண் காணப்படும் கல்வி ஸ்தாபனங்களிலெல்லாம் பரவும்படி செய்துவிட்டார். பிறகு நாள் செல்லச்செல்ல இதன் வட்டம் விஸ்தீரணமாகவும் பெரிதாகவும் பரவிக்கொண்டே சென்றது.

ஹஜ்ரத் இப்னு உமர்[ரலி] அவர்களிடம் போய் மனிதர்கள் மேற்கூறியதுபோன்ற தீர்மானத்தைப் பெற்றுக்கொண்டு (ஜப்ரிய்யாக்கள்) [இங்கு ஒரு விஷயத்தை நீங்கள் அத்தியாவசியமாய் ஞாபகத்திலிருத்திக்கொள்வது நலமாகும். அஃதாவது, ஜப்ர் (கட்டாயப்படுத்தல்) கத்ர் (சக்தி பெற்றிருத்தல்) என்னும் பிரச்னையொன்றுளது. நாம் செய்யும் ஒவ்வொரு காரியமும் நமது சக்தியைக்கொண்டே செய்கிறோமென்பதில்லை. ஆனால், நாம் ஜனனமாவதற்கு முன்னமேயே நாம் இன்ன இன்ன காரியத்தைத்தான் செய்வோம் என்று ஆண்டவனால் நிர்மாணிக்கப்பட்டு விட்டது. ஆகையால் நாம் அல்லா(ஹ்)வால் கட்டாயப்படுத்தப்பட்டவர்களாயிருக்கிறோம். எனவே, நாம் செய்யும்



எந்தக் காரியத்துக்கும் நாம் பொறுப்பாளராதல் முடியாதென்று கூறுகின்றனர். இப்படிப்பட்ட ஜப்ரை (கட்டாயப் படுத்தப்படுதலென்பதை) ஏற்றுக்கொண்டிருப்பவர்கள் தாம் ஜப்ரிய்யாக்கள் என்று கூறப்படுகின்றனர். இதற்கு விரோதமாய் அடியான் செய்யும் ஒவ்வொரு காரியமும் தானே சுயமாய்த் தன்னுணர்ச்சியுடனும் ஞானத்துடனுமேதான் தன் சக்தியைக்கொண்டு செய்கிறான் என்றும், நன்மைக்கோ தீமைக்கோ செய்பவனேதான் ஜவாப்தாரியாவானென்றும், ஏற்கெனவே எல்லாக் காரியங்களும் நிர்மாணிக்கப்பட்டு மக்கள் ஜப்ர் செய்யப்பட்டிருக்கிறார்களென்பதில்லையென்றும், தான்செய்யும் ஒவ்வொரு காரியமும் அதே சமயத்தில்தான் உண்டாகின்றதென்றும், அ[illegible]கிரி செய்வதன்மீது மனிதர்கள் பூரண சக்தியை(கத்ரை)ப் பெற்றிருக்கிறார்களென்றும், இதற்கு அல்லா(ஹ்) எம்முறையாலும் ஜவாப்தாரியாக மாட்டானென்றும் கூறுகின்றனர். இன்[illegible]ரைத் தாம் கத்ரிய்யாக்களென்று அழைக்கின்றனர். ஹாபிஸ் பாகவி] வந்தார்களென்றால், கத்ரிய்யாக்கள் சும்மா இருந்தார்களில்லை. எப்படியெனின், மஃபதும் அதாபின் யஸிரும் அனேக தடவைகளில் ஹஜ்ரத் ஹஸன் பஸரீ அவர்களிடம் வந்து, 'பனீ உமையாக்கள் ஆண்டவனின் அடியார்களை அக்கிரமமாய்க் கொலை புரிகின்றனர். அன்றியும் அவர்கள் செய்யும் அக்கிரமங்களெல்லாம் ஆண்டவன் ஜப்ரினால் (கட்டாயத்தினால்தான்) செய்கிறோம் என்றும் கூறிக்கொண்டிருக்கின்றனர். எனவே, இதன் உண்மை என்னவென்பதைத் தாங்கள் எங்களுக்குச் சொல்லவேண்டு'

மென வினவ, 'இவர்கள் ஆண்டவனுடைய பகைவர்களாயிருக்கின்றனர்; மேலுமிவர்கள் பொய் சொல்லுகின்றன' ரென்றும் தீர்ப்புக் கூறினார்கள். இறுதியாய் கத்ரியைச் சேர்ந்த மஃபத் என்பவர் பனீ உமையாக்களுக்கு விரோதமாய்க் கிளர்ச்சிசெய்யத் தலைப்பட்டார். (பின்னர் ஹிஜ்ரி 86 ஆண்டுவரை கலீபாவாயிருந்த) அப்துல் மலிக் அமவீயின் உத்தரவின்மீது இவர் கொல்லப்பட்டார். அதன் பிறகு மஃபத் கூறிக்கொண்டிருந்ததேபோல் அவரது ஸ்தானத்தில், அம்ருப்னு உபைத், ஜஃதுப்னு திர்ஹம், கைலான் திமஷ்கீ முதலியவர்களிருந்து இந்தப் பிரச்சினையைக் கிளப்பிக்கொண்டேயிருந்தனர். ஆனால், இவர்களெல்லாம் ஒருவருக்குப் பின் ஒருவராக பனீ உமையாக்களால் கொல்லப்பட்டே போயினர். இவர்களெல்லோரும் கொல்லப்பட்டுப் போகவே, இவ்வியக்கம் மென்மேலும் வலுவடைந்து கொண்டே போனது மல்லாமல், 'அக்கிரமமாகவும் நீதம் தவறியும் இரத்தங்களை ஓட்டும் அரசாங்கத்தினரைக் கண்டிப்பதும், அன்னவரினின்றும் அரசாங்கத்தைப் பிடுங்கிக் கொள்வதும் நீதமான ஒரு காரியமாயிருப்பது மல்லாமல், ஒவ்வொரு மனிதனும் இப்பிரச்னையை அத்தியாவசியமாய்ச் செய்யக்கூடிய முக்கிய ஒரு காரியமாகவு மிருக்கிறது' என்று சொல்லி மிக மும்முரமாய்ப் பிரசாரமும் செய்யப்பட்டு வந்தது. மேலும், இவர்கள் முதன்முதலாக கத்ரிய்யா வென்று அழைக்கப்பட்டு வந்தார்களெனினும், காலம் செல்லச் செல்ல இன்னவர்களே முஃதஜிலா வென்று அழைக்கப் படுபவர்களாய் மாறினர்.

அதுசமயம் பனீ உமையாக்களின் காலம் முடியும்



தறுவாயிலும், பனீ அப்பாஸிய்யாக்களின் காலம் செழித்தோங்கும் நல்ல நிலையிலும் வந்து கொண்டிருந்தது. ஈரானினின்றுமே பனீ அப்பாஸிய்யீன்களின் நற்கால நக்ஷத்திரம் உதயமாயிற்று. யூனானியர், அஜமிகள் முதலியவர்களின் வாய் வேதாந்தமான வெறும் பலாஸிபா தலைவிரித்துத் தாண்டவ மாட ஆரம்பித்தது. இன்னவரின் நாவினின்று ஏதேனுமொரு வார்த்தை உண்டாய்விடுமாயின், அஃதொரு மதுஹபாகவும் மார்க்கமாகவும் கொண்டாடப்பட்டது. இராக், குராஸான், ரை முதலியபட்டணங்கள் மார்க்கங்கள் உண்டுபண்ணப் படுவதற்கும், பிரிவினைகளை அதிகப்படுத்தும் விஷயத்துக்கும் நடு நாயகமாய் விளங்கத் தலைப்பட்டன. குராஸானில் ஜஹ்மிப்னு ஸப்வான் என்பவர் தோன்றி, ஆண்டவனுக்குள்ள அத்தனை அடை மொழிகளான ஸிபாத்துகளை யெல்லாம் நிராகரித்துக்கொண்டிருந்தார். அன்றியும் ஆண்டவனால் ஒன்றும் செய்யமுடியாது, அவன் ஒரு பொம்மையே போலிருக்கின்றா னென்னும் முடிவுக்கும் வந்தார். இவ்வண்ணமே முஃதஜிலாக்களும் ஆண்டவனின் அடைமொழிகளை யெல்லாம் நிராகரித்துக் கொண்டே வந்து, அல்லா(ஹ்)வை மஃதூமெனும் ஒரு மாய வஸ்துக் கொப்பானவனேபோல் செய்துவிட்டனர். இப்னு கிராம் ஸீஸ்தானீ என்பவர் ரை என்னும் பட்டணத்தில் தோன்றி, அல்லா(ஹ்)வுக்கு ஸ்தூலமுண்டென்று நம்பிக்கை கொண்டு, ஆண்டவனை அழகு வாய்ந்தவனாகவும், பெரிய புஜபல புராக்கிரமம் வாய்ந்தவனாகவுமுள்ள ஒரு மனிதனாகச் செய்து சிம்மாசனத்தின் மீதமரும்படி கூடச் செய்துவிட்டார். ஆண்டவனுக்குச் சரீரமுண்

டென்று கூறுபவர்களெல்லாம் ஒரே விதமான அபிப் பிராயத்தையேனும் கொண்டிருக்கின்றனரா வென்ப தைக் கவனிப்போமாயின், அதுவும் ஒரு குதிரைக் கொம்பாகவேதான் காணப்படுகின்றது.

உதாஹரணமாக, குராஸானிலுள்ள சுலைமான் என்பவர், அல்லா(ஹ்) மாமிசத்தாலும் தோலினாலும் சேர்க்கப்பட்டவனா யிருக்கின்றான் எனக் கூறி நின்றார். ஹிஷாம் பின் ஹகம் என்பார், இறைச்சியினாலும் தோலினாலும் அவனுக்கு உடலென்பதில்லை. ஆனால், அவனது தேகம் பரிசுத்த ஒளியினால் நின்றிலங்குகின் றது எனக் கூறுகின்றார். ஹிஷாம் பின் ஸாலிம்ஜௌ லகீ என்பார், அல்லா(ஹ்) பரிசுத்த ஒளியாகும்; அவ னுக்கு எந்தவிதமான இறைச்சியும் தோலும் கிடையா. ஆனால், அவனது மேற்புறப் பிண்டம் உள்ளே ஒன்று மில்லாது காலியா யிருக்கின்றது. கீழ்ப்பாகமோ உறு தியாகவும் கெட்டியாகவு மிருக்கின்றது; அவனுக்குக் கறுப்பு நிறமுள்ள நீண்ட முடிக ளிருக்கின்றன. மனி தர்களேபோல் அவனுக்கும் ஐம்புல நுகர்ச்சிகளுண்டா யிருக்கின்றன; அவனுக்குக் கரங்க ளிருக்கின்றன; பாதங்களுமுள; முகமு மிருக்கின்றது; மூக்குமிருக் கின்றது; ஆனால், அவனுக்குத் தாழ்வாய்க் கட்டை அல்லது தாடி இல்லை என்று கூறிக்கொண்டிருந்தார். (அழகானபடர்ந்ததாடியையும் ஆண்டவனுக்கு வைத்து விட்டால், இந்த ஜௌலகீக்கு என்ன குறை வந்துவிடு மென்று மறுத்து விட்டாரோ யாமறியோம் ஹாபிஸ் பாகவீ). பயான் பின்ஸம்ஆன் என்பவர், அல்லா(ஹ்)வுக் குத் தேகமிருக்கின்றது எனினும், அஃது இறுதிநாளின் போது அழிந்துபோகும்; அவனது முகம் மாத்திரம்



பாக்கியாயிருக்கும் என்று குளறிக் கொண்டிருந்தார். முஃதஜிலாக்கள், அல்லா(ஹ்)வைக் காணுவது முடியாத ஒரு காரிய மென்று மறுத்துக்கொண் டிருந்தனர். ஆனால், பெரும்பான்மையான மனிதர்கள் ஆண்டவ னைக் காணமுடியாதெனும் இவ்விஷயம் உண்மையான தேயென ஒப்புக்கொண்டிருந்தனர். இன்னமும் சிலர், சாதாரணமான இந்த ஐம்புலன்களினால் அல்லா(ஹ்) வைக் கண்டுகொள்வது முடியாது; ஆனால், இறுதி நாளின்போது ஆண்டவனா லளிக்கப்படும் ஒருவிதப் புல னைக்கொண்டு இறைவனைப்பார்க்க முடியும் எனக் கூறிக் கொண்டிருந்தனர்.

இஃதெல்லாம் ஆண்டவன் என்னும் ஆதிமூலப் பொருளான தாத்தில் நடக்கும் பிணைப்புச்சம்பந்தமான விதண்டா வாதங்களாகும். ஆனால், அவனுடைய அடைமொழிப்பொருளான ஸிபாத்துகள் சம்பந்தமான விவாதம் இதற்குப்பின்னே ஆரம்பமாகிறது. ஜஹ்மிய் யாக்களென்போர், அல்லா(ஹ்)வின் ஸிபாத்துகளொன் றும் இல்லையென்று கூறி, அவனுக்கு ஸிபாத்துகளிருக்கு மாயின், அவையும் ஆதியும் அந்தமுமற்ற அபதிய்யான (நித்தியப்) பொருளாக ஆய்விடவேண்டும் என்கின் றனர். இவ்விதமான அபதிய்யத் தென்னும் குண விசேஷங்களெல்லாம் ஆண்டவனின் தாத்துக்கே உரிய னவாகும்; இல்லை, அல்லா(ஹ்)வுக்கு ஸிபாத்துகளென் பன தனியே வேறு இருக்கின்றன என்று கொள்ளப் படுமாயின், ஆண்டவனும் பலவற்றைக் கொண்டு சேர்க் கப்பட்ட ஒருவனா யிருக்கின்றான் என்று ஏற்படும். இஃது ஒரு கூடாத காரியமேயாகும். முஃதஜிலாக்க ளென் போர், ஆண்டவனுக்குத் தனிப் பிரத்தியேகமான

ஸிபாத்துக ளொன்றுமில்லை என்றாலும், அவனுடைய நிர்க்குணப் பிரம்மமே (தாத்தே) தனியாய் நின்று ஸிபாத்துகளுக்குரிய எல்லாக் காரியங்களையும் செய்து கொண்டு வருகின்றதெனவும் கூறுகின்றார். இதற் கெதிராக லவாஹிரிய்யாக்க ளென்போர் பாரபரனின் நிர்க்குணப் பிரம்மத்தைத் தவிர்த்து, சகுணங்கள் (ஸிபாத்துகள்) வேறு தனிமையா யிருக்கின்றன வென்று கூறிக்கொண்டிருந்தனர். அஷாயிராக்க ளென் போர், அவனுடைய ஸிபாத்துகள் நிர்க்குணப் பிரம் மத்துக்குள் ஐக்கியப் பட்டவாகவோ, அதினின்றும் வெளிப்பட்டவாகவோ இல்லை என்று புகல்கின்றனர். பல்க் நகரைச் சேர்ந்த கஃபீ என்பார், ஆண்டவனுக்குள் அறிவென்னும் ஒரே ஒரு குண விசேஷம்தான் காணப் படுகின்றது. நாட்டமென்னும் குணமானது, அவனு டைய நிர்க்குணப் பிரம்மத்துக்குள் ஒன்று சேர்ந்ததா யிருந்து வருகின்றது என்று கூறிக்கொண்டிருக்கின் றார்.

ஈமானும் அமலும் ஒரு வஸ்துவா? அல்லது அமல் ஈமானினின்றும் அப்புறப்பட்டதா? ஈமான் என் பது நாவினால் சொல்வது மட்டுமா? அல்லது மனத் தால் உறுதிப்படுத்துவது மட்டுமா? அல்லது நாவினால் சொல்வதுடன் மாத்திரம் நில்லாது மனத்தினாலும் உறுதி கொள்வதையும் சேர்ந்ததா? ஈமானில் அதிக மாவதற்கும் குறைவதற்கும் இடமுண்டா இல்லையா? அல்லா(ஹ்) வின்மீது ஈமான் கொள்வது சொந்தப் பகுத்தறிவின் பொருட்டா? அல்லது சாஸ்திர ஞானப் படியா? நபித்துவம் உண்டென்பது அக்லென்னும் சொந்தப்பகுத்தறிவின் காரணமாகவா? அல்லது சமாயீ



யென்னும் சாஸ்திர ஞானத்தின் கேள்வி வாயிலாகவா உண்டாயிற்று? முஃஜிஜா வென்னும் அற்புதங்கள் நடப்பது உண்மையா? இவ்வித அற்புதங்கள் நபித்து வத்துக்கு ஆதாரமாகுமா ஆகாவா? முஃஜிஜாத் தென் பது மறைவான சில காரணங்களைக் கொண்டதாகவா யிருக்கின்றது? அல்லா(ஹ்)வின் கட்டளைகளில் ஏதே னும் நன்மைகளுண்டா? அல்லா(ஹ்)வின் காரியங்கள் ஏதேனும் காரணங்களைப் பொறுத்துச் செய்யப்படு கின்றனவா? அல்லவா? குர்ஆன் முஃஜிஜாவா? அல்லவா? குர்ஆனுக்கு ஜவாப் சொல்வது உண்மையில் கூடுமான காரியமா யில்லை; விடை சொல்லக்கூடும் என்றாலும், இவ்விதமான சக்தியை மனிதர்களிட மிருந்து ஆண்டவன் எடுத்துக் கொண்டு விட்டான். குர்ஆன் முஃஜிஜாவென்றால், எம்முறையில்? முன்னைச் சரிக்கை செய்வதனாலா? மேலான வார்த்தைப் பதக் கட்டுக்களினாலா? குர்ஆன் எப்படி ஆண்டவனின் வாக்கியங்களாகும்? அது பூர்விகமானதா? அல்லது புதிதா? இதன் வாக்கியங்கள் பூர்விகமானவையா? அல்லது இதன் கருத்தா? சுவர்க்க நரகமென்பன உண்மையில் ஏதேனும் ஒருவித வஸ்துக்களா யிருக்கின் றனவா? அல்லது உருவக முகமாய்க் கூறப்பட் டிருக்கின்றனவா? உண்மையிலேயே ஒரு வஸ்துவா யிருக்கின்றதென்றால், அஃது இது சமயம் உண்டா? இல்லையா? இப்பொழுது இருக்கிறதென்று வைத்துக் கொள்வோமாயின், கியாமத் தென்னும் இறுதி நாளின் போது அவை அழிக்கப்பட்டுப் போகின்றனவா? இல்லையா? ஒரு சிறிதேனும் ஹிருதயத்தில் ஈமான் வைத்திருக்கும் ஒருவன் நரகில் நுழைவானா? நுழைய

மாட்டானா? புதைகுழியில் அடியான் வேதனை செய்யப்படுகின்றானா? இல்லையா? நரகலோகத்தில் குப்பார்களெல்லாம் ஒரே தடவையில் வேதனை செய்யப்படுவார்களா? அல்லது பல சமயங்களிலா? அல்லா(ஹ்)வுக்குக் கஷ்டசாத்தியமான—முடியாத (முஹாலான) காரியங்கள்மீது தராணியுண்டா? இல்லையா? அவன் அக்கிரமம் செய்வானா? செய்யமாட்டானா? ஆண்டவன் (நஊதுபில்லா) பொய் சொல்வானா? சொல்லமாட்டானா? (என்றெல்லாம் வாதாடி வருகிறார்கள்.)

இஃதெல்லாம் ஒரு பக்கல் கிடக்க. இமாமத்தின் (கிலாபத்தின்) நீண்ட விஷயத்தை நான் இன்னம் திரும்பியும் பார்க்கவில்லை. இதுசம்பந்தமாக மக்களென்ன சொல்லுகின்றார்களென்று கவனிக்கப் புகுவோமாயின், அது மிகப் பெரிதாய் விரிந்து கொண்டே செல்லும் என விடுக்கின்றேன். நான் மேலே காட்டி வந்ததேபோல் இன்னமும் இலட்சக்கணக்கான விபரீதங்களும் விதண்டா வாதங்களும் உண்டாய்க்கொண்டிருந்தன. எவருடைய புத்தியிலேனும் நவீனமாக ஒரு விஷயம் தோன்றுமாயின், அதனை ஒரு பெரிய மார்க்கமேபோல் எண்ணி, அதை ஒரு கூட்டத்தார் பின்பற்றிக்கொண் டிருந்தனர். இம்மாதிரி விஷயங்களை யெல்லாம் ஒரு சாரார் ருஜுப்பித்துக்கொண்டும், மற்றொரு சாரார் மறுத்துக் கொண்டும், அவைகளை மூலக் கொள்கைகளான உசூலிய்யாத்துக்களில் கொணர்ந்து நுழைத்து வைத்தனர். இவர்கள் செய்து கொண்ட இவ்விகற்பங்கள் நாவளவிலும், ஆதாரங்களிலும் மட்டும் நின்றுவிடாமல், காங்களின் வினையாட்டுச் சேஷ்டைகளினால் எத்தனையோ மனிதர்கள் அழுகுரலோசைகளினாலும் கஷ்டப்படும்படி நேர்ந்தது. மூன்றும் நூற்றாண்டில் அஷ்அரிய்யாக்கள் தோன்றி, முஃதஜிலாக்களின் பக்கமும் லவாஹிரிய்யாக்களின் பக்கமுமில்லாது நடுநிலைமை வகித்து, யுக்திக்கும் புத்திக்கும் பொருத்தமான முறையிலே மார்க்க மஸ்அலாக்களைச் சொல்லி, மாபெரும் தலைவர்களிடமும், மஹான்களிடமும், முஹத்திதீன்களிடமும், புகஹாக்களிடமும் நற்கியாதியையும் நற்பெயரையுமடைந்தனர். இதுவுமல்லாமல் ஒருபுறம் பாக்கில்லானீ, அபூபக்ர், இப்னுபூரக், கஜ்ஜாலீ, ராஜீ முதலியவர்களின் விரைவாகவும் வேகமாகவு முள்ள போதனைகளினாலும், மற்றொருபுறம் மலிக்ஷாஹ் ஸல்ஜூகீ, சுல்தான் மஹ்மூத் கஜ்னவீ, சுல்தான் சலாஹுத்தீன் அய்யூபீ, முஹம்மது பின் தூமரத் முவஹ்ஹிதீ (ஸ்பெயின்) முதலியவர்களின் வாளாயுதத்தின் வேகத்தின் பயத்தாலும் மேலே சொல்லப்பட்டுவந்த சில்லறை வகுப்பார்களெல்லாம் அதிகமாய்த் தலை தூக்காமல் மறைந்தனர்; அஷாயிராக்கள்* மிகவும் தலைசிறந்து விளங்கினர். என்றாலும் பகுதாதின்கண் வசித்துவந்த ஹனுபிலாக்களும் அஷாயிராக்களும் தத்தமக்குள்ளேயே குர்ஆன்படியும் நாயகமவர்களின் சுன்னத்துப்படியும் தனித்தனியே தத்தம் வாதமே சரியென்று தஃவா செய்துகொண் டிருந்து, தங்களுக்குள் விகற்பங்களை உண்டுபண்ணிக் கொண்டே யிருந்தார்களென்பது ஓர் உண்மையான விஷயமாகும்.



---

*அஷாயிராக்களென்போர், ஹிஜ்ரீ 270-ம் ஆண்டில் ஜனித்த ஷைக் அபுல் ஹஸன் அலீ பின் இஸ்மாயீல் என்ப

இஸ்லாத்தில் எத்தனை விதமான மாறுபாடுகளுள்ள வகுப்பார்கள் உண்டா யிருந்தனர்? என்பதன் அட்டவணை இதுவரை உங்களுக்குமுன் எடுத்துக் காட்டப்பட் டிருக்கிறது. எனவே, இவ்வாறான பிரிவினைக்காரர்களுள்ளே ஏன் விகற்பங்கள் உண்டாய்க் கொண் டிருந்தன? எக்காரணத்திற்காக உண்டாய்க் கொண் டிருக்கின்றன? என்பதை நீங்கள் சிறிது ஆழ்ந்து கவனிப்பீர்களாயின், அன்னவரெல்லாம் ஒவ்வொரு காரியத்தையும் தங்கள் அமலில் செய்து காட்டுவதைவிடுத்து, மனோராஜ்யங்களினாலும், வெறும் வாய்ப் பேச்சுக்களினாலும் முடிவுபெறச் செய்து

---

வரைப் பின்பற்றியவர்க ளாவர். யமன் தேயத்தில் அஷ்அர் என்னுமொரு கபீலா இருக்கிறது. அதிலேயே இவர் தோன்றி யிருக்கின்றார். மேலும் அபூமூஸா அஷ்அரீ (ஸஹாபீ)யின் சந்ததியில் இவர் தோன்றி யிருக்கின்றார். இவர் யமன் பக்கத்தைச் சேர்ந்தவ ரென்றாலும், இறுதியாய் மரணமடையும் போது பகுதாத் பட்டணத்திலேயே யிருந்துவந்தார். ஹிஜ்ரீ 330-ம் ஆண்டில் இவர் காலகதி யடைந்தார்.

ஹனபிலாக்க ளென்போர், இமாம் அபூ அப்துல்லா அஹ்மத் பின் முஹம்மத் ஹன்பல் ஷைபானீ என்பவரைப் பின்பற்றியவர்க ளாவர். இவரும் ஹிஜ்ரீ 3-ம் நூற்றாண்டில் தோன்றியவரே யாவார். அன்றியும், இமாம் அபூஹனீபாவிலிருந்து மூன்றாம் தலைமுறையில் அபூமன்சூர் முஹம்மத் பின் முஹம்மத் பின் மஹ்மூத் மாதுரீதீ என்றொருவர் தோன்றியிருந்தார். அவரைப் பின்பற்றியவரே மாதுரீதிய்யாக்களென அழைக்கப் படுகின்றனர். அல்லா(ஹ்)வின் சிருஷ்டிகுணம் அவனுடைய விபாத்தைச் சேர்ந்ததா? வஸ்துக்களில் நன்மை யென்பதும் தீமை யென்பதும் ஷரீஅத்தின் சட்டதிட்டங்களினாலா? அல்லது அறிவின் பய



கொண்டு, அவரவரும் நன்கு சுகமாய் வாழ வேண்டுமென்று எண்ணியதனாலேதான் இத்தனை விதமான வீணான விதண்டா வாதங்களும் விகற்பங்களும் பிரிவினைகளும் உண்டா யிருக்கின்றன வென்பதை மிக நன்றாக உணர்ந்துகொள்வீர்கள்.

இனி இஸ்லாத்தில் முதன் முதலாக எப்படி யாரால் விகற்பங்கள் உண்டாயின? என்று கவனிப்போம். இஸ்லாம் தோன்றியது முதற்கொண்டே இஃது ஒவ்வொரு கிரியையும் அமலில் செய்துகாட்டுவதென்றும், இதைச்சார்ந்த வகுப்பார்கள் ஓர் உண்மையான உணர்ச்சியுள்ள உயிருள்ள வகுப்பார்களென்றும்

---

னலா? ஈமான் கொண்ட ஒவ்வொரு மனிதனும் நிச்சயமாக மூமினானவனென்று சொல்லலாமா? அல்லது "இன்ஷா அல்லா"வைச் சேர்த்துத்தான்சொல்ல வேண்டுமோ? என்பன போன்ற விஷயங்களில் மேலே சொல்லப்பட்ட மூவரும் அபிப்பிராயபேதங் கொண்டவர்களா யிருக்கின்றனர்.

இவ்வபிப்பிராயபேதமான விஷயங்களில் மாலிகீ, ஷாபியீ மதுஹபைச் சேர்ந்தவர்கள் இமாம் அபுல் ஹஸன் அஷ்அரீயின் அபிப்பிராயமே சரியானதென்று ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். எனவே, இக்காரணம்பற்றியே இவ்விரு மதுஹபுக்குடையவர்களும் தங்களை அஷ்அரிய்யாக்களென அழைத்துக் கொள்ளுகின்றனர். ஆனால், ஹனபீ மதுஹபைச் சார்ந்தவர்கள், இமாம் அபூமன்சூர்மாதுரீதியை (அவர் அபிப்பிராயத்தை) ஆதரித்து நிற்கின்றனர். ஆதலால் இவர்கள் தங்களை மாதுரீதிய்யாக்களெனச் சொல்லிக்கொண்டிருக்கின்றனர். ஹன்பலீகளோ தாங்கள் இமாம் அஹ்மத் பின் ஹன்பல் அவர்களையே பூரணமாக எல்லா விஷயத்திலும் ஆதரிப்பதாய்க் கூறிக்கொண்டிருக்கின்றனர்.

ஹாபிஸ் (பாகவீ)

உலகத்தவரால் உரைக்கப்பட்டு வந்தனர். அன்றியும், அப்படிப்பட்ட அராபியர்களும், அவர்களைபோன்ற மனப்பான்மை கொண்டவர்களும் மார்க்க சம்பந்தமாகவும் மத சம்பந்தமாகவுமுள்ள வியவகாரங்களுக்கல்லாது, தேசீய சம்பந்தமாகவும், இராஜீய விஷயமாகவுந்தாம் கத்தியைக் கையிலேந்தி யுத்தஞ் செய்து கொண்டிருந்தனர். ஆனால், காலத்தின் கொடுமையால் இஸ்லாத்துக்குள் அஜமிகள் (அரபிக ளல்லாதவர்) ஏராளமாய்ச் சேர்ந்தனர். இன்னவரின் குணங்களும், மனப்பான்மையும், நிலைமையும் எவ்வாறானவை? என்று மேலே நன்கு தெரிந்துகொண் டிருக்கின்றீர்கள். எனவே, இதற்கொப்ப இந்த அஜமிகள், தேசீய சம்பந்தமாகவும் இராஜீய விஷயமாகவு முள்ள ஒவ்வொரு காரியத்தையும் மார்க்கப் போர்வைக்குள்ளே கொணர்ந்து நுழைத்தனர். வாளாயுதங்களைக் கையிலேந்தி யுத்தஞ் செய்வதை விடுத்து, மனிதர்களினிடையே பற்பல விதமான சந்தேகங்களையும், ஏமாற்றத்தைக் கொடுக்கக்கூடிய அனேக ஆதாரங்களையும், வீணான வியாக்யானங்களையும் உண்டுபண்ணிவிட்டு, மூலக்கொள்கைகளில் எத்தனையோ விகற்பங்களையும் உண்டுபண்ணி விட்டனர். இவர்களுக்கு முன்னுண்டான அராபியர்கள் துஷ்டர்களை நிக்ரஹம் செய்து கொண்டிருந்தன ரெனினும், அவர்களின் இச்செய்கையினால் ஸ்தூல சரீரங்களே நாசமாய்க் கொண்டிருந்தன. ஆனால், இஸ்லாத்தில் பொதிந்து கிடந்த உண்மை உயிரான சமூக ஒற்றுமை யெனும் தாதுவானது அழிந்து போகாமல் அப்படியே அழகாய் நின்று கொண்டிருந்தது. அவர்களிடம் இஸ்லாத்தின் உணர்ச்சியானது மிக நன்றாய்ப் பதிந்து கிடந்தது. ஆனால், அஜமிகள் செய்த வீணான கோட்பாடுகளினாலும் வீணான விதண்டா வாதங்களினாலும் இஸ்லாத்தில் இணையில்லா விதமாய்க் காணப்பட்ட அசல் உயிரானதும் மார்க்கத்துக்கு மூல ஆவியானதுமா யிருந்த அமலின் உண்மையான சக்தியானது அழிந்துவிட்டது.

மேலும், எமது சுத்த சத்திய சன்மார்க்கமாய இஸ்லாமும், இவ்வுலகத்தின்கண் காணக் கிடக்கும் இதர மதங்களைபோல் சித்தாந்தம், அனுஷ்டானமெனும் இரண்டு பகுதிகளைக் கொண்டே உண்டாயிருக்கின்றது. எனினும், எமதிஸ்லாம் மதத்துக்கும் மற்றும் இதர சமயங்களுக்குமிடையே பாகுபாடுகளாவன என்னவெனின், எமது இஸ்லாம் சித்தாந்தமான மூலக் கொள்கைகள் ஏராளமாயிருக்க வேண்டுமெனப் பிரியங் கொண்டதாய்க் காணப்படவில்லை. *

* (உண்மையைக் கவனிக்குமிடத்து, மனிதர்களுக்குள் மூலக் கொள்கைகளும் அகீதாக்களின் எண்ணிக்கைகளும் எவ்வளவு குறைவாயும், உறுதியாயு மிருக்கின்றனவோ அவ்வளவும் நல்லதென ஆழ்ந்து கவனிப்போர் நன்குணர்வர்.) என்னெனின், அல்லா(ஹ்)வையும், அவனுடைய ரசூலையும், அவன் வேதத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுவே இஸ்லாத்தின் மூல முதற் கொள்கைகளாகும். இவற்றை ஏற்றுக்கொள்ளுகின்ற வகுப்பார்கள் முஸ்லிம்கள் தாம் என்று கொள்வோமாயின், அனேக மனிதர்கள் நம் நேயர்களான முஸ்லிம்களாகவே யிருப்பர். இப்படியில்லாது, தம் ஈமான்படி அமலில் செய்து காட்டாதவர்களும், பல ஆயிரக்கணக்கான சில்லறை விஷயங்களெல்லாம் இஸ்லாத்தின் மூல அகீதாவாய்க் கொள்ளவேண்டு மென்றால் இத்தரணியின் எண்ணிக்கைக் குட்பட்ட சில பெரியார்களைத் தவிர்த்து

எக்காரியமாயினும் மிக்க மனோ உறுதியுடனும், ஹிருதய சுத்தியுடனும் பற்றிக்கொண்டிருக்க வேண்டுமென்றே எமதிஸ்லாம் மக்களின்பால் அதிகம் வேண்டி நிற்கின்றது. ஆனால், மனிதர்களின் வியாதியடைந்து கெட்டுப்போன இயற்கையானது, சித்தாந்தங்களும், அகீதாக்களும், மூலக் கொள்கைகளும் அதிகமாகவும் விரிவாகவுமிருந்தால் நலமாயிருக்குமென வேண்டி நிற்கின்றது. இவ்விஷயத்தை நமது உலக இரக்ஷகரான முஹம்மது[ஸல்] அவர்கள் உணர்ந்திருந்தமையால், "மனிதர்கள் தங்களுக்குள் வீணான விதண்டா வாதங்களைச் செய்துகொண்டே யிருப்பார்கள். எப்படியெனின், ஆண்டவன் (தான்) எல்லா வஸ்துக்களையும் படைத்தான்; அந்த அல்லா(ஹ்)வை யாரே சிருஷ்டிசெய்தது? என்றும் தங்களுக்குள் தர்க்கம் செய்துகொண்டு கிடப்பார்கள்," என்று திருவாய் மலர்ந்தருளியதாய்

---

மற்றெல்லா முஸ்லிம் மக்களும் காபிர்களுடைய கூடாரத்திலேயே போய்ச்சேர வேண்டிவரும். உதாஹரணமாக, தாடி, தலைப்பாகை, ஜுப்பா தரித்துக்கொள்ள வேண்டும்; மலக்குகள் இன்னவிதமாய்த்தா னிருப்பார்கள்; கேள்வி கணக்குக்களெல்லாம் இப்படித்தான் நடைபெறும்; கப்ருக்குள் சவம் இவ்வண்ணந்தான் வேதனை செய்யப்படும்; கியாமத்தின்போது மக்களெல்லாம் இப்படித்தா னிருப்பார்கள்; ஆண்டவனை இப்படித்தான் காண்பார்கள்; ஸிராத்தென்னும் பாலம் இப்படித்தா னிருக்கிறது; நரகம் இவ்விதமாகத்தானுளது; மக்களெல்லாம் இங்ஙனமேதான் வேதனை செய்யப்படுவார்கள்; பிறகு சுவர்க்கம் இப்படித்தானிருக்கிறது; இதிலுள்ளவர் இன்னணமே உல்லாசமா யிருப்பார் என்பன போன்ற விஷயங்களை யெல்லாம் ஒருவர் எண்ணியபடியே சொல்லி, இவற்றை யெல்லாம் இதர முஸ்லிம்களென்



ஸஹீஹ்புகாரீயில் ஒருவாக்கியம் காணக்கிடக்கின்றது. இதுமட்டுமா? மற்றொருமுறை ரசூல்[ஸல்] அவர்கள் இந்த அகீதாக்களின் சம்பந்தமாகப் பின்காணும் வேத வாக்கியத்தை எடுத்தோதிக் காட்டினார்கள் என்றொரு நாயகவாக்கியமும் ஸஹீஹ் முஸ்லிமில் மிளிர்கின்றது:—

"அவனே உம்மீது இவ்வேதத்தை இறக்கிவைத்திருக்கின்றான். அதில் நேரான உறுதியான கட்டளைகளிருக்கின்றன; அவை வேதத்தின் மூலங்களாயிருக்கின்றன. மற்றுஞ்சில உருவகமுகமாயிருக்கின்றன. எனவே, எவருடைய ஹிருதயங்களில் கோணல் (மாசு) இருக்கின்றனவோ, அவர்கள் உருவகமுகமாய்க் கூறப்பட்டிருக்கும் அவைகளை, புரட்சியை நாடியும் அவற்றின் வீணான வியாக்கியானங்களை எண்ணியும் (அவற்றினைப்) பின்பற்றுகின்றனர். அவற்றின் (மெய்யான) வியாக்கியானத்தை அல்லா(ஹ்) அல்லாதவேறெவரும்

---

போரும் அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும்; இவைகளை யெல்லாம் அப்படியே ஒத்துக்கொள்ள வில்லையாயின், அவர்கள் முஸ்லிம்களா யிருத்தல் முடியாதென்று ஒருவர் கூறுவாராயின், அப்படிப்பட்ட இஸ்லாத்தின் கொள்கைகளுள் கூறியவரைத் தவிர்த்து வேறொருவரும் இருத்தல் அனேகமாக முடியாதென்பது மிகையாகாது. இவ்வாறாய குறுகிய கொடிய மனப்பான்மையைக் கொண்டவர்களே குறிப்பாக இத்தென்னாட்டின்பால் அதிகம் திரியக் காணப்படுகின்றனர். அகீதாக்கள் விஷயமாய மூலக்கொள்கைகளை எவ்வளவு சுருக்கமாக வைத்துக்கொண் டிருக்கிறோமோ அவ்வளவும் மகாபெரிய பிரயோஜனம் தரத்தக்கவையா யமைந்திருக்கின்றன வென்பதை அன்னார் உணரவேண்டும். ஹாபிஸ்-(பாகவீ).

[வேறு சிலர் இங்கு, அல்லா(ஹ்)வும், கல்வியில் மிக்க தேர்ச்சி பெற்றவர்களு மல்லாது வேறெவரும் அவற்றின் தாத்பரியங்களை அறிந்துகொள்ள மாட்டார்கள் என்று தாத்பரியங் கொள்வர். ஹாபிஸ்—பாகவீ] அறியார். மேலும் கல்வியில் தேர்ச்சிபெற்ற (பெரியார்கள்) 'அதை நாங்கள் ஒப்புக்கொள்ளுகின்றோம்; சகலமும் எமது ரப்பினிடமிருந்தே உண்டாகின்றன,' என்று கூறுகின்றனர். இன்னமும் புத்திசாலிகளே யல்லாது (வேறெவரும் இதை) உணர்ந்துகொள்ள மாட்டார்கள்—" (3: 6).

இதன்பின் இன்னமுமொரு வாக்கியத்தை எம்பிரான்[ஸல்] அவர்கள் கூறினார்கள். அஃதாவது:—

"உருவகமுகமாய்ச் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களைப் பற்றிக்கொண்டு, அவற்றின் சம்பந்தமாய் விவாதங்கள் பண்ணிக்கொண் டிருப்பவர்களை நீங்கள் காண்பீர்களாயின், அவர்களின் நாமங்களை (யே தாம் தண்டனைக்காக) ஆண்டவன் ஞாபகப்படுத்தி யிருக்கின்றான் என்பதை உணர்ந்துகொண்டு, அவர்களினருகே நெருங்காமல் (அல்லாஹ்வுக்கு) அஞ்சிக் கொள்வீர்களாக."

எனவே, சஹாபாக்களி லெவரேனும் இம்மாதிரியான வியவகாரங்களில் பிரவேசித்திருப்பின், அவ்விஷயம் எம்பிரான்[ஸல்] அவர்களுக்குத் தெரியுமாயின், அதிகம் சினங்கொண்டவர்களா யிருந்து வந்தார்கள். உதாஹரணமாக, திர்மதீயில் அபூஹுரைராவின் வாயிலாகவும், இப்னு மாஜாவில் அப்துல்லா பின் உமர் அவர்கள் மூலமாயும் பின்காணுமாறு ஒரு விஷயம் தெரியக் கிடக்கின்றது: "ஒருசமயம் எம்பிரான்[ஸல்]



அவர்கள் வெளியில் சென்றுகொண் டிருக்கும்போது, சில சஹாபாக்கள் வட்டமாய் உட்கார்ந்து வாக்குவாதங்களிலும் தர்க்கங்களிலும் ஈடுபட்டிருப்பதைக் கண்டு, 'நீங்களென்ன விஷயத்தைப்பற்றி வார்த்தையாடிக் கொண்டிருக்கின்றீர்கள்?' என்று வினவ, 'நாங்கள் தக்தீர் (அல்லாஹ்வின் கற்பனை) சம்பந்தமாய்ப் பேசிக்கொண் டிருக்கின்றோம்,' என்று விடை யிறுத்தார்கள். இதைக் கேட்டவுடனே நபி[ஸல்] அவர்கள் முகாரவிந்தம் சிவப்பு நிறமாய் மாறியது." (இந்த ஹதீதைக் கூறிய ராவீ சொல்லுகின்றார்:—நாயகமவர்களின் முகத்தில் மாதுளை விதைகள் பதிக்கப்பட் டிருந்ததேபோல் தென்பட்டன.) பிறகு நாயகம்[ஸல்] அவர்கள் சொன்னார்கள்:—"இவ்விஷயத்தைப் பேசவேண்டுமென்று நீங்கள் கட்டளையிடப்பட் டிருக்கின்றீர்கள்? இதற்காகத்தானா நீங்கள் இவ்வுலகில் சிருஷ்டிக்கப்பட் டிருக்கின்றீர்கள்? இவ்விஷயத்தைத்தானா யான் ஆண்டவனிடமிருந்து உங்களுக்குக் கொடுத் தனுப்பப்பட்டேன்? (இதற்காகவா யான் நுங்கள்பால் அனுப்பப்பட்டேன்?) குர்ஆனின் ஒரு வாக்கியத்தைக் கொண்டு மற்றொரு வாக்கியத்தின்மீது அறைகின்றீர்கள். நுங்களுக்கு முன்னுண்டான வகுப்பார்களும் இவ்வண்ணமான விஷயங்களி லீடுபட்டே நாசமாய்ப்போயினர். எனவே, இவ்வாறான வியவகாரங்களி லீடுபட வேண்டாமென உங்களை யான் கண்டிக்கின்றேன்."

மேலே சொல்லிக்கொண்டு வந்ததிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டுவதென்ன வெனின்: இஸ்லாம், அகீதாக்களென்னும் மூலக்கொள்கைகள் மிக

விரிவாயிருக்க வேண்டுமென்பதையும், இவற்றின் சம்பந்தமாய் ஒருவருக்கொருவர் வாக்குவாதம் செய்து கொண்டிருக்க வேண்டுமென்பதையும் விரும்பவில்லை என்பதுடன், பொதுவாகவும் சுருக்கமாகவும் உலகத்தினருக்கு அஃது எதை எடுத்துக் காட்டியிருக்கின்றதோ, அதைச் சகலரும் மிக்க உறுதியுடனும் உண்மையான ஹிருதயத்துடனும் நன்கு பற்றிக்கொண்டிருக்க வேண்டுமென்பதே இதன் முக்கிய நோக்கமாயிருந்து வருகின்றது. இதை ஒப்புக்கொள்ளும் விஷயத்தில் அரேபியாவில் வசித்துக்கொண்டுவரும் பாமர ஜனங்களுக்கும், ஆப்ரிகாவில் ஜீவித்துக்கொண்டிருக்கும் ஹபஷீகளுக்கும், யூனான் தேசத்தில் காணக்கிடக்கும் ஞானவான்களுக்கும், ஐரோப்பாவில் வாசஞ்செய்துவரும் பலாஸபர்களுக்கும் எவ்விதமான கஷ்டமும், சங்கடமும், யோசனையும், தயக்கமு மிருக்கக் கூடாதென்பதே எமது இஸ்லாத்தின் மற்றொரு விசேஷமான நோக்கமாய்த் தெரிகின்றது. உதாஹரணமாக, "ஒருசமயம் ஒரு மனிதன் ஒரு முஸ்லிமான அடிமையை உரிமை செய்ய வேண்டியவனானன். இதற்காக ஒரு ஹபஷீ அடியானைப் பிடித்துக்கொண்டு வந்து, 'இவன் முஸ்லிமா யிருக்கின்றானா? இவனை நான் உரிமை செய்யலாமா?' என்று நாயகம்[ஸல்] அவர்களின் சமுகம் வினவ, எம்பிரான்[ஸல்] அவர்கள் அந்தக் காட்டு மிராண்டியான ஹபஷீயை நோக்கி, 'ஆண்டவன் எங்கிருக்கின்றான்!' என்று வினவ, அந்த ஹபஷீ தன் விரல்களினால் வானத்தளவிலே உயர்த்திக்காட்டினான். இதைக் கண்ட வள்ளலவர்கள், 'இவன் முஸ்லிமாகவே யிருக்கிறான்; இவனைக் கொண்டுபோய் உரிமையாக்கிவிடும்' என்று திருவுள்ளம் பற்றினார்கள்."



அல்லாஹு அக்பர்! இஸ்லாத்தின் இந்தத் தாராளச் சிந்தையைச் சிறிது கவனிப்பீர்களாக. இது சமயமோ இஸ்லாம் என்பதன்மீது எத்தனையோவிதமான திரைகள் விழுந்து கிடக்கின்றன. நாயகமவர்களின் காலத்தே ஒருவன் இஸ்லாம் மதத்தை ஒத்துக்கொண்டு முஸ்லிமாய் விளங்குவான் வேண்டி ஆண்டவனிருக்கின்றானென்பதற்காக வானத்தின் பக்கல் விரலை உயர்த்தினால் போதுமானதா யிருந்தது. இது சமயமோ நமது கெட்ட காலத்தின் அறிகுறியாக நபியினால் இயற்றிக் கூறப்பட்டிருக்கும் ஒவ்வொரு வார்த்தையின், இல்லை, ஒவ்வோர் எழுத்தின்மீதும் (அகாயித் நஸபீயின் மீதும்) மனோ உறுதி கொள்ளவில்லை யாயின், எந்த முஸ்லிமும் தன்னை முஸ்லிமென்று சொல்லிக்கொள்ள இயலாது. என்னே ஆச்சரியம்!

நாம் முன்னம் எடுத்துக்காட்டி வந்ததிலிருந்து மார்க்கத்தைக் கொணர்ந்தவர்களான நபிமார்கள் எதைக் கொண்டுவந்து கொடுத்தார்களோ, எதைத் தங்களுடைய அமல்களினால் செய்து காட்டினார்களோ, எதை நமக்குப் போதித்துச் சென்றார்களோ, அவைகள்தாம் உண்மையில் நேரான மார்க்கமென்றும், அவைகளே மார்க்கங்களின் மூலக் கோட்பாடுகளென்றும் மிகத் தெளிவாய் விளக்கிக் காட்டிவந்திருக்கின்றோம். மேலும் நபிமார்கள் வரவேண்டியதற்கவசிய மென்னவெனின், மனிதர்களுடைய யுக்தியும் ஞானமும் இவர்கள் முக்தியடையும் மார்க்கங்களில்

உண்டாகும் அனேக சிக்கலான விஷயங்களை உணர்ந்துகொள்ளும் அபாரசக்தியை இயற்கையிலேபெருதன வாயிருக்கின்றன; இதன்பொருட்டே நாம் நபிமார்களை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண் டிருக்கிறோம். எனவே, இம்மாதிரியாக ஏற்படும் சங்கடங்களை மிக எளிதில் நீக்குவான்வேண்டி மனிதர்கள்பால் அன்பு பூண்டு மாசற்ற ஒரு பெரியாரைத் தன்னிடமிருந்து ரூஹுல் குதுஸ் அனுப்பிவைக்கிறது. இவ்வாறு தோன்றும் இப்பெரியார்கள், "மனிதர்கள் செய்துகொண்டு வரும் மாசுபடிந்த பாபமான காரியங்கள் இன்ன இன்னவை; எனவே, இவற்றைச் செய்துகொண் டிராதீர்கள். ஆனால், நீங்கள் புரியவேண்டிய கிரியைகள் இன்ன இன்னவை. இவற்றைச் செய்வீர்களானல் நுங்களின் இறுதி உலக வாழ்க்கையும் க்ஷேமமாயிருக்கும்" என்று போதித்துக்கொண்டிருந்தார்கள். இஃதல்லாது மனிதர்களின் புத்திக்கெட்டாத ஜின்னின் இரகசியங்களை யெல்லாமும் மனிதன் உணர்ந்துகொள்ள வேண்டிய தாவசியக மின்று. அன்றியும், அவற்றை உணர்ந்து கொள்ளுவதால் மானிடர்களின் மேலான வாழ்க்கைக் கொன்றும் பிரயோஜனப்படப் போவது மில்லை. தாங்களே விளங்கிக்கொள்ள முடியாத விஷயங்களைக் குறித்துப் புத்திசாலிகளான மனிதர்கள் சொல்லுவ தென்ன வெனின் :

"அதன் தாத்பரியத்தை (வலிந்து கொள்ளும் உரையை) ஆண்டவ னல்லாது வேறு யாரும் தெரிந்து கொள்ள மாட்டார்கள். கல்வியில் தேர்ச்சியடைந்தவர்கள், 'அதன்மீது பூரண நம்பிக்கை கொண்டிருக்கின்றோம்; சகலமும் எமதிறைவனிட மிருந்தே உண்டாயிருக்கின்றன,' என்று கூறுகின்றனர்."



இதனால் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய தென்னவெனின், நபிமார்கள் மனிதர்களுக்கு முக்கியமாக எதைச் செய்யும்படி சொல்லிச் சென்றார்களோ, இல்லை, போதித்துச் சென்றார்களோ, அதனைப் போதுமென்று கொள்ளாது, அன்னவர் கற்பித்துச் சென்றதைவிட மனிதர்கள் தங்களுடைய புத்தியின்படி சிலவற்றைக் கூட்டவோ, இல்லை, குறைக்கவோ செய்வார்களாயின், இவ்வளவுடன் நில்லாது, நபிமார்கள் மறைவான விஷயங்கள் சம்பந்தமாய் எத்தனை தூரம் விளக்கிச் சென்றார்களோ அது போதாதென்று மேன்மேலும் அதனை நன்கு விளக்கிக் காட்ட வேண்டுமென்று எண்ணங்கொண்டு ஆழமான விஷயங்களில் மனிதர்கள் அதிகம் நுழைவார்களாயின், இவர்கள் நபித்துவத்தின் பலத்தை உருக் குலைக்கின்றனரென்றே கூறுதல் வேண்டும். மேலுமிவர்கள், மனிதர்கள் பரிபூரணமடைவதற்கு எக்காலமும் நபியென் றொருவர் வரவேண்டியதே ஆவசியக மில்லை யென்றும் சாதாரண மனிதர்களின் புத்தியே தெய்வத்தின் நேரான பாதையை யடையப் போதுமானதா யிருக்கின்றதென்றும் தங்கள் யுக்தியைக் கொண்டு அமலால் செய்து காட்டிவிடலா மென்று எண்ணுகின்றார்கள். உண்மையைக் கவனிக்குமிடத்து, இஃது ஒரு தவறான அபிப்பிராய மென ஞானவான்களால் ஒப்புக்கொள்ளப்பட் டிருக்கின்றது.

(அன்பர்களே !) மார்க்க மென்பதென்ன வென்பதைச் சிறிது கவனிப்பீர்களாக. சமய மென்பதன் தாத்பரிய மென்னவென்று கவனிப்போமாயின், அது

மனிதன் தன்னுடைய காரியத்தை இரு லோகத்திலும் மிக்க வெற்றியுடன் நேரான மார்க்கத்தில் சீராக நிறைவேற்றிக் கொள்ளுதற்கு அத்தியாவசியமாய் வேண்டிய ஒரு மேலான ஜோதிபெற்ற சரியான விளக்கா யிருந்து வருகின்றது. எப்படியெனின், மனிதன் செய்யும்படியான ஒவ்வொரு காரியமும் பிரகிருதியுடன் (ஜடத்துடன்) சம்பந்தப்பட்டதாகவே தான் காணப்படுகின்றது. ஆனால், மக்களால் செய்யப்படுகின்ற சில காரியங்கள் பிரகிருதிக் கப்புறப்பட்டதாகவும் இருந்து வருகின்றன. எனவே, மார்க்கமென்பது, மனிதர்களுடைய புத்திக்கும் யுக்திக்கும் எட்டாமல் அப்புறம் நிற்கும் பிரகிருதிக்கு மேற்பட்ட விஷயங்கள் எவ்வளவு வேண்டியதா யிருக்கின்றதோ அவ்வளவை மாத்திரம் போதிக்கக் கூடியதாகவும், மக்களின் வாழ்க்கைக்கு முக்கியமாய் எம்மட்டும் வேண்டுமோ அம்மட்டுமே விளக்கிக் காட்டக் கூடியதாகவும் அமைந்திருக்கின்றது. இத்தகைய எமதபிப்பிராயத்தை இன்னமும் சிறிது விளக்கமாய் இங்குத் துலக்கிக் காட்டவேண்டிய தவசியமா யிருப்பதால் அதனைச் சிறிது விவரிக்கின்றோம். அதன் விவரத்தைப் பின்னே காண்பீர்களாக:—

அன்பீர்! மார்க்க மென்பது அகீதாக்க ளென்னும் மனோ உறுதியினாலும், இபாதாத் தென்னும் வணக்கச் செயல்களினாலும் ஒன்று சேர்ந்ததா யிருக்கின்றது—(முஆமலாத்தென்னும் இதர உலக காரியாதிகளும் உண்மையில் இபாதாத் தென்னும் வணக்கங்களில் சேர்ந்தனவாகவேதா யிருக்கின்றன). இதை மற்றொரு விதமாய்ச் சொல்லவேண்டுமெனின், தீன்



என்பது இல்மு அமல்—கல்வி (ஞானம்)செய்கை என்ற இரண்டு காரியங்களைக் கொண்டதா யிருக்கின்றது.

கல்வி ஞானம் என்பது இரண்டுவகையா யிருக்கின்றது: முதலாவது, பிரகிருதியினின்றும் கிரஹிக்கப்பட்டதா யிருக்கின்றது; இவ்வாறான ஞானம் பிரகிருதியையேதான் பற்றிக்கொண் டிருக்கின்றது. இதை நம் ஐம்புலன்களாலும் அனுபவத்தினாலும் நன்கு தெரிந்துகொள்ளலாம். இரண்டாவது பிரகிருதிக்கு அப்புறப்பட்டதா யிருக்கிறது. இதை அறிய வேண்டுமாயின், சிந்தனையினாலும், மனஎண்ணத்தினாலும், ஆலோசனையினாலும் தெரிந்து கொள்ள வேண்டியதா யிருக்கின்றது. உதாஹரணமாக, அக்கினி சுட்டுக் கரிக்கின்றது; இதை நமது பஞ்சேந்திரியங்களினால் நன்குணர்ந்து கொள்ளுகின்றோம். எனவே, எக்காலமும் தவறுதலாகவேனும் அக்கினியில் குதித்து விட மனந் துணியா தென்பது திண்ணம். இரண்டாவது பகுதியின் உதாஹரணத்தையும் கவனிப்பீர்களாக: 'மனிதன் மரண மடைந்ததன்பின் இரண்டாவது முறையும் அடுத்த ஜன்ம மெடுக்கின்றான்' என்று சொல்லுகின்றார்கள். ஆனால், இக் கொள்கையின்மீது பரிபூரண நம்பிக்கை கொண்டு ஒருவன் தன்னை மரண மடையச் செய்து கொள்வானா? (இஃது ஒரு முடியாத காரியமாகும். எனவே, பிரத்தியக்ஷமாய் மனிதன் கண்ணுறும் வஸ்துக்களின்மீது நம்பிக்கை வைப்பதே போல் பிரத்தியக்ஷமாய்க் கண்டுகொள்ள முடியாததன் மீது நம்பிக்கை வைக்கின்றவனாயில்லை என்பதை நன்கு தெரிந்து கொள்ளுகின்றோம்.)

நம்முடைய செல்வ வாழ்க்கை பிரகிருதி சம்பந்

தப்பட்ட இவ்வுலகிலேயே சம்பந்தப்பட் டிருக்கின்றது. நம்முடைய கிரியைகளும் செயல்களும் இவ் வுலகத்திலேயே வெளித் தோன்றுகின்றன. எனவே, மனிதர்கள் ஜெயமடைவ தென்பதும் அபஜெயமடைவ தென்பதும், சமூகத்தார் முன்னேற்ற மடைவ தென்பதும் க்ஷீணித்துப் போவ தென்பதும், மனிதர்களின் நிலைமை மாறுபா டடைவ தென்பதும் வித்தியாசப் பட்டுவிட்ட தென்பதும், இன்னமும் இவை போன்ற எத்தனையோ தோற்றங்க ளெல்லாம் பிரகிருதி சம்பந்தப்பட்டனவாகவும், சந்தேகமே ஜனிக்காத ஒரு மஹா பெரிய மன உறுதியைக் கொண்டனவாகவு மிருந்து வருகின்றன. இதனை நமது பஞ்சேந்திரியங்களின் மூலமாய் நன்கு தெரிந்துகொள்ளுகின்றோம். ஆனால், நமது பஞ்சேந்திரியங்களி னறிவிற்கு அப்புறப்பட் டவையாகவும், பிரகிருதி சம்பந்த மற்றவையாகவு முள்ள நாமறியாக் காரியங்களை ஆலோசனை செய்து, அவற்றின் உண்மைகள் இன்ன இன்னவைதாம் என்று கண்டுபிடித்துவிடலாம் என்று, அவ்வழியையே பின்பற்றி ஆராய்ந்துகொண்டு கிடப்பதிலொன்றும் பிரயோஜனமில்லை ; பயனுமில்லை என்பது திண்ணம்.

நம் பலாஸிபா (வாய் வேதாந்த சாஸ்திரம்) என்ன வெனின், பிரகிருதி சம்பந்த மில்லாது அப்புறப்பட்டுக் கிடக்கும் விஷயங்களில் நம் அறிவானது நிச்சயமற்ற தாகும் என்பதே. ஆனால், ஸயன்ஸின் (பிரத்தியக்ஷ தத்துவ சாஸ்திரம்) அனேக பாகங்கள், நம் அனுபவத்தினாலும், நமது ஐம்புல நுகர்ச்சிகளாலும் அனேகமாய் உண்மையானவையாகவே தெரிகின்றன. எனவே, நாம் மேலே கூறிய பலாஸிபா, ஸயன்ஸ் என்ற இரு



வகைகளுள் எதற்கு இவ் வுலகம் நன்றி செலுத்தக் கடமைப்பட் டிருக்கின்ற தென்பதைக் கவனிப்பீர்களாக.

யூனான் தேசத்தில் முதன் முதலாய்த் தோன்றிய பலாஸிபியான தாலீஸி*லிருந்து பேகன் என்பவரின் காலம்வரை ஏறக்குறைய இரண்டாயிரத்து ஐந்நூறு வருடங்கள் மட்டும் பலாஸிபா இருந்துகொண் டிருந்த தாய்த் தெரிகின்றது. ஆனால், அதன் பயனாய் இவ் வுலகம் என்ன பிரயோஜன மடைந்ததென்று தெரிய

---

* தாலீஸ் யூனான் தேசத்துப் புராதன பலாஸபர். மேலும் யூனான் பிரதேசத்தில் பிரசித்தி யடைந்த ஏழு மஹான்களுள் இவரும் ஒருவராவர். அங்குள்ள பிஸிகல் ஸ்கூலின் ஆசிரியரா யிருந்தார். இயற்கை என்ன வென்பதை மிகவும் ஆராய்ச்சி செய்தார். எனவே, இவர் தம்முடைய ஆராய்ச்சியில், சகல உலக வஸ்துக்க ளெல்லாம் தண்ணீரினின்றுமே தோன்றுகின்றன ; மீண்டும் அவைக ளெல்லாம் தண்ணீராகவே போய்ச் சேர்ந்து விடுகின்றன. அஃதாவது, தண்ணீராகவே மாறிவிடுகின்றன எனத் தீர்மானித்தார். இவர் கி. மு. 7-ம் நூற்றாண்டில் தோன்றியவராவார்.

பேகன் என்பவர் லண்டனில் ஜனித்தவர். நிகோலாஸ் பேகனுடைய குமாரர். லண்டன் கேம்பிரிட்ஜ் கலாசாலையில் கல்வி பயின்றார். தம்முடைய 21-ம் வயதில் பாரட்லா பரீக்ஷையில் தேறினார். இவர் சயன்ட்டிஸ்ட்டாயு மிருந்தார். பின்னர்ப் பார்லியமெண்ட்டுக்கும், பிரிவீ கவுன்ஸிலுக்கும் அங்கத்தவரானார். இவர் பின்னர்த் தம்முடைய பலாஸபாவின் ஞானத்திலேயே காலத்தைக் கடத்திப் பின்னர்ப் பெரிதும் பெயர் பெற்று விளங்கினார். இவர் கி. பி. 1561 முதல் 1626-ம் ஆண்டுவரை இவ்வுலகில் ஜீவித்துக்கொண்டிருந்தார்.

வில்லை. ஆனால், ஸயன்ஸ் என்பது (நல்ல விதமாய்த்) தோன்றி இன்னமும் சரியாய் மூன்று நூற்றாண்டுகளும் செல்லவில்லை. இதற்கிடையிலே இந்த ஸயன்ஸின் பயனாய் இவ்வுலகமே ஒருமஹா பெரிய மாறுதலை யடைந்து கிடக்கின்றது. இதைக் கவனிக்கும்போது, மனிதனால் உணர்ந்துகொள்ள முடியாத அவ்விஷய சம்பந்தமாய், 'அஃது என்ன? இஃது எப்படி?' என்று வேதாந்தத்தால்மட்டும் ஆராய்ச்சி செய்துகொண் டிருப்பது ஒரு வீண் வேலையென்றே நன்கு புலனாகின்றது. இஃது உண்மை என்பதற்கு, நமக்கு முன் சென்ற பெரியார்களின் காலங்களிலெல்லாம் பலாஸபா என்னும் இதனால் ஒரு பிரயோஜனமும் உண்டாகாம லிருந்ததே போதிய சாக்ஷியமா யிருந்து வருகின்றது. எனவே, மேலே சொல்லப்பட்டவைகளி லிருந்து நாம் உணர்ந்துகொள்ள வேண்டுவ தென்னவெனின், நமது ஞானத்துக்கும், ஐம்புலனுக்கும் எட்டாத ஒரு வஸ்துவைக் குறித்து எவ்வித முடிபும் நாம் செய்யமுடியா தென்பதே.

இந்த இரகசியத்தையே இது சமயம் ஐரோப்பா நன்குணர்ந்துகொண் டிருக்கின்றது. இதையேதான் எமதிஸ்லாம் தோன்றியவுடன் வெளிப்படுத்தியது. ஆனால், என் செய்யலாம்? இம்மாதிரியாய் நடந்து செல்வதை, அஹ்லுஸ் ஸுன்னதீகள் தவிர இஸ்லாத்தில் தோன்றிய இதர வகுப்பார்க ளெல்லாம் நாசமடையச் செய்து விட்டனர். மேலும் அவர்கள் அதன்படி அமல் செய்யாத காரணத்தினால்தான் இம்மாதிரியான க்ஷீண தசையை இதுசமயம் அடைந்திருக்கின்றனர். ஆனால், 'அஹ்லுஸ் ஸுன்னத்' என்று சொல்லிக் கொள்ளும் இவர்களின் நேரானதும் உண்



மையானதுமான பாதை இரண்டு மூல அஸ்திபாரங்களின்மீது நிற்கின்றது. முதலாவது, எம்பிரான்[ஸல்] அவர்கள் அகாயித் என்னும் மன உறுதி நம்பிக்கையின் சம்பந்தமாகவும், அஃமால் என்னும் கிரியைகள் சம்பந்தமாகவும் எவ்வளவுதூரம் எம்மாத்திரம் விளக்கிச் சென்றிருக்கின்றார்களோ, அவ்வளவையே இன்னவர்கள் எடுத்துக் கையாள வேண்டு மென்பதே. இப்படியில்லரது, இந்த அஹ்லுஸ் ஸுன்னதீ என்பவர்களும் நாயக மவர்களின் இவ் வார்த்தைகளின்படி நடந்து செல்லவில்லையாயின், இவர்களும் வேறான பாதையிலேயேதான் சென்றுகொண் டிருக்கின்றனர் என்று கொள்ளப்படல் வேண்டும். எனவே, அஹ்லுஸ் ஸுன்னத் என்பவர்களது மூலக் கொள்கை இரண்டி லமைந்து கிடக்கின்றது:—

(1) எமது வள்ளலவர்கள்[ஸல்] அகாயித் சம்பந்தமாகவும் அஃமால் சம்பந்தமாகவும் எம்மாத்திரம் சொல்லிச் சென்றிருக்கின்றார்களோ, அதில் ஒரு சிறிதையேனும் கூட்டவோ அல்லது குறைக்கவோ கூடாது.

(2) அகாயித் அல்லது அல்லா(ஹ்)வின் நிர்க்குணப் பிரம்ம சம்பந்தமாகவும், அவனது குண விசேஷங்கள் சம்பந்தமாகவும், குர்ஆனும் எம்பிரான்[ஸல்] அவர்களும் எம்மாத்திரம் விளக்கி யிருக்கின்றார்களோ, அதன்படி ஈமான் கொள்ளவேண்டியது அத்தியாவசியமாகும். ஒருவன் தன்னுடைய புத்தியைக் கொண்டும் யுக்தியைக் கொண்டும் இவற்றிற்கு வியாக்கியானங்கள் செய்வது கூடாது. இவ்வண்ணம் யாரேனும் சொல்வாராயின், தன்னை முஸ்லிம் என்று

சொல்லிக் கொள்ளுவதற்கு அபிப்பிராய பேத மான அந்த வியாக்கியானப்படி ஒவ்வொருவனும் ஈமான் கொள்ளவேண்டியது ஆவசியகமு மில்லை. ஆனால், இவ்வாறான வியாக்கியானங்கள் மனிதர்களை வேறான வழியில் கொண்டு சேர்ப்பதற் கொரு சாத னமா யிருக்கலாம்.*

நாம் மேலே சொல்லிக்கொண்டு வந்த அத்தனை பிரிவினைக்காரர்களும் இப்பொழுது மேலே காட்டிய இரண்டு மார்க்கங்களையும் கைக்கொண் டிருப்பார்க ளாயின், இதுசமயம் நீங்களெல்லாம் கண்கூடாய்ப் பார்த்துக்கொண் டிருப்பதே போன்ற அபார அபிப் பிராயபேதங்கள் இஃதிகாதாத் தென்னும் மனோஉறுதி வியவகாரங்களில் உண்டாயிரா வென்பது திண்ணம். அன்றியும், இம்மாபெரும் பிரளயத்தினால் இஸ்லாத் தின் முக்கிய அம்சங்கள் இப்பொழுதிருப்பதேபோல் உலுக்கி அசைக்கப்பட்டு மிராது. மேலே சொன்ன

---

* ஆனால், இதுசமயம் மக்களெல்லாம் ஒவ்வொருவரும் எதையேனும் வாயில் வந்ததை யெல்லாம் உளறிக் கொட்டிக் கொண்டு, தாங்கள் சொல்வதுதான் சுன்னத் ஜமாஅத் கொள்கை யென்றும், இதரர் சொல்வதெல்லாம் தவறான தென்றும் வாய்கூசாது விளம்பிக்கொண் டிருக்கின்றனர். இதில் விசேஷ மென்னவெனின், இப்படிக் கூறிக்கொண் டிருக்கும் இவர்கள், எம்பிரான்[ஸல்] அவர்கள் மார்க்க விஷ யத்தில் எத்துணைத்தூரம் பேசவேண்டும்? எதைப் பற்றி வார்த்தையாடுவது கூடாது? என்று திருவாய்மலர்ந் தருளிச் சென்றிருக்கின்றார்களோ, அவைகளுக்கும் இன் றிருக்கும் ஒருசிறிதும் சம்பந்தமில்லாம லிருப்பதுதான்.

ஹாபிஸ்-பாகவீ



அபிப்பிராயபேதங் கொண்ட அக்கூட்டத்தினர் ஏன் இவ்வாறு பற்பலவிதமான அபிப்பிராய பேதங்களை உண்டுபண்ணிக் கொண்டு கிடந்து, உலகத்தையே கெடுத்துக்கொண் டிருந்தார்கள்? என்பதை உணர்ந்து கொள்ள எண்ணங் கொள்வீர்களாயின், எது விஷயத் தில் குர்ஆன் மௌனம் சாதித்திருக்கின்றதோ, எவ் விஷயம் மனிதர்களுக்கு வேண்டியது அவசியமில்லை என்று ரசூல்[ஸல்] அவர்கள் எண்ணினார்களோ, அந்த விஷயத்தை அதிகம் ஆழ்ந்து கவனிக்கப் புகுவதே அதன் முதன்மையான காரணமென்பதை நன்கு தெரிந்துகொள்வீர்கள். இவ்வியவகாரங்களோ முதன் முதலாய் இவனது ஞானத்தில் வந்து நுழைவதாக வும், அவற்றை இவன் உணர்ந்துகொள்ளக் கூடியன வாகவுமே யில்லை. இரண்டாவதாக, அவ்விஷயங்களைத் தெரிந்துகொள்வதால் மனிதனுக்கொன்றும் பிரயோ ஜனப்படப் போவதில்லை. எனவே, இம்மாதிரியான வீணான வியவகாரங்களில் மனிதன் தலையிட்டுக் கொள் வதனாலேதான் அனேக விதமான குழப்பங்களும் விதண்டா வாதங்களும் நாளுக்குநாள் அதிகப்பட்டுக் கொண்டே வந்திருக்கின்றன.

நமது ஷரீஅத் ஆண்டவன் சம்பந்தமாய்ச் சொல்லி யிருப்ப தென்னவெனின், அவன் ஒருவனா யிருக்கின்றான்; அவன் முன் எப்பொழுது மிருந்து வந்தான். பின்னே எக்காலமு மிருந்து வருவான்; மேலும் அவன் சகல சற்குணங்களையும் கொண்டவனா யிருக்கின்றான் என்பதே. இதனை அப்படியே ஒப் புக்கொண்டதுடன் நில்லாது, சில வீணர்கள் சொல் லப் புறப்பட்ட தென்ன வெனின், ஆண்டவன் ஒரு

வன் என்றால் அவன் எந்த முறையில் ஒருவனாயிருக்கின்றான்? அவனுக்கு எத்தனையோ குணவிசேஷங்களிருக்கின்றன; அவைகளுள் எத்தனை குணங்கள் அவனுடைய நிர்க்குணப் பிரம்மத்துள் சேர்ந்தனவாயிருக்கின்றன? எத்தனை வெளிப்பட்டனவாய் (சகுணமாய்) இருக்கின்றன? இக்குண விசேஷங்களெல்லாம் அவனுடன் சேர்ந்தனவா? அல்லது வெளிப்பட்டனவா? அவனேபோல் இக்குணங்களும் ஆதியானவையா? அல்லவா? ஆதியானவைதாமென்று கொள்ளப்படுமாயின், பிறகு ஆதியந்தமில்லாத எத்தனையோ பொருள்கள் ஆண்டவனுடன் நித்தியத்தில் கூட்டாய் விடுகின்றன. ஆனால், உண்மையில், ஆதியும் அந்தமுமில்லாமல் நித்தியனாய் நின்றிலங்கக்கூடியவன் ஆண்டவன் ஒருவனாகவேதா னிருந்து வருகிறான் என்பதை உலகமக்களெல்லாம் உணர்ந்துகொண்டே யிருக்கின்றனர். இல்லை, இக்குணங்களெல்லாம் புதிதாய் உண்டாயினவென்று சொல்லப்படுமாயின், ஆண்டவன் புதிதாய் உண்டாய இக்குணங்கள் தங்குதற்குரிய ஸ்தலமாய்த் திகழ்கின்றான் என்றேற்படும். அன்றியும், புதிதான ஒரு விஷயத்தைத் தன்னகத்தே கொண்டிருக்கும் அவ்வஸ்துவும் புதிதாகவேதா னிருக்கவேண்டுமென்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட் டிருக்கின்றது. எனவே, இதன்படி (நவூது பில்லா) ஆண்டவனும் புதிதாய் உண்டானவனென்று ஏற்படுகின்றது. இல்லை, இக்குணங்களெல்லாம், அவனுடைய நிர்க்குணப் பிரம்மத்துள்ளேயேதா னிருக்கின்றன; இவை தனிமையாயில்லை என்று சொல்லப்படுமாயின், இக்குணங்களெல்லாம் அவனது நிர்க்குணப் பிரம்மத்தின்



ஒரு பகுதியா யிருக்கின்றனவா? அல்லது நிர்க்குணப் பிரம்மமாகவேதா மிருக்கின்றனவா? இதனை எப்படியேற்றுக்கொண்ட போதினும், ஆண்டவன் ஒருவன் தனியா யிருந்ததெல்லாம் போய்ப் பற்பல பொருள்களைக் கொண்டு சேர்க்கப்பட்டவனாக ஆகின்றான். எனவே, ஆண்டவன் தாத் (நிர்குணப்ரம்மம்) ஸிபாத் (சற்குணங்கள்) எப்படிப்பட்டதா யிருக்கின்றன. தாத்துக்கும் ஸிபாத்துக்கும் எப்படிப்பட்ட சம்பந்த மிருக்கின்றது? இரண்டும் காலத்திலும் கற்பனையிலும் ஒன்றுபட்டனவா? வெவ்வேறானவா? வென்று கவனிக்கப்புகின், இரண்டிலொன்று இல்லாமற் போகவேண்டியது அத்தியாவசியமா யிருக்கின்றது என்றேற்படுவது நிச்சயம். இதுவுமல்லாமல், அவனுடைய ஞானம், சக்தி, கேள்வி, பார்வை, நாட்டம் முதலியவைகளெல்லாம் பலவா யில்லாது, ஒருங்கே ஒன்றுசேர்ந்துவிடவேண்டியனவா யிருக்கின்றன என்றும் வீணான வார்த்தைகளை விளம்பிக்கொண் டிருக்கின்றனர்.

இதுமட்டுமா? ஆண்டவன் சம்பந்தமாய் முகம், கை, கால் முதலியவைக ளிருப்பதேபோல் நமது குர்ஆனினின்றும் ஹதீதினின்றும் சில சொற்கள் சுட்டிக் காட்டிக்கொண்டிருக்கின்றன. இவ்வார்த்தைகளெல்லாம் சாதாரணமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றனவா? அல்லது உருவகமுகமாய் உரைக்கப்பட் டிருக்கின்றனவா? என்று விவாதம் பண்ணச் சிலர் எத்தனம் செய்கின்றனர். இதுவுமல்லாமல், வேறு சிலர் சொல்வதென்ன வெனின், 'ஆண்டவன் அர்ஷின்மீது சரியா யிருக்கின்றான்' என்று நம் குர்ஆன்பால் அறியக்கிடக்கின்றது; மேலும் நீங்கள் எந்தப் பக்கம் திரும்பு

கின்றீர்களோ, அந்தப் பக்கமெல்லாம் அல்லா(ஹ்)வின் முகமிருக்கின்றது என்றும், ஆண்டவன் உங்களுடைய கழுத்துப்பட்டை நரம்பைவிட அதி சமீபத்திலிருக்கின்றானென்றும் அதே குர்ஆனில் பெற்றுக் கொள்ளப்படுகின்றன. இதையெல்லாம் கவனிக்கும்போது, அவன் எங்கேனும் ஓரிடத்திலிருக்கின்றானா? இல்லையா? வென்று தெரிந்துகொள்ள முடியவில்லை. இப்பொழுது கூறியதில் முதன்மையாயிருக்கும் வார்த்தையைக் கவனிக்குமிடத்து, அவன் சரீரங்கொண்டவனென்பதும், அல்லா(ஹ்) குறிப்பான ஓரிடத்திலிருக்கின்றான் என்பதும் ஏற்படுகின்றன. இரண்டாவது வார்த்தையைக் கவனிக்கும்போது, ஒரு குறிப்பிட்ட பொருள் சகல இடங்களிலும் இருந்துகொண்டேயிருக்கின்றது என்பது ஏற்படுகின்றது. இஃது ஓர் அறியாத்தன்மையான வார்த்தையாகும் என்று வாய்கூசாமல் கூறிக்கொண்டிருக்கின்றனர்.

இதனுடன் நின்றுவிட்டார்களென்று எண்ணுகின்றீர்கள்? இல்லை! இறுதிநாளின்போது நல்லடியார்களின் கண்களுக்கு ஆண்டவன் புலப்படுவான் என்றொரு வார்த்தை காணக்கிடக்கின்றது. இதனை இப்படியே ஒத்துக்கொண்டு விடுவோமாயின், ஆண்டவனும் ஒரு வஸ்துவாகவே இருந்துதானாகவேண்டுமென்று வந்துவிடுவதுடன் ஜடசம்பந்தப்பட்ட அல்லா(ஹ்) எங்கேனும் ஓரிடத்தில் குறிப்பாய் இருந்துதானாகவேண்டும்; அவன் கண்ணுக்குத் தென்படுவானென்றால் நாம் பார்த்துக்கொண்டிருக்கின்ற இந்த நேத்திரங்களில் தென்படுவானா? அல்லது வேறேதேனும் புதிதாய்க் கொடுக்கப்படும் அறிவுகளினால் பார்க்



கப்படுவானா? மானிடர்களுடைய இக்கண்களுக்குப் புலப்படுவானென்றால், ஆண்டவனுக்குச் சரீரமும், நிறமும், மட்டுப்பட்ட ஓர் எல்லையும் இருக்கவேண்டியது அத்தியாவசியமாயிருக்கின்றது. இல்லை, இக்கண்களினால் கண்டுகொள்வது முடியாதென்றால், வேறெப்படி, எதன் வாயிலாய் அவனைக் காண்பதென்பது நமது ஞானத்துக்கு எட்டக்கூடியதாயில்லை என்று ஒருபலர் கூறிக்கொண்டிருக்கின்றனர்.

இது சம்பந்தமாய் நமது ஷரீஅத்தைக் கவனிக்கும்போது, ஆண்டவன் இவ்வுலகைச் சிருஷ்டித்தான்; இவ்வுலகம் அல்லா(ஹ்)வினால் படைக்கப்பட்டது என்று கண்டுகொள்ளுகிறோம். ஆனால், ஒரு சிலர் இவ்வளவுடன் நில்லாது, இவ்வுலகை உண்டுபண்ணுவதற்கு அல்லா(ஹ்) பரிபூரண காரணமாயிருந்தானா? அல்லது ஏதேனும் குறைவாகவுமிருந்தானா? ஆண்டவன் பரிபூரண காரணமாயிருந்தானென்றால், காரணம் பரிபூரணமாயிருக்கும்போது காரியமும் உடனே ஆய்விடவேண்டும்; ஒரு சிறிதேனும் தாமதித்திருப்பது கூடாது. இதன்படி ஆண்டவன் எப்பொழுது முதல் இருந்து வருகின்றானோ, அஃதேபோல் இவ்வுலகமும் புதிதாயில்லாது ஆதியந்தமற்ற பூர்விகப் பொருளாய்த்தான் போய்விட வேண்டியதாயிருக்கின்றது. இல்லை; ஆண்டவன், இவ்வுலகம் உண்டாவதற்குப் பரிபூரண காரணமாயில்லையென்று கொள்ளப்படுமாயின், சிருஷ்டிகர்த்தாவாகிய அவ்வாண்டவனுடன் இன்னமுமொரு வஸ்துவின் உதவியைச் சேர்க்கவேண்டியது அத்தியாவசியமென்னப்படுகின்றது எனப் பிரயோஜனமில்லா வாதங்களையெல்லாம்

செய்கின்றனர். இவ்விரண்டும் நமது ஷரீஅத்தின்படி ஒரு தகாத காரியமா யிருந்துவருகின்றது.

இவ்வண்ணமே எமது குர்ஆனைக் கவனிக்கும் போது, சகல செயல்களும் ஆண்டவனுடைய உத்தரவைக்கொண்டே உண்டாகின்றன என்று தெரிந்து கொள்ளுகின்றோம். ஆனால், செயல்க ளெல்லாம் ஆண்டவனின் உத்தரவைக் கொண்டு மாத்திரம் உண்டாய்க்கொண் டிருக்கின்றனவா? அல்லது இக்காரியங்கள் உண்டாவதில் அடியானுடைய செயல்களுக் கேதேனும் சம்பந்தமுண்டா? இல்லையா? அடியானுக் கெவ்விதமான சம்பந்தமுமில்லை. ஆண்டவன் நினைத்தபடியே தான் ஒவ்வொன்றும் உடனுக்குடன் உண்டாய்க் கொண்டிருக்கின்றதெனின், அடியானுக்கு எவ்விதத் திராணியுமின்றி, இவன் ஆண்டவனால் கட்டாயப்படுத்தப்பட்ட ஒரு சிலையேபோலிருக்கின்றா னென்னும் விஷயம் அவசியம் உண்டாய்விடும். இப்படியில்லாது அடியானுக்கும் செயலுக்கும் காரியத்தில் சம்பந்தமுண்டென்றால், தன் காரியத்துக்குத் தானே சிருஷ்டிகர்த்தாவாய்ச் சமைகிறான். எனவே, இது சமயம் எல்லாக் காரியமும் ஆண்டவன் செயலால்தான் உண்டாகின்றனவென்பது தகாரான விஷயமாய் வந்து முடிகின்றது.

மேலே சொல்லிக் கொண்டுவந்த அத்தனைவிதமான மார்க்கங்களையும், பிரிவினைகளான விஷயங்களையும், உலகின்கண் காணப்படும் வர்க்கத்தினர்களு ளனேகர் தங்கள் நோக்கங்கள்படி கைக்கொண்டவர்களாகவே தாம் இருந்து வருகின்றனர். மேலும், மேலே காட்டிய அத்தனை விதமான விஷயங்களும் மனிதன்



தனது குயுக்திக் கற்களால் கட்டிய ஒரு கோட்டையாகும். அவற்றுள் ஏதேனு மொன்றாவது மனத்தைத் திருப்தி செய்யக்கூடியதா யிருக்கின்றதா? என்பதை நீங்களே சிந்தனை செய்து பாருங்கள். மேன்மேலும் சந்தேகங்க ளுண்டாய்க்கொண்டு போகின்றன வல்லாது, ஒரு சிறிதும் அவ்விஷயங்களினால் பிரயோஜனமில்லையென்பது வெள்ளிடைமலை. இவ்வாறு அவ்விஷயங்கள் ஏன் வந்து முடிகின்றன வெனின், எவ்விஷயத்தைக் குர்ஆன் தெளிவாகவும் விளக்கமாகவும் சொல்லாம லிருக்கின்றதோ, அதனை நாம் நன்கு விளங்கிக்கொண்டுவிட வேண்டுமென எண்ணங் கொள்வதே அதன் முக்கிய காரணமா யிருந்துவருகின்றது. இம்மாதிரியான விஷயங்களை உணர்ந்துகொள்ள நமது ஞானங்களுக்குப் போதிய சக்தி இல்லாம லிருந்து கொண் டிருக்கின்றது. இக்காரணம் பற்றியேதான் மனிதர்களுக்கு எவ்வளவு தூரம் ஒரு விஷயத்தைச் சொல்லவேண்டுமோ அத்துணைத்தூரம் விளக்கமாகவும் சுருக்கமாகவும் எமது குர்ஆன் விளக்கிக் காட்டியிருக்கின்றது. இல்லை, குர்ஆன் விளக்காததை எப்படியேனும் தேடித் தெரிந்து கொள்வதால் மனிதர்களுக் கேதேனும் இலாபமுண்டா வென்றால், அஃதும் இல்லையென்றே நிச்சயமாய்த் தெரிகின்றது.

மேலே காட்டி வந்தபடி யுண்டான விதண்டாவாதங்களிலெல்லாம் நாம் தலையிட்டுக் கொள்ளாது, அல்லா(ஹ்) தனது குர்ஆனிலும், நமது ரசூல்[ஸல்] அவர்கள் தங்கள் மேலான வாக்கியங்களிலும் எம்மாத்திரம் விளக்கிச் சொல்லியிருக்கின்றார்களோ, அம்மாத்திரத்தையேநாம் கடைப்பிடிப்போமாயின், அது நமக்கு

ஒரு மஹா பெரிய கோட்டையேபோல் பாதுகாப்புப் பிரயோஜனத்தைத் தரும் என்பது திண்ணம். இம் முறையைக் கொள்வதனுல் நாம் அனேகவிதமான ஆபத்துக்களில் சிக்கிக்கொள்ளாமலும் தப்பிக்கொண்டு விடலாம்; நமது ஞானமும் அறிவும் கெட்டுப் போகாது. ஷரீஅத்துக்கு விரோதம் பண்ணுகின்றோம் என்று உலகத்தார் சொல்லும் இழிசொல்லுக்கு நாம் ஆளாகோம். பின்னர் நம் யுக்தியினுல் உண்டுபண்ணிக் கொண்ட விஷயங்களெல்லாம், இஸ்லாமிய ஷரீஅத்தைச் சேர்ந்த முக்கியமான விஷயமென்று நாம் சொல்லத் துணியோம். முன் சென்ற பல அபிப்பிராயபேதமுள்ள முஸ்லிம்களோ, தங்களின் புத்தியும் பலாஸிபாவும் ஏதேனுமொரு விஷயத்தைக் குறித்து என்ன விடை யளிச்கின்றதோ, அதனை அப்படியே ஒப்புக்கொண்டு, அதுவும் மார்க்கத்துக்கு முக்கியமான ஓர் அம்சமா யிருக்கின்ற தெனக் கூறினர். இதுவே இவர்கள் செய்த முதன்மையான தவறுதலா யிருந்து வருகின்றது.

அஷாயிரா வென்னும் கூட்டத்தவர் எந்தப் பக்கமும் சாய்ந்துவிடாது நடுநிலைமையி லிருந்துகொண்டு, நமது இஸ்லாத்துக்கு நல்ல தொண்டு செய்பவர்களே போல் தாம் காணப்பட்டனர். என்றுலும் முஸ்லிம்களின் கெட்ட காலத்துக் கறிகுறியாக இந்த அஷாயிரா வென்னும் கூட்டத்தவர்களும், பின்னத்தை ஒத்துக் கொள்ளாத ஓர் அணு உண்டென்றும், தப்ரா (திடீரென உண்டாய்விடுதல், சேர்ந்து விடுதல்) என்னும் வியவகாரங்களிலும், ஆண்டவனைப் பார்ப்பதற்குண்டான காரணங்களிலும், மனிதன் தன் திராணியுட



னேயே ஒவ்வொரு காரியத்தையும் செய்து கொண்டிருக்கின்றுனென்றும், இன்னமும் இஃதே போன்ற எத்தனேயோ அனுவசியமான வியவகாரங்களிலும் ஈடுபட்டதுடன் நில்லாது, இவையனைத்தையும் இஃதிகாதாத் தென்னும் மனே உறுதிக் கொள்கையிலே கொணர்ந்து சேர்த்தும் வைத்து விட்டனர். இக்காரணம் பற்றியேதான் நாம் அகாயித் சம்பந்தமான எந்தக் கிரந்தத்தைக் கையிலெடுத்தாலும், அதில் ஒரு பகுதி இம்மாதிரியான வீணை வியவகாரங்களினுல் நிரப்பப்பட்டிருப்பதை நாம் கண்டு கொள்ளுகிறோம். இந்த அஷாயிராக்கள், எவ்விஷயத்தை நமது குர்ஆனும் ஹதீதும் உண்டென்றே இல்லையென்றே தீர்மானஞ் செய்யாது, அப்படியே மௌனமாக விட்டிருக்கின்றனவோ, அவ் விஷயத்தில் இவர்களும் மௌனம் சாதித் திருப்பார்க ளாயின், நன்றுயிருந்திருக்கும். அப்படியே மக்கள் பற்பல விஷயங்களிலும் தங்களுடைய அபிப்பிராயத்தை ஓட்டி யிருந்தாலும் தங்கள் சொந்த அபிப்பிராயங்களை யெல்லாம் மார்க்கத்தின் மூலக் கொள்கைகளான அகீதாக்களுள் கொண்டு சேர்க்காமலிருந்தால் நன்மையா யிருந்திருக்கும். ஒருவிஷயம் தெளிவாக மனிதர்களுக்கு விளக்கிக் காட்ட வேண்டுமென்று நமது ஷரீஅத்தி லிருக்குமாயின், அது நன்கு விளக்கிக் காட்டப்பட்டே யிருக்கும். மேலே கண்ட சந்தேகங்களெல்லாம் மார்க்க சம்பந்தமாக அத்தியாவசியமானவா யிருந்து எமது ஷரீஅத்தும் அவற்றை விளக்கிக்காட்டாமல் மௌனமா யிருந்திருக்குமாயின், எமது வள்ளல்ஸல் அவர்கள், அவற்றைத் தெளியப்படுத்தி யிருப்பார்கள். இவர்களும்

மேற்கண்ட வினுக்கள் விஷயத்தில் மௌனம் சாதித்திருப்பதனுல், அவை மார்க்க மூலங்களில் சம்பந்தப்பட்டன வல்லவென்றும், அன்றியும் அவ் விதண்டாவாதங்களை நாம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமான தல்லவென்றும் நிச்சயமாக நாம் தெரிந்து கொள்ளுகிறேம்.

எனவே, இவ்வண்ணமான வியவகாரங்களி லெல்லாம் தலையிட்டுக் கொள்ளாது, அஹ்லுஸ் ஸுன்னத் என்னும் இவ் வகுப்பார்களே அதுசமயம் மஹா பிரளயத்தின்போது நூஹ்<sup>அலை</sup> அவர்களது கலத்தேபோலிருந்து மனிதர்களைக் காப்பாற்றிக்கொண் டிருந்தனர். ஆனுல், துரதிருஷ்ட வசமாக ஹிஜ்ரீ மூன்று, நான்காம் நூற்றுண்டுகளில் முஸ்லிம்களிடையே பலாஸிபா வெகுவாய் வியாபித்து உயர்வடைந்து கிடந்தது. முஸ்லிம் கலீபாக்களும் இதில் அதிகமாய்த் தலையிட்டுக்கொண்டிருந்தனர். ஆகவே, அதுசமயம் அஹ்லுஸ் ஸுன்னதிகளினின்றும் ஒரு சாரார் கிளம்பி, அதுவரை நடந்துகொண்டு வந்த நேரான பாதையைவிட்டு நீங்கி, அவர்கள் அஹ்லுஸ்ஸுன்னதிகளுக்கும், மற்றும் இதர எல்லாப் பிரிவினையார்களுக்கும் மத்தியில் நவீன புதியதொரு பாட்டையைப் போட ஆரம்பித்தனர். மேலும் யுக்தி ஞானத்துக்கும், கிரந்த ஞானத்துக்கும், பல்ஸபாவுக்கும், நாயகம்<sup>ஸல்</sup> அவர்களின் வார்த்தைகளுக்கும் மத்திபமான ஒருபாதையை அன்னவர் மனங் கொண்டவாறு நிர்மாணம் செய்து, இதுதான் தாங்கள் செல்லும் சரியான மார்க்கமென்றும் கூறினர். இவ்வாறு ஒரு பாதையை உண்டுபண்ணி, அக்லு, நக்லு, பல்ஸபா முதலியவைகளைக் கைக்கொள்



ளும் விஷயத்தில் முஃதஜிலாவைப் போல் குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் வெகு தூரத்துக்கப்பால் போய்விட மாட்டோமென்றும், ஞானவான்களும், பலாஸிபர்களும் பார்த்துப் பரிகசிக்கும்படியான ஜவாஹிரிய்யாக்களே போலவும், முஹத்திதீன்களேபோலவும் நாம் இல்லாது, இஸ்லாத்திலேயே ஒரு நவீனமான புதிய பாதையில் நாம் நல்லவிதமாக நடந்து செல்லலாம் என்றும் எண்ணினர். ஆனுல், உண்மையைக் கவனிக்குமிடத்து, அவர்கள் ஏற்பாடு செய்த மூலக் கொள்கைகளும், மஸ்அலாக்களும் குர்ஆனுக்கும், எம்பிரான்<sup>ஸல்</sup> அவர்களின் மேலான வாக்கியங்களுக்கும் ஒத்தனவாயில்லாமற் போய்விட்ட தொரு பக்கல் கிடக்க, யுக்திக்காரர்களிடத்தும், பலாஸிபர்களிடத்தும் நல்ல பெயரைப் பெற்றுக் கொள்ளாமலும் போயின. உதாஹரணமாக, பின்னே காணும் சில குறிப்புக்களால் அவர்களின் நிலைமை எப்படி யிருக்கின்ற தென்பதைக் கவனித்துக் கொள்வீர்களாக:—

அவர்கள் ஒரு புறம் முஃதஜிலாக்க ளென்னும் வர்க்கத்தினருடன் சேர்ந்துகொண்டு, அல்லா(ஹ்)வுக்குச் சரீர மென்பதில்லை என்று சொல்லிவிட்டு, குர்ஆனில் காணப்படுகின்ற ஆண்டவனின் கை, முகம், கேள்வி, பார்வை போன்ற சொற்களுக்கு வலிந்துரை செய்தனர். மற்ருெரு சமயம் இவர்கள் ஜவாஹிரிய்யாக்களுடன் சேர்ந்துகொண்டு, ஆண்டவனைக் கண்டு தரிசிப்பது முடியுமென்று சொல்லலாயினர். எனவே, இம்மாதிரியான பாதையில் இவர்கள் இறங்கி அஹ்லுஸ் ஸுன்னதீயான மனிதர்க ளுடனேயும், பலாஸிபர்களுடனேயும் ஒத்துவாழ முடியாதவர்களாய்த் தனித்

துப்போய்க்கொண்டிருந்தனர். மேலும் ஒரு வஸ்துவை நாம் பார்க்க வேண்டுமாயின், பார்க்கப்படுகின்ற வஸ்து ஜட சம்பந்தமானதாக இருத்தல் வேண்டும்; அன்றியும், அஃது ஒரு ஸ்தலத்தி லிருக்க வேண்டும்; மேலும் அஃது ஏதேனுமொரு நிறமுடையதா யிருக்க வேண்டும்; கண்களுக்கு எதிரே யிருக்க வேண்டும்; பார்ப்பவனுக்கும் அதற்குமிடையே குறிப்பிட்ட ஓர் எல்லைக்குள்ளிருக்க வேண்டும் என்பன போன்றவைகள் அத்தியாவசியமானவென்பதை நாம் சொல்ல வேண்டிய தில்லை. எனவே, ஆண்டவனைக் காண்பது முடியும் என்று இவர்கள் சொல்லிவிட்டதால், மேலே காட்டியதே போன்ற எத்தனையோ விதமான சங்கடங்களெல்லாம் உண்டாகின்றனவென் றுணர்ந்து, ஒரு வஸ்துவைப் பார்க்கவேண்டுமாயின், மேலே சொன்ன அத்தனை நிபந்தனைகளும் இருக்க வேண்டிய தவசியமில்லை யென்று மறுத்துக்கூற முன் வந்தனர். இது மட்டுமா? கலா,கத்ர் என்னும் கற்பனை,ஏற்பாடு என்னும் விஷயத்திலும் இன்னவர் தலையிட்டு இப்படியே நடுநிலைமையான ஸ்தானத்தைக் கைக்கொண்டனர். எப்படியெனின், ஒருபுறம் செயல்களையெல்லாம் ஆண்டவனே உண்டு பண்ணுகின்றான் என்று சொல்லி, முஃதஜிலா கத்ரிய்யா முதலிய வகுப்பார்களினின்று தனிப்பட்டு வெளியேறினர். மற்றொரு புறம் மனிதன் கட்டாயப் படுத்தப்பட்டவனாகின்றான் என்பதை உணர்ந்து, மனிதனும் சில காரியங்களைத் தன்னிஷ்டம்போல் சுயமே செய்து கொண்டிருக்கின்றான் என்று கூறி, மனிதனுக்கும் சில சக்தி உண்டென்று கூறினர். மேலும் இன்னவர்களிடம், மனிதன் [அல்லா(ஹ்)வின் உதவியின்றி]



தான் நாடியபடி எல்லாக் காரியங்களையும் செய்து கொண்டா இருக்கின்றான்? என்று வினவப்பட்ட போது, இல்லை என்று விடையிறுத்து ஜப்ரிய்யாக்களை விட (ஜப்ரிய்யாக்களென்றால், அடியான் தான் சுயமே ஒன்றும் செய்யமுடியாதவனா யிருக்கிறான்; ஆனால், அடியான் ஆண்டானால் ஆட்டிவைக்கப்படும் உயிரற்ற ஒரு பொம்மையே போல்தா னிருக்கிறான் என்று கூறிக்கொண் டிருப்பவர்களேயாவர்) இவர்கள் மேம்பட்டவர்கள், நல்லவர்கள் என்று பெயர் வாங்கிவிட இவர்களால் கூடவில்லை. இதற்காகவே உஸ்தாத் மர்ஹூம் (ஷிப்லீ) அவர்கள் ஒரு நல்ல கவியைச் சொல்லி யிருக்கின்றார்கள். "ஒரு பாதையில் செல்பவனுக்கு இரண்டுவிதமான மனப்பான்மை யிருப்பது மிகமிக இழிவானதாகும். (இப்படியே) நான் ஈமானுடைய வாடையை வைத்துக் கொண்டிருக்கும் போது குப்ரையும் வைத்துக்கொண் டிருக்க வெட்கப்படுகிறேன்."

உண்மையைக் கவனிக்குமிடத்து, எப்படி இஸ்லாத்துக்குள்ளிருக்க லாயிக்கற்ற அனேக வகுப்பார்கள் தங்களை முஸ்லிம்களென்று கூறிக்கொண் டிருக்கின்றனரோ அங்ஙனமே அனேக பல அபிப்பிராயபேதமுடையவர்கள் தங்களை அஹ்லுஸ் ஸுன்னதி வல்ஜமாஅத்தைச் சேர்ந்தவர்க ளென்றே கூறிக் கொண்டிருக்கின்றனர். ஆனால், அவர்கள் இதைச் சார்ந்தவர்களாயில்லை. ஏனெனின், அஹ்லுஸ் ஸுன்னதி வல்ஜமாஅத்தைச் சார்ந்த மூல புருஷர்கள் என்னென்ன காரியங்களையும் நேரான விதிகளையும் ஏற்படுத்திச் சென்றார்களோ, அவற்றினை ஏதோ சில விதண்டாவாதிகளின்

ஆக்ஷேபங்களுக்கஞ்சி அவர்கள் மாற்றத் தலைப்பட்டு நேரான பாதையினின்று விலகிச் செல்ல எத்தனித்து விட்டனர். இத்தனை விதமான மாற்றங்களையெல்லாம் செய்து கொண்டு, இன்னமும் தாங்கள் அஹ்லுஸ் ஸுன்னதிகள்தாம் என் றெண்ணுகின்றனர். இது மட்டுமா? வேறொருவருமில்லாது தாங்கள்தாம் இந்த "அஹ்லுஸ்ஸுன்னதி" என்னும் சொல்லுக்கு மிக்க அருகதையுள்ளவர்களென்றும் கூறிக்கொண்டும் எண்ணிக்கொண்டுமிருக்கின்றனர்.

(பின்னே சொல்லப்போகும் விஷயத்தை நண்பர்கள் நன்கு கவனித்தல் வேண்டும். இவ்விஷயத்தில் ஒருசிறிதைச் சிலமனிதர்கள் தெரிந்துகொண்டு, கற்றவர்களும் கல்வியில் கரை கடந்து சென்றவர்களும் தாங்களேதாம் என்று மமதைகொண் டிருக்கின்றனர். 'கற்றதுகைம் மயளவு கல்லா துலகளவு' என்னும் ஞானம் இன்னாருக் கில்லவே யில்லை. ஹாபிஸ் பாகவீ)

ஹிஜ்ரீ 3,4ம் நூற்றாண்டிலிருந்து இந்த அஹ்லுஸ் ஸுன்னதி என்போர் மூன்று பிரிவினர்களாய்ப் பிரிந்துவிட்டனர். முதலாவது, அஷாயிரா, இரண்டாவது, ஹனபிலா, மூன்றாவது, மாதுரீதிய்யா என்பவர்களாம். அஷாயிராவென்றால், அது ஹிஜ்ரீ 270-ம் ஆண்டில் காலஞ் சென்ற இமாம் அபுல்ஹஸன் அஷ்அரீயினின்றும் தோன்றியிருக்கின்றது. இவர் ஷாபியீ இமாம் அவர்களுடைய அகீதாக்களை விரிவாய் வியாக்கியானம் செய்கிறவரென்று கொள்ளப்படுகின்றார். இக்காரணம் பற்றியேதான் சகல ஷாபியீ மக்களும் தங்களை அஷ்அரீ யென்று கூறிக்கொண் டிருக்கின்றனர். ஹனபிலா வென்போர், (ஹஜ்ரீ 241-ம் ஆண்டில் காலகதியடைந்த) இமாம் அஹ்மத் பின் ஹன்பலைப் பின்தொடர்ந்து நிற்கின்றனர். மாதுரீதிய்யாக்களென்போர் தங்களை (ஹிஜ்ரீ, 333-ம் ஆண்டில் காலஞ்சென்ற) இமாம் அபூமன்சூர் மாதுரீதியைப் பின்பற்றியவர்களென்று கூறிக் கொள்ளுகின்றனர். இந்த மன்சூர் என்பவர், இரண்டு மூன்று தலை முறையை இடைவிட்டுப் பார்க்கும்போது, இமாம் அபூஹனீபா அவர்களின் சிஷ்யராய்க் காணப்படுகின்றார். இதனால்தான் ஹனபீ மதுஹபைச் சார்ந்தவர்களெல்லாம் தங்களை மாதுரீதிய்யீன்கள் என்று கூறிக்கொண் டிருக்கின்றனர். எனவே, அகீதாக்கள் சம்பந்தமாக இவரை அஹ்னபுகள் (ஹனபீகள்) பின்பற்றி நிற்கின்றனர்.



மேலேசொன்ன இப்பிரிவினைக் காரர்களெல்லாம், தங்களுக்குரிய இமாம்களென்றும், பெரியார்களென்றும், மதஸ்தாபகரென்றும் இமாம் அபூஹனீபா, இமாம் ஷாபியீ, இமாம் அஹ்மத்பின்ஹன்பல் முதலியவர்களை ஒப்புக்கொண் டிருக்கின்றனர். ஆனால், உண்மையில் இந்த இமாம்களால் கோவை செய்யப்பட்டிருப்பதாய்ச் சொல்வதற்குப் போதிய ஆதாரத்துடன் அகீதா சம்பந்தமாய் ஒரு நூலேனு மிருப்பதாய்த் தென்படவில்லை. (ஆனால் ஒரு சிலர், இவர்களுடைய கோவையுண்டென்று வீணே விதண்டாவாதம் புரிந்து கொண்டிருக்கின்றன ரென்பது எமக்குத் தெரியும். ஹாபிஸ் பாகவீ).

ஆனால், சிற்சிலவிடங்களில் அவர்களுடைய வார்த்தைகள் காணப்படுவதெல்லாம், பெரியார்களும் முன்னோர்களுமான அஹ்லுஸ் ஸுன்னதிகளுடைய வார்த்

த்தைக் கொப்பானவைகளா யிருக்கின்றன வென்றே கூறியமைதல் வேண்டும். எனவே, பொதுவாய்க் கவனிக்குமிடத்து, எவ்விஷயத்தை நமது ஷரீஅத் விரிவாய்க் கூறுமற் சென்றிருக்கின்றதோ, அதை யெல்லாம் ஆண்டவன் பக்கல் தள்ளிவிட்டுத் தங்களுக்கானவற்றைச் செய்துகொண்டு செல்வதை விடுத்து, இந்த அஹ்லுஸ் ஸுன்னதிகளென்போரும் இதர வர்க்கத்தவர்களேபோல் இது விஷயத்தில் அதிகம் தலையிட்டு விவாதிக்கத் தலைப்பட்டனர். இதன் காரணமாய் நமது ஷரீஅத்தில் சொல்லப்படாத சில பல பல்ஸபாவைச் சேர்ந்த வியவகாரங்களை யெல்லாம் இஸ்லாத்துடைய அகீதாக்களில் கொணர்ந்து சேர்த்து வைத்துவிட்டனர்.

இவர்களுள்ளெல்லாம் ஹனபிலாக்களே அதிகமாய்த் தாங்கள்தாம் அஹ்லுஸ் ஸுன்னதிகள் என்று வாதாடி வருகின்றனர். எனவே, இந்த ஹனபிலாக்கள், அஷாயிராக்களை யெல்லாம் வழி கெட்ட தூர்த்தர்களென்றே எண்ணினர். இப்படியே அஷாயிராக்களென்போர் முஃதஜிலாக்களென்போரை வெறுத்துக் கொண்டிருந்தனர். [முஃதஜிலாக்களென்றால் யார்? எப்பொழுதிருந்து ஏற்பட்டவர்கள்? என்று தெரிந்துகொள்ள வேண்டியதும் ஒரு அத்தியாவசியமேயாம். ஹிஜ்ரீ 110-ம் ஆண்டில் ஹஸன்பஸரீ என்று பெயர் பெற்று விளங்கும் மகான் பஸ்ராவின்பால் ஒரு பெரிய மத்ரஸாவில், ஹதீதுஷரீப் போதித்துக்கொண்டிருந்தார்கள். இவருக்கு வாயில் என்றொரு சிஷ்யர் இருந்துகொண்டிருந்தனர். இந்த வாயிலுக்கும் ஆசிரியரான ஹஸன்பஸரீக்கும் ஒரு குறிப்பான விஷயத்தில்



அபிப்பிராயபேத மிருந்துகொண்டு வந்தது. விஷயம் இங்ஙனமிருக்க, ஒருதினம் வாயில் என்பார் ஒரு பொதுஸ்தானத்தில், குறிப்பிட்ட இம்மார்க்க விஷயத்தில் தம் ஆசிரியருடன் தர்க்கிக்கத் துணிந்தனர். இதைக் கண்ட ஹஸன் பஸரீ அவர்கள், 'இஃதஜில் அன்னு' (எம்மை விட்டும் நீங்கிப் போவீராக) என்று கூறினார்கள். இதற்கொப்ப வாஸிலும் தனியே ஒதுங்கி நீங்கிப்போய், தாம் ஒரு கலாசாலையைத் தனியாக ஏற்பாடு செய்து, அதில் தம்முடைய அபிப்பிராயத்தைப் பிரசாரம் பண்ணிக்கொண் டிருந்தார். இவருக்கும் பல சிஷ்யகோடிகள் கிடைக்காமற் போகவில்லை. இன்னோரெல்லாம் முஃதஜிலாக்கள் (நீக்கிக் கொண்டவர்கள்) என்று அழைத்துக்கொள்ளத் தலைப்பட்டனர். இவர்கள் தாம் ஆண்டவனுக்குப் பல ஸிபாத்துக்கள் (சற்குணங்கள்) தனியே யில்லையென்று நிராகரித்துக் கொண்டிருப்பவர்கள். இக்காரணம் பற்றியேதான், முன்னோர்கள், இன்னோரை முஅத்தலா (வீணாக்கப்பட்டவர்கள், நீக்கப்பட்டவர்)கள் என்றும் அழைத்துக்கொண்டு மிருக்கின்றனர். மதாஹிப் இஸ்லாம், 26, 27ம் பக்கம் பார்க்க. ஹாபிஸ் பாகவீ.] எனவே, இதன்பயனாக (ஹிஜ்ரீ 473-ம் ஆண்டில்) பகுதாதின்கண் ஹனபிலாக்களுக்கும் அஷாயிராக்களுக்கு மிடையே மகா பெரிய தர்க்கயுத்தங்களெல்லாம் நடந்தேறின; அவைகள் எம்பிரான் ஸல் அவர்களுடைய காலத்தில் நடந்தேறிய பத்ர், ஹுனைன் போன்ற யுத்தங்களையே நினைப்பூட்டுவனவா யிருந்தன. இப்படிப்பட்டவற்றினின்றும் அல்லா(ஹ்)நம்மைக் காப்பாற்றுவானாக. மாதுரீதிய்யாக்

களோ, தங்களுடைய அகீதா சம்பந்தப்பட்ட கோவைகளான அகீதாபஜ்தவீ, தம்ஹீத் அபூஸாலிம் முதலியவைகள் போன்ற கிரந்தங்களில், தாங்கள் தாம் உண்மையான அஹ்லுஸ் ஸுன்னதிகள் என்றும், அஷாயிராக்களெல்லாம் ஒன்றும் பிரயோஜனமற்றவர்களென்றும் விளக்கமாய்க் கூறியிருக்கின்றனர். இவ்வாறேதான் அஷாயிராக்களும் திருப்பி மாதுரீதிய்யாக்களைச் சொல்லிக்கொண் டிருக்கின்றனர். எனவே, முன்னோர்கள் கூறிச் சென்ற மேலான வாக்கியங்களை எடுத்துக்கொண்டு இன்னவரின் வார்த்தையுடன் சேர்த்துப் பார்ப்பீர்களாயின், இன்னவர்களிடையே உண்டாய்க் கிடக்கும் விகற்பமான வார்த்தைகளையெல்லாம் நீங்கள் நன்கு தெரிந்துகொள்வீர்கள்.

லாஹிரிய்யாக்களும், ஹனபிலாக்களும், ஆண்டவன் வானத்தின்மீ திருக்கின்றான் ; மேலுமவன் தன்னுடைய சிம்மாதனத்தி லமர்ந்திருக்கின்றான் என்று சொல்வதும் ; ஜஹ்மிய்யாக்களும், முஃதஜிலாக்களும், இன்னவர்களுடன் சுன்னத் வல்ஜமாஅத் தென்று சொல்லிக்கொள்ளும் அஷாயிராக்களும் மாதுரீதிய்யாக்களும் ஆண்டவன் எவ்விடத்தையும் அடைத்துக் கொண்டு உட்கார்ந்தில்லை யென்றும், குறிப்பாக எப்பக்கத்திலும் அவனிருப்பதினின்றும் பரிசுத்தமானவனாயிருக்கின்றானென்றும் கூறிக்கொண்டிருப்பதும், நமது ஷரீஅத்தின் எல்லையினின்று வெளியே போய்விட்டன என்பதில் சரிசமானமாகவே யிருக்கின்றன. முஜஸ்ஸமாக்களென்போர் ஆண்டவனுக்குச் சரீரமிருக்கின்றதென்றும், மேலும் அவனுக்குக் கை, கால், முகம் முதலியவைக ளிருக்கின்றனவென்றும் கூறிக்கொண்டிருக்



கின்றனர். முஃதஜிலாக்களும், அஷாயிராக்களும் மாதுரீதிய்யாக்களும் சேர்ந்துகொண்டு, ஆண்டவன் சரீரமுமல்ல, ஆதாரமுமல்ல, ஆதேயமுமல்ல, எந்தக் கோலமுமல்ல, நினைத்துப் பார்க்கக்கூடியது மல்ல என்றும் கூறிக்கொண் டிருக்கின்றனர். எனவே, இவர்களிருவரும் நமது ஷரீஅத்தின் எல்லையைத் தாண்டி அப்புறம் சென்றுவிட்டவர்க ளென்பதில் சரிசமானமாகவேதா மிருக்கின்றனர். மேலும் கராமிய்யாக்க ளென்போர் ஆண்டவனுடைய சகல குணங்களும் புதியவைகளென்று கூறுகின்றனர். முஃதஜிலாக்களென்போர் ஆண்டவனுடைய வார்த்தைகள் மட்டுந்தாம் புதியனவென்று கூறிக்கொள்ளுகின்றனர். இவையனைத்தும் குப்ரிய்யத்தின் மூலையைத் தொட்டுக் கொண் டிருக்கின்றன வென்றே எண்ணப்பட்டு வருகின்றன. எனவே, அஷாயிராக்களென்போர் சிருஷ்டிக்கும் தன்மை, இரணமளிக்கும் வன்மை போன்ற (இலாபீயான) குணவிசேஷங்கள் நித்தியமும் பூர்வீகமுமானவை யல்லவென்று சொல்லிக்கொண் டிருக்கிறார்களென்றால், அன்னவரை மாத்திரம் ஏனோ கெட்டவர்கள் என்று சொல்லலாகாது? நமது ஷரீஅத்து முந்திய இரண்டு வார்த்தைகள் சம்பந்தமாக மௌனமாயிருந்ததேபோல்தான் இம்மூன்றாவது வியவகாரத்திலும் வாய்மூடியே யிருந்துகொண் டிருக்கின்றது.

இங்ஙனமே முஃதஜிலாக்கள் அல்லா(ஹ்)வுக்குச் சகுணங்கள் தனிமையாயில்லை ; ஆனால், நிர்க்குண பிரம்மத்தினின்றே சர்வ காரியங்களும் உண்டாகின்றனவென்று கூறுகின்றனர். ஹனபிலாக்கள், ஸிபாத்துகளென்றும் சகுணங்கள் (தாத்) நிர்க்குண

பிரம்மத்தினின்றும் வேறுபட்டனவா யிருக்கின்றன வென்று கூறுகின்றனர். அஷாயிராக்களும் மாதுரீதிய்யாக்களும், சகுணங்கள் அல்லா(ஹ்)வின் நிற்குண பிரம்மத்தினின்றும் வேறுபட்டுத் தனிமையாகவு மில்லை ; அதனுடன் சேர்ந்து ஐக்கியப்பட்டு ஒன்ருகவுமில்லையென்று கூறுகின்றனர். எனவே, இவர்களெல்லாம் கூறிக்கொண்டிருக்கும் இவ்விஷயம், நமது ஷரீஅத்தின் எல்லையைக் கடந்து சென்றதாகவே தானிருக்கின்றது. ஷரீஅத்தின் வரையைக் கடந்தவர்கள் என்னும் விஷயத்தில் மூவரும் சமமாகவே தாமிருக்கின்றனர்.

மேலும் ஜப்ரிய்யாக்கள், மனிதன் அசையாப் பொருள்களான ஜமாதாத்களே போலும், தாதுவர்க்கமான நபாதாத்களே போலும் சுயேச்சையும், நாட்டமும் பறிக்கப் பட்டவர்களா யிருக்கின்ருர்கள் என்று கூறுகின்றனர். கத்ரிய்யாக்களோ, மனிதர் பரிபூரண திராணியும் சுயேச்சையும் பெற்றவரா யிருக்கின்றனர். (எனவே, மனிதர்கள் தாங்கள் நாடிய எல்லாக் காரியங்களையும் சுயமே யாதொரு தடையுமின்றிச் செய்து முடிக்கலாம்) என அறைகின்றனர். அஷாயிராக்கள், (மனிதர்கள் தாங்கள் நாடிய எல்லாக் காரியங்களையும் செய்து முடிக்கலாம் என்று சொல்வதற்குமில்லை ; அப்படியே இவர்கள் ஒன்றும் செய்ய முடியாமல் மரக் கட்டையேபோ லிருக்கின்றனர் என்றுசொல்லவும் இயலாது. ஆனல்) மனிதர்கள் தாங்கள் செய்யும் காரியங்களில் தங்களுக்கும் சம்பந்தமிருக்கிறதென்பது திண்ணம், என்று சொல்லுகின்றனர். மாதுரீதிய்யாக்கள், ஒவ்வொரு செய்கையிலும்



ஆண்டவனுடைய சம்பந்தமும் அடியானுடைய சம்பந்தமும் உண்டென்று கூறுகின்றனர். அஃதாவது, ஒரு செய்கையை, ஆண்டானும் அடியானும் சேர்ந்து செய்கின்றனர் என்பதுதான் இதன் தாத்பரியமாகும். எனவே, மேற்சொல்லப்பட்ட நால்வரின் அபிப்பிராயங்களும் எமது ஷரீஅத்தின் எல்லையைக் கடந்தன வென்பதில் ஒன்ருகவேதா மிருக்கின்றன.

நமது குர்ஆன் மஜீது, புதிதாகவும் சிருஷ்டிக்கப் பட்டதாகவு மிருக்கிறதென்று முஃதஜிலாக்கள் கூறுகின்றனர். இதைக் கேட்டதும் அக்கால சர்வ சாதாரண மக்கள் அன்னுரைக் காபிரென்று கூறினர். அதனுடன் நில்லாது அவர்கள் முஃதஜிலாக்களுக்கெதிராய், குர்ஆன் தாத்பரிய முறையில் மட்டுமன்று, அதன் சொல்லும் மொழியும் பூர்விகமானவாகவும், சிருஷ்டிக்கப்படாதவாகவு மிருக்கின்றன என்று வாய் கூசாமல் உரைத்தனர். இதற்கு ஆதாரமென்ன வென்பதையும் கவனியுங்கள்:—குர்ஆனில் அல்லா(ஹ்)வின் நாமமிருக்கிறது. எனவே, அல்லா(ஹ்) புதிதானவனுகவும் சிருஷ்டிக்கப்பட்டவனுகவு மிருத்தல் கூடுமா ? ஆகலான் இப்படிப்பட்ட பொருளை, சிருஷ்டிக்கப்பட்ட தென்றும் புதிதென்றும் கூறுபவர்கள் காபிர்களா யில்லாமல் வேறென்னவா யிருத்தல் கூடும்? என அறைந்து கொண்டிருந்தனர். பின்னர்க் காலஞ்செல்லச் செல்ல அவர்களினின்றும் தோன்றிய அஷாயிராக்களும், மாதுரீதிய்யாக்களும், அறியாத்தனமான இந்த ஆதாரத்தை மறுத்துத் தள்ளிவிட்டனர். ஆனல், இவ்விருவரும் தங்கள் யுக்தியின்படி மற்ருெரு விதமாக இதை விவரித்தனர். அஃதாவது, [அல்லா(ஹ்)வின்] சொல்

லென்பது, பேசுபவனின் மனத்திலுள்ள விஷயத்தை அறிவிக்கக்கூடிய ஒரு பொருளா யிருக்கிறது. இது புதிதாக உண்டாக்கப் பட்டதென்றே சொல்லலாம். இப்படிப்பட்ட பல பொருள்கள் ஒன்று சேருங்கால் பேசுபவனுடைய மனத்திலிருக்கும் தாத்பரியம் வெளியாகின்றது. இக்கருத்துப் பூர்விக மானதும் சிருஷ்டிக்கப்படாததாகவு மிருக்கிறது. இப்பொருளை அறிவிக்கும் சொற்கள் புதியனவாகவும், சிருஷ்டிக்கப்பட்டனவாகவுமிருக்கின்றன என்பதே.

ஆனால், இதே காலத்தில் வசித்து வந்த ஆழ்ந்த நோக்குடையவர்களும் குர்ஆன் ஹதீதின் போதனைகளின்படி அப்படியே நடந்து சென்றவர்களும் மேற்குறிப்பிட்ட பாமரத்தனமான வீண் கூச்சல்களைப் பொருட்படுத்தினார்களில்லை. அன்றியும் முஃதஜிலாக்களுக்கு விரோதமாய் நடந்துசெல்ல எண்ணங்கொண்டு, நேரான பாதையையும் சத்திய போதனையையும் மற்றவர்களைப்போல் விட்டுவிடவுமில்லை. ஆனால், இப்படிப்பட்ட பெருந்தன்மை யுடைய ஆழ்ந்த நோக்கப் பெரியார்கள் சொன்னதாவது:—குர்ஆன் இறைவனின் வார்த்தைகளா யிருக்கின்றது. அவ்வளவுதான் எமக்குத் தெரியும். இதற்கு மேல் குர்ஆன் வார்த்தைகள் சிருஷ்டிக்கப் பட்டனவென்றும் அல்லது சிருஷ்டிக்கப் படாதனவென்றும் நாம் சொல்லமாட்டோம் என்பதே. உண்மையில் இதுவே சரியான விடையா யிருக்கிறதென்பதை ஞானமுள்ள எவரும் ஏற்றுக்கொள்வர். ஏனெனின், எமது ஷரீஅத்தின் மூலத்தைக் கவனிக்குமிடத்து, குர்ஆனின் வாக்கியம் சிருஷ்டிக்கப்பட்டதென்று சொல்வது எவ்வளவு தீமையானதா யிருக்கின்றதோ, அதைக் காட்டினும், இது பூர்விகமான்தா யிருக்கின்றது என்றுசொல்வதும் குறைவானதாயில்லை.



மேற் சொல்லிக்கொண்டு வந்த விஷயங்களால் நாம் தெரிந்து கொள்வதாவது:—நாயகத் திருமொழிகளைக் கைவிட்டு விட்டவர்களும், பின்னோரான ஸுன்னத் ஜமாஅத் தென்பவர்களும், முஃதஜிலாக் களுக்கும் இதர நாஸ்திக வாதக்காரர்களுக்கும் அஞ்சி, பூர்விகமாகவும் பன்னெடுங்காலமாகவும் நடந்து வந்த நேர்மையான ஸுன்னத் ஜமாஅத் கொள்கைகளில் அநேக பல மாற்றங்களை யுண்டு பண்ணியதுடன், தங்கள் மார்க்க முறையை, நாஸ்திக வாதக்காரர்களும் கைக்கொள்ள வேண்டுமெனப் பெரிதும் பிரயத்தனப்பட்டனர். எனவே, பொதுவாய்க் கவனிக்குமிடத்து, அகாயித் என்னும் விஷயத்தில் பிந்திய சுன்னத் ஜமாஅத்தார்களுக்கும், சுன்னத் ஜமாஅத்தைச் சார்ந்த முன்னோர்களுக்கும் எவ்விதச் சம்பந்தமுமில்லை யென்றே கூறி முடிக்கலாம். அப்படியே சம்பந்தமுண்டென்றால், முற்காலத்துக்கும், தற்காலத்துக்கும் (வானத்துக்கும் பூமிக்கும், அக்கினிக்கும் தண்ணீருக்கும்) என்ன சம்பந்தமிருக்கின்றதோ அந்த மாதிரியான சம்பந்தமேதானிருக்கிறதென்றுதான் கொள்ளல் வேண்டும்.

ஏதோ ஒரு விஷய சம்பந்தமாக நமது ஷரீஅத் ஒன்றையும் விவரமாய்ச் சொல்லாமல் மௌனமா யிருக்கின்றது; அன்றியும் அதை அறியவேண்டுமென்றுவது வற்புறுத்தவு மில்லை; மேலும், அதனை விவரமாய் நாங்கள் அறிவுகொண்டு உணர்ந்து கொண்டால் தான் ஈமானுடைய அஸ்திபாரம் உறுதியா யிருக்கின்றதென்று உரைக்கவுமில்லை; இதுவு மல்லாமல், எமது

வள்ளல்[ஸல்] அவர்கள் அதை எவ்விதமாகவேனும் உணர்ந்து கொண்டேதான் நீங்கள் ஈமான் கொள்ளல் வேண்டுமென்று எவ்விதமாகவும் வற்புறுத்திக் கூறியிருக்கின்ருர்களில்லை; என்ஞல், இம்மாதிரியான காரியங்களிலும், விஷயங்களிலும் வீணே தலையிட்டு விவாதம் செய்து, இவைகளுள் சில குதர்க்க விஷயங்களை யெல்லாம் கொணர்ந்து அகீதாக்க ளென்னும் மூலக் கொள்கைகளில் சேர்ப்பதென்ருல், அஃதெவ்வளவு நல்ல காரிய மென்பதை நீங்களே நிதானித்துக் கொள்வீர்களாக. இல்லை; இக் காரியங்களில் அஹ்லுஸ் ஸுன்னதிகளென்று சொல்லிக் கொண்டிருக்கும் நீங்களெல்லீரும் தலையிட்டுக் கொண்டிருப்பதனுல், இதா வகுப்பார்களைக் காட்டினும் குறைந்த குற்ற முடையவர்களென்ரு எண்ணிக் கொண்டிருக்கின்றீர்கள்? இல்லை; இப்படிப்பட்ட கஷ்டசாத்தியமான முடிச்சுக்களை யெல்லாம், நுங்கள் சுயபுத்தியிஞலேயே அவிழ்த்து இலேசுபடுத்திக் கொள்வீர்களாயின், இப்படியே இன்னமும் நீங்கள் மேற்கொண்டும் செல்லமுடியும். (நவூதுபில்லா) பின்னர் நுங்களைப்போன்றவர்களுக்கு நபிமார்கள் வரவேண்டியதும் அவர்களுடைய மெய்யொளிப் போதனைகள் வேண்டியதும் ஆவசியக மில்லாமற் போய்விடுகின்றன.

எம்பிரான்[ஸல்] அவர்களுடைய ஜீவித காலத்தில் ஏறக்குறைய ஒன்றரை லக்ஷம் மனிதர்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவித் தங்களுடைய ஆன்மாக்களை மேன்மையுறச் செய்து கொண்டனர். இன்னவர்க ளெல்லாம் எவ்வாறு ஈமான் கொண்டு முஸ்லிம்களாய் விளங்கி வந்தார்க ளென்பதை நீங்கள் உணர்ந்துகொண் டிருக்கின்றீர்களா? இல்லை, இதுசமயம் உங்களால் உண்டுபண்ணப் பட்டிருக்கும் இலக்ஷக் கணக்கான அகீதாக்க ளென்னும் மூலக் கொள்கைகளினின்றும் ஒன்றேனும் அவர்களிடம் எடுத்துக் காட்டப்பட்டதா? (இல்லை, இல்லை!) எனவே, நுங்களுடைய விதண்டாவாத இக் கட்டுப்பாட்டின்படி (நவூதுபில்லா) அன்னவர்களை யெல்லாம் மூஃமின்கள்தா மென்று நீங்கள் சொல்வீர்களா? இல்லையா? அந்தப் பெரியார்களின் ஈமானென்ப தெல்லாம், சூரா பகாவின் ஆதியிலும் அந்தத்திலும் கூறப்பட்டிருப்பதே போல் சர்வசாதாரணமா யிருந்துவந்தது. எப்படி யெனின்:—

"தூதர் தம்முடைய ரப்பினின்றும் தம்மளவில் இறக்கிவைக்கப்பட்ட அவ்விஷயத்தைக் கொண்டு ஈமான் கொண்டார். மேலும், (இதர) மூஃமின்களெல்லாம், அல்லா(ஹ்)வைக் கொண்டும், அவனது வானவர்களைக் கொண்டும், அவனுடைய வேதங்களைக் கொண்டும், அவனுடைய தூதர்களைக் கொண்டும் (பூரண) நன்னம்பிக்கை கொண்டார்கள். அவனுடைய தூதருள் எவரிடையேயும் நாம் பாகு பாடு செய்ய மாட்டோம் (என்றும் கூறினர்கள்)." (2:285)

"உம்மிடம் இறக்கி வைக்கப்பட்ட அவ்விஷயத்தைக்கொண்டும், உமக்கு முன் இறக்கிவைக்கப்பட்ட அந்த விஷயத்தைக் கொண்டும், அவர்கள் நன்னம்பிக்கை கொள்ளுகின்றனர். மேலும், இறுதி நாளைக் கொண்டும் அவர்கள் ஈமான்கொள்ளுகின்றனர்." (2:4)

எனவே, இம்மாதிரியான எத்தனையோ வாக்கியங்களைக் கூறி, எதன்மீது ஈமா னென்னும் உறுதி கொள்ளவேண்டு மென்று ஆண்டவனே தன் திரு

மறையான குர்ஆனின்பால் விளக்கிக் காட்டியிருக்கின்றான். ஆகையால் ஒரு மனிதன் குர்ஆன் மீது ஈமான் கொள்ளுவானாயின், அவன் குர்ஆனில் சொல்லப்பட்டிருக்கின்ற விளக்கமான, இல்லை, விளக்கமற்ற எல்லா விஷயங்களைக் கொண்டும் அப்படியே ஈமான் கொண்டவனாய் ஆகின்றான். எனவே, இதில் கூறப்பட்டிருக்கும் ஆண்டவனுடைய குண விசேஷங்களனைத்தும், அவனுடைய வேதங்களும், அவனுடைய அமரர்கள் தூதர்கள் சம்பந்தமான எல்லாவிஷங்களும், இறுதி நாளின் போது கேள்வி கணக்குக்கள், சுவர்க்க நரகம் முதலிய எல்லா விஷயங்களும் இந்தக் குர்ஆன் ஷரீபில் எவ்வளவு தூரம் சொல்லப்பட்டிருக்கின்றனவோ, இவைகளெல்லாவற்றைக் கொண்டும் இவன் அப்படியே ஈமான் கொண்டவனாய் ஆய்விடுகின்றான். ஆதலாற்றான், பூர்வகாலத்திலிருந்த அஹ்லுஸ் ஸுன்னதிகளான பெரியார்களும், முன்னோர்களான மகான்களும் குர்ஆனில், இல்லை, முதவாதிரான (உறுதியான தொடர்ச்சியான) நாயகம்[ஸல்] அவர்களுடைய வாக்கியங்களில் ஒவ்வொரு விஷயமும் எவ்வளவு தூரம் விளக்கமாகவும், விவரமாகவும் கூறப்பட்டிருக்கிறதோ, அவ்வளவு மட்டுமே விரிவாகவும் விளக்கமாகவும் அவ்விஷயத்தின் மீது நன்னம்பிக்கை கொள்ள வேண்டுமென மனோ உறுதிகொண்டிருந்தனர். ஏனெனின், குர்ஆனைக் கொண்டும் முதவாதிரான ஹதீதைக்கொண்டும் எந்த விஷயங்கள் திட்டமாயிருக்கின்றனவோ, அவைகளின் மீதே பரிபூர்ண நம்பிக்கையென்னும் ஆகீதாக்கொள்ளல் வேண்டும். எங்கேனும் யாரேனும் ஒருவர் மாத்திரம்(கரீப்)தனிமையாய் எம்பிரான்[ஸல்] அவர்களுடைய வாக்கியங்களைக்(கபரெஆஹாத்) கூறிக்கொண்டிருப்பாராயின், இதனால் மனோ உறுதியென்னும் நம்பிக்கை உண்டாகமாட்டாது. அகீதாக் கொள்ளும் விஷயமோ உண்மையானதாகவும் உறுதியானதாகவும், சந்தேகமற்ற ஒரு விஷயமாகவுமிருத்தல்வேண்டும். ஒரு சிறிதேனும் சந்தேகம் உதிக்குமாயின், அதன்மீது நன்னம்பிக்கை கொள்ளவேண்டியதாவசியகமின்று.



இவ் வண்ணமான நுட்பங்களைத் தெரிந்துகொள்ளாததால் ஜாஹிரிய்யாக்களும், பொதுவான அனேக முஹத்திதீன்களும், கண்டதையும் கேட்டதையும், நல்ல ஹதீதுகளையும் பொய்யானவைகளையும் எவ்விதப் பாகுபாடும் செய்யாமல் எல்லா நாயகவாக்கியங்களையும் ஒரே தாராதரமாய்ச் சேர்த்து வைத்துக்கொண்டு, இவைகளனைத்தின் மீதும் நீங்கள் ஈமானெனும் உறுதி கொள்ளுங்கள் என்று பெருந்தவறிழைத்திருக்கின்றனர். உதாரணமாக, இதனைத் தாங்கள் பார்க்க எண்ணங்கொள்ளுவீர்களாயின், பைஹகீ எனும் ஹதீது கிரந்தத்தின் ‘கிதாபுல் அஸ்மாயி வஸ்ஸிபாதி’ என்னும் பாகத்தில் கண்டு கொள்வீர்களாக. இல்லை; இந்த முஹத்திதீன்களெனப்பட்டோர் சிறிது நன்கு ஆராய்ச்சி செய்து மெய்யான ஹதீதுகளையே சேகரம் செய்துகொண்டு வந்திருப்பார்களாயின், இன்னவரின் வார்த்தைகளே இஸ்லாத்துக்குள் முதன்மையான சாஸ்திரஸ்தானத்தை அடைந்திருக்கும்.

இதற்கு முன் பெரியோர்களான முன்னோர்களுடைய அஹ்லுஸ் ஸுன்னதிகளின் மூலக் கொள்கைகள் இரண்டாயிருந்தன என்று கூறிவந்தோம். அவையாவன :

(1) எம்பிரான்[ஸல்] அவர்கள் அகீதாக்க ளென்னும் மனோ உறுதி சம்பந்தமாகவும், அஃமால்க ளென்னும் கிரியைகள் சம்பந்தமாகவும் தன்னைப் பின் தொடர்ந்த உம்மத்தவருக்கு எதைக் கற்பித்துச் சென்றார்களோ, அதை அப்படியே ஓரணுவும் கூட்டாமலும் குறைக்காமலும் வைத்துக்கொள்ளுதல் வேண்டும்.

(2) ஆண்டவனின் நிற்குணப் பரம்பொருளின் சம்பந்தமாகவும் அவனுடைய சிபாத்துகள் விஷயமாகவும் குர்ஆனில் எம்மாத்திரம் சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அல்லது உண்மையில் எம்பிரான்[ஸல்] அவர்களினின்று எம்மாதிரம் ஏற்பட் டிருக்கின்றனவோ, மேலும் அவை பொதுவாகவோ விளக்கமாகவோ எதுவரை விளக்கப்பட் டிருக்கின்றனவோ, அவைகள்மீதும் அப்படியே ஈமான் கொள்ளுதல் வேண்டும். இவைகளின் விஷயத்தில் நம்முடைய புத்தியையும் ஞானத்தையும் செலுத்திக் கூட்டவோ குறைக்கவோ ஒரு சிறிதும் கூடாது. அப்படியே கூட்டவும் குறைக்கவும் செய்யப்பட் டிருக்குமாயின், அதன்படி நாம் ஈமான் கொள்ளவேண்டுவது அத்தியாவசிய மின்று.

எனவே, மேலே சொல்லிய இவ்விரண்டு மூலக் கொள்கைகளையும் உறுதிப்படுத்த இன்னமும் நாம் விவரித்துரைக்க வேண்டிய தாவசியகமின்று. ஏனெனின், சில விஷயங்களை விவரிக்கவும் சுருக்கவும் நம்முடைய புத்திக்கும் ஞானத்துக்கும் ஒரு சிறிதும் சம்பந்தமில்லை என்றுதான் இதுவரை சொல்லிக்கொண்டு வந்தோம். இம்மாதிரியான விஷயங்களில் மனிதர்கள் தங்கள் ஞானத்தைக் கொண்டுமட்டும் உணர்துகொள்



வஹியினின்றும் நெடுந்தூரம் அப்புறப் படுத்தப்பட்டுக் கிடக்கின்றனர். [உதாரணமாக, நாம் ஆண்டவன் மீது நன்னம்பிக்கை வைக்கின்றோம். ஆனால், அவன் எப்படி யிருக்கிறானென்பது எமக்குத் தெரியாது. வானவர் மீதும் நாம் பிம்பிக்கை வைத்திருக்கின்றோம். ஆனால், அவர்கள் எப்படி யிருக்கின்றார்க ளென்பது நமக்குத் தெரியாது. நபிமார்களைக் கொண்டு நாம் ஈமான் கொள்ளுகின்றேம். ஆனால், குறிப்பிட்டவர்களுக்கு ஏன் நபித்துவமளிக்க வேண்டும் என்பது நமக்குத்தெரியாது. அல்லா(ஹ்)வின் வேதங்கள் மீது நாம் உறுதிகொண் டிருக்கிறோம். ஆனால், அவைகளில் கூறப்பட்டிருக்கும் நுண்ணிய பல விஷயங்களை ஒவ்வொருவரின் புத்தியும் சரியாய் உணர்ந்து கொண்டதாயில்லை. இறுதிநாள் மீது நாம் பூரண நம்பிக்கை வைத்திருக்கின்றேம். ஆனால், அங்கு என்னென்ன விஷயம் எப்படி யெப்படி நடக்குமென்பது பூரணமாய் நமக்குத் தெரியாது. அல்லா(ஹ்)வின் நன்மை தீமைக்குரிய ஏற்பாடுகளும் சட்டங்களும் உண்டென்பது நமக்குத் தெரியும். ஆனால், அஃதெப்படி ஏற்படுகின்றதென்பதன் விவரம் நமக்குத் தெரியாது. மரணமடைந்தபின், மனிதர்கள் மீண்டும் உயிர் பெற்றெழுவார்கள் என்பது நம் மனோஉறுதி. ஆனால், அஃதெங்ஙனம் நடைபெறுமென்பதன் விஷயத்தைப் பூரணமாய் நாம் உணர்ந்து கொள்வதற்கில்லை. கப்ரில் வேதனை யுண்டென்பது தெரியும். ஆனால், அஃதெப்படி எங்கு நடைபெறுகின்றதென்பதைச் சொல்ல இயலாது. நரகமும் சுவர்க்கமும் உண்டென்பது எல்லோரும் ஏற்றுக்கொண்டிருக்கும் ஒரு விஷயம்.

ஆனால், அவ்விரண்டும் எங்கிருக்கின்றன? எப்படி யிருக்கின்றன? அவ்விரண்டிலு மிருக்கும் சுகதுக்கங்களுக்குரிய சாதனங்கள் எப்படி யிருக்கின்றன வென்பன போன்ற விஷயங்கள் சரியாய் நமக்குத்தெரியா. இப்படியே எண்ணத் தொலையா எத்தனையோ விஷயங்களை நாம் நமது பரிபூர்ண மனத்துடன் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். ஆனால், அதன் விவரங்கள் எப்படி யிருக்கின்றன வென்பது நமக்குத் தெரியாமலேயே யிருந்துகொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட விஷயங்கள் சம்பந்தமாய் எமது குர்ஆனும் எம்பிரான்[ஸல்] அவர்களுடைய திருவசனங்களும் பொதுவாய்க் கூறிக்கொண்டிருக்கின்றனவேயன்றி, இன்ன இன்ன விஷயங்கள் இப்படி யிப்படித்தா னிருக்கின்றன வென்று வயையறுத்துக்கூறிச் செல்லவில்லை யென்பது ஆராய்ச்சியாளரின் அரிய முடிபாகும்.

எனவே, இப்படிப்பட்ட நுண்ணிய விஷயங்களை, குர்ஆனும், ஹதீதும் பொதுவாய்ச் சொல்லி யிருப்பினும், இவைகளை யெல்லாம் மனிதர்களாய நாமே நமது புத்தியினாலும் ஞானத்தினாலும் குறிப்பிட்டுக் காட்டி விடலாம் என்று துணிவது, தவறான காரியங்களில் சகஜமாய் நுழைவதற் கொப்பாகவேதா னிருக்கின்றது. அப்படியே ஒரு சிலர் இறுதி நாள் விஷயங்கள் இப்படித்தா னிருக்கும், சுவர்க்கமும் நரகமும் இங்ஙனந்தா னிருக்கும், மலக்குகளெனும் வானவர் இவ்வண்ணமேதா மிருக்கின்றனர் என்று கூறுவாராயின், அதை அப்படியேதான் நாமெல்லாம் ஒப்புக்கொள்ள வேண்டு மென்பதில்லை. இவரின் அபிப்பிராயத்தை ஒப்புக்கொண்டதன் பின்னரேதான் நாமெல்லாம்



மூஃமினுவோம் என்பது மில்லை. இப்படிக் கூறுவதைக் கூறுபவரின் சொந்த அபிப்பிராயமாய்க் கொள்ளுவோமே யல்லாது, இதைக் குர்ஆனுடைய கட்டளை யென்றோ அல்லது நபிகள்[ஸல்] அவர்களுடைய போதனை யென்றோ நாம் கொள்ளப் போவதில்லை என்பது திண்ணம்.

இங்ஙன மல்லாது அகீதாக்கள் சம்பந்தமாய்ப் பெரியோர்கள் சொன்னதை எல்லோரும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டுமென்று சொல்லப்படுமாயின், இதையும் கவனிப்போம். அகாயித் சம்பந்தமாய் இமாம் அபூஹனீபா[ரலி] அவர்களால் நூல் இயற்றப் பட்டிருக்குமாயின், அது ஹிஜ்ரீ 150-ம் ஆண்டுக்கு முன்னமேயே இயற்றப்பட் டிருத்தல் வேண்டும். இதற்குப்பின், ஹி. 482-ல் காலஞ்சென்ற பக்ருல் இஸ்லாம் அலீ பின் முஹம்மத் பஜ்தவீ யென்பார் இதே அகாயித் விஷயமாய் இன்னமுமொரு நூல் இயற்றி யிருக்கின்றார். பின்னர், ஹிஜ்ரீ 505-ல் காலஞ்சென்ற இமாம்கஜ்ஜாலீ தாமொரு நூலை இயற்றியுள்ளார். பின்னர், ஹி. 686-ல் காலஞ்சென்ற முஹம்மத் பின் முஹம்மத் புர்ஹான் நஸபீ யென்பார் (அகாயித் நஸபீ என்று வழங்கும்) தாமொரு நூலை இயற்றினர். பின்னர் ஹி. 728-ல் தேகவியோகமான ஷைகுல் இஸ்லாம் இமாம் இப்னுதைமிய்யா தாமொரு நூலை இயற்றி யிருக்கின்றார். பின்னர் ஹி. 762-ல் காலஞ்சென்ற அல்லாமா, சஃதுத்தீன் பின் உமர் தப்தாஜானீ என்பார், அகாயித் நஸபீயிக்கு வியாக்கியானம் செய்திருக்கின்றார். பின்னர் ஹி. 775-ல் காலஞ்சென்ற, முஹ்யித்தீன் அபூமுஹம்மத் அப்துல்காதிர்

குரஷீ யென்பார், தாமொரு பிரத்தியேகமான நூலை இயற்றி யிருக்கின்றார். பின்னர், ஹி. 870-ல் காலஞ் சென்ற அஹ்மத் பின் மூஸாகியாலீ யென்பார் அகாயித் நஸபீ யெனும் நூலுக்குக் குறிப்புக்கள் (ஹாஷியாக்கள்) எழுதியிருக்கின்றார். இப்படியே இதற்குப் பின் தோன்றிய எத்தனையோ பெரியார்கள் (மௌலானா சையித்சுலைமான் நத்வீயுட்பட) எத்தனையோ நூற்கள் இஸ்லாத்தின் மூலக் கொள்கைகளான ஆகாயித் சம்பந்தமாய் வரைந்து வைத்திருக்கின்றனர்.

எனவே, சுருக்கிச் சொல்லுமிடத்து, மேலே சொல்லிக்கொண்டு வந்த இமாம்களும் பெரியார்களும் இயற்றி யிருப்பதெல்லாம்—ஒருசில விஷயங்களைத் தவிர்த்து மற்றெல்லா விஷயங்களும் அவரவர்களுடைய நோக்கத்தின்படியும், ஞான விஸ்தீரணத்துக் கொப்பவும், பாந்த நோக்கத்துக் கொத்த விதமாகவும் அனேக பல வித்தியாஸங்களுடனே அதிகம் வரைந்து வைக்கப்பட் டிருக்கின்றன. இது கல்வி ஞானம் படைத்த ஒவ்வொருவரும் உணர்ந்துகொண் டிருக்கும் விஷயமாகும். ஆனால், நாம் சொல்லும் விஷயமென்னவெனின், மேற் குறிப்பிட்ட அத்தனை பெரியார்களும் எந்த எந்த விஷயங்களில் அபிப்பிராய பேதமில்லாமல் ஏக ஒற்றுமையாய்க் கூறி யிருக்கின்றனரோ அவ்வவ்விஷயத்தை மட்டும் நாம் நிச்சயமாக ஏற்றுக் கொள்ளவேண்டும். இப்படி அவர்கள் ஏக ஒற்றுமையாய்க் கூறியிருக்கும் விஷயம், குர்ஆனிலும் ஹதீதிலும் பொதுப்படையாய்க் கூறப்பட் டிருப்பதாக வேதா னிருக்குமென்பது திண்ணம். இதினின்றும் வெளிப்பட்டபின்னரே ஒவ்வொருவரும் தாம்தாம் எண்ணியபடி யெல்லாம் தங்கள் அசுவத்தை ஓட்டிச் சென்றிருக்கின்றன ரென்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.



இங்ஙனம் ஒவ்வொருவரும் கூறும் அகீதாக்களை யெல்லாம்கேட்டு (பார்த்து) அதன்படி முழுதும் நடந்து செல்வதென்றால் அது நம்மால் முடியக்கூடிய காரியமாயில்லை. நடக்கத்தான் வேண்டுமென்றால் எந்த இமாமைப் பின்பற்ற வேண்டும்? எந்த இமாமை நிராகரித்தல் வேண்டும் என்னும் விஷயத்தை ஆதியில் தீர்த்துக் கொள்ள வேண்டியதாயிருக்கும். இங்ஙனம் சில இமாமைப் பின்பற்றிச் சிலரை நிராகரிப்பதால் எவ்வளவு பெரிய குற்ற மேற்படுமென்பதை நிதானித்துப் பார்த்துக் கொள்ளக்கடவீர்களாக. எனவே, அல்லா(ஹ்)வினாலும், எமது வள்ளல்[ஸல்] அவர்களாலும் அகாயித்சம்பந்தமாய் எத்துணைத் தூரம் எம்மாத்திரம் என்னென்னவிஷயம் மறைமுகமாகவும் பொதுவாகவும் குறிப்பாகவும் கூறப்பட்டிருக்கின்றனவோ அவற்றினை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதே எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் ஒரு விஷயமாகும். இக் கருத்தைத்தான், மௌலானா சையித் சுலைமான் நத்வீயும் வற்புறுத்தி யிருக்கின்றார். யாமும் இதைத்தான் பன்முறையும் அழுத்தமாய்க் கூறிக் கொண் டிருக்கின்றோம். ஹாபிஸ் பாகவீ] இதனால்தான், பொதுவாய் நம்மை விட்டு அப்புறப் பட்டுக் கிடக்கும் விஷயங்களை—நமக்குப் பிரயோஜனமானதை நமக்கறிவிப்பதற்கு ஒரு நபி இருக்கவேண்டியது அவசியமாயிருக்கின்றது. இதனை நாம் ஒப்புக் கொண்டதன் பிறகும் மேலே சொல்லிக்கொண்டு

வந்த விஷயங்களுள் நமது அறிவைச் செலுத்துவ தென்பது ஒரு தப்பான காரியமா யிருக்கின்றது.

ஆனால், யுக்தியினால் உண்டாகும் நமது இப் பாதையை விட்டு விட்டு, குர்ஆன் மூலமும் ஹதீது மூலமும் இஸ்லாத்தின் மூலக்கொள்கை உண்மையில் எவ்வளவு ஏற்பட்டிருக்கின்ற தென்பதையே இனி நாம் கவனித்தல் வேண்டும். இதற்காக நம் நேயர்கள் நாம் முன்னே கூறிக்கொண்டு வந்திருப்பதை நன்றாய்க் கவனிக்கவேண்டு மென்று ஞாபக மூட்டுகின்றோம். அங்குக் குர்ஆன் மூலமும், ஹதீது மூலமும், இதன் மூலக்கொள்கைகள் நிரூபிக்கப்பட் டிருக்கின்றன. இனி இதுசமயம் பற்பலவிதமான பெயர்களை வைத்துக் கொண்டு தங்களின் அகீதாக்களை மாற்றிக்கொண்டு கிடக்கும் இம்மனிதர்களுக்கு முன்னுண்டான அஹ்லுஸ் ஸுன்னதிகளுடைய அகீதாக்க ளென்னவா யிருந்தன வென்றும், முன் சென்ற இமாம்களும் பூர்விக அஹ்லுஸ் ஸுன்னதிகள் என்ன சொல்லியிருக்கின்றனர் என் றும் நாம் கவனிப்போம். (ஹி 93-ல் காலஞ்சென்ற) இமாம் மாலிக் பின் அனஸ்[ரலி] அவர்கள் அஹ்லுஸ் ஸுன்னதிகளின் அகீதாக்களென்ன வென்பதைப் பின் காணுமாறு குறிப்பிட்டிருக்கின்றார்கள்:—

"அகீதாக்கள் விஷயத்தில் அதிகம் நாம் பேசிக் கொண் டிருப்பதை நான் விரும்பவில்லை. இவ் வாறே எப்பொழுதும் நம்மூர் (மதீனா) உலமாக்க ளென்னும் ஞானவான்கள் இதில் பிரியமற்றவர்களா யிருந்து வந்தனர். இம்மாதிரியான வார்த்தைகள் பேசுவதையும் அன்னவர் விலக்கியிருக்கின்றனர். உதாரணமாக, ஜஹ்மென்பவரின் அபிப்பிராயத்தைக் குறித்துப் பேசிக்கொண் டிருப்பதையும், கத்ர் (கற் பனை) சம்பந்தமாகவும் இதேபோலொத்தவைகளையும் பேசவேண்டாமென விலக்கி யிருக்கின்றனர். மேலும், காரியத்தில் செய்துகாட்டாத எவ்விஷயங்களிலும் யான் விவாதம் பண்ணிக்கொண்டிருக்க விரும்பவில்லை. ஆண்டவன் ஏற்பாடு செய்த (தீனுடைய) அகீதாக்கள் சம்பந்தமாகவும், ஆண்டவனுடைய சொந்த [விஷயத் தில், அல்லா(ஹ்) எப்படியிருக்கிறான்? அவனுக்கு ஜீவ னுண்டா இல்லையா? அவன் காரியங்களை எங்கிருந்து எப்படிச் செய்துக்கொண் டிருக்கின்றான்? அவனுக்குக் காங்களெப்படி? முகமெப்படி? காதெப்படி? அவன் தன்னந்தனியாய் எங்ஙனம் எல்லாக் காரியங்களையும் செய்கிறான்? என்பனபோன்ற விஷயங்களில் வீணே தலையிட்டுக்கொண்டு உழல்வதாகும். ஹாபிஸ் பாகவீ] விஷயமாகவும் நான் பேசிக்கொண் டிருப்பதைவிடப் பேசாமல் வாய்பொத்தி மௌனமாயிருப்பதே மேலான தென எண்ணி யிருக்கிறேன். இவ்வண்ணமே நம்மூர் கல்விமான்கள், கிரியையில் செய்துகொண்டிருக்கும் விஷயங்களிலே யல்லாது இதா வியவகாரங்களில் வாதாடிக்கொண் டிருப்பது கூடாதெனக் கண்டித்து விலக்கி யிருக்கின்றனர்." (ஜாமிஃ பயானுல் இல்ம் இப்னு அப்துல் பர்)

மேலே கூறிய இமாமவர்கள் தாங்கள் மாத்திரம் அவ்வாறு எண்ணம் கொண்டில்லாது, தங்களுக்கு முன் சென்ற பெரியார்களின் மார்க்கமும் அவ்வாறே தானிருந்துவந் திருக்கின்றதென்றும் கூறியிருக்கின் றார்கள். இதுவுமல்லாமல் இவ் வாக்கியத்தின் வாயி லாய், முன்னோர்களான பெரியார்கள் ஒவ்வொரு விஷ

யத்திலும் வீண் வாய்வேதாந்தம் பேசிக் கொண் டிராமல், ஒவ்வொரு விஷயத்தையும் காரியத்தில் செய்து காட்டிக்கொண் டிருந்தனர் என்பதையும் தெளிவாய் விளங்கிக்கொள்ளுகின்றோம். அப்படியே அவர்கள் பேசிக்கொண் டிருப்பார்களாயின், எவ் விஷயம் கிரியாம்சையில் செய்துகாட்ட வேண்டியதா யிருக்கின்றதோ அதன் சம்பந்தமாகவே அவர்கள் அதிகம் தர்க்கம் செய்து பேசிக்கொண் டிருந்தார்கள். இஃது ஒருபக்கல் கிடக்க. இமாம் புகாரீ அவர்கள், "கல்க் அப் ஆலுல் இபாத்" (அடியார்களுடைய செய்கைகளின் சிருஷ்டி) என்னும் பகுதியில் முன் னோர்களான சலப் சாலிஹீன்களின் நேரான மார்க் கத்தைப் பின்காணுமாறு வரைகின்றார்கள்:—

"கஷ்டசாத்தியமான வியவகாரங்கள் சம்பந்த மாய் விவாதித்துக்கொண் டிருப்பதை அன்னவர் விருப்பங்கொண்டன ரில்லை; ஆனால், அதனை அவர்கள் வெறுத்தார்கள். மேலும், இதில் யாரேனும் சம்பந்தப் பட்டு விவாதித்துக்கொண் டிருப்பதைக் கண்டார்க ளானால், அவர்களை விட்டும் வெகுதூரத்துக்கப்பால் விலகிக்கொண்டு மிருந்தனர். ஆனால், எவ்விஷயத்தில் அல்லா(ஹ்)வினின்றும், இல்லை, எம்பிரான்[ஸல்] அவர்களி னின்று விபரம் வெளிவந்திருக்கின்றனவோ அவைகள் சம்பந்தமாய் மட்டும் அன்னவர் தங்களுடைய சிந்த னையைக்கொண்டு ஆழ்ந்து கவனித்துக் கொண்டிருந் தார்கள்."

(ஹிஜ்ரீ 279-ம் ஆண்டில் தேகவியோகமான முஹம்மத் பின் ஈஸா வெனும்) இமாம் திர்மதீ அவர் கள் சுன்னத்தைப் பின் பற்றிய இமாம்களுடைய



மூலக் கொள்கைகள் எப்படி யிருந்தன வென்பதைப் பின் காணுமாறு கூறியிருக்கின்றார்கள்:—

"கல்வி ஞானம் நிறைந்த இமாம்களான, சுப் யான் தௌரீ, மாலிக் பின் அனஸ், சுப்யான் பின் உயைனா, அப்துல்லா பின் முபாரக் வகீஃ போன்றவர் களின் மதுஹப் (செல்லும் பாதை) என்னவெனின், இந்நாயக வாக்கியங்களை யெல்லாம் அன்னவர் சொல்லி விட்டு, 'இந்த ஹதீதுகளை யெல்லாம் நாங்கள் ரிவாயத் செய்கின்றோம். மேலும், அவற்றின்படியே நாங்கள் நன்னம்பிக்கையும் கொண்டுள்ளோம். மேலும் இஃது எப்படி (யிருக்கின்றது?) என்று சொல்வது (ம எம்மி டம்) கூடாது. எனவே, இப்பாதையையே தான் ஹதீ தைப் பின் பற்றுபவர்கள் (அஹ்லெஹதீதுகள்) கைக் கொண் டிருக்கின்றனர். அஃதாவது, ஹதீதெனும் மேலான நாயக வாக்கியங்கள் எப்படி வந்திருக் கின்றனவோ அப்படியே கூறிவிடவேண்டும். மேலும், அதன்படி அப்படியே ஈமானும் கொள்ளல் வேண்டும். அதைப் பற்பல விதமாய்க் கண்ட கண்டபடி யெல் லாம் வியாக்கியானம் செய்வது கூடாது. அன்றியும் அது விஷயத்தில் எவ்விதமான சந்தேகமும் கொள் வது தகாது. மேலும், இஃது "எப்படி" யிருத்தல் சாலும்? என்று கூறுவதும் தகாது. ஞான முள் ளவர்கள் செல்லும் நேரான பாதை இதுவாகவே யிருக்கின்றது. இவ்வாறிருப்பதைத் தான் அன்னவர் விரும்புகின்றனர்."

(ஹிஜ்ரீ 463-ல் காலஞ்சென்ற அபூஉமர் யூசுப்) என்னும் இப்னு அப்துல் பர் என்பவர், முன் னோர்களான பெரியார் (அஹ்லுஸ்ஸுன்னதி) களு

டைய பாதையைப் பின் காணுமாறு காட்டுகின்றார்:—

"அஹ்லுஸ் ஸுன்னதி வல் ஜமாஅத்தார்களிடம், அல்லா(ஹ்)வின் குண விசேஷங்களாவன: ஆண்டவன் தானே கூறியிருக்கின்ற அதுவும், அவனுடைய தூதர் அவர்கள் சொல்லி யிருக்கின்ற அதுவும், எதன் மீது ஞானவான்களான மக்களெல்லாம் (அனேகமாய்) ஒரு மனப்பட்ட அபிப்பிராய முடையவர்களாயிருக்கின்றனரோ அதுவுமே யாகும். அல்லா(ஹ்)வே போல் ஒரு வஸ்துவுமில்லை. (அப்படியில்லாம லிருக்கும்போது) பிறகு அவனுடைய விஷயங்களெல்லாம், நமது யோசனையைக் கொண்டும், ஆழ்ந்த சிந்தனையைக் கொண்டும் எப்படித் தெரிந்துகொள்ளப்படல் கூடும்? மேலும், ஆண்டவனது சொந்த விஷயத்தில் நாம் சிந்தனை செய்யக் கூடாதென! விலக்கப்பட்டிருக்கின்றோம். ஆனால், அவனைக் காட்டிக்கொண்டிருக்கும் அவனுடைய சிருஷ்டிகளிலேயே நாம் நமது ஆலோசனையைச் செலுத்த வேண்டுமென்று ஏவப்பட்டிருக்கின்றோம்." (ஜாமிஃ பயானுல் இல்ம், ப. 151 மிஸ்ரீ பார்க்க.)

(பின்னர் ஹிஜ்ரீ 458-ல் காலகதியடைந்த அபூபக்ர் அஹ்மத் பின்ஹுஸைன்) இமாம் பைஹகீ அவர்கள், உலமாயெ சுன்னத்தின் ஒற்றுமையான மூலக் கொள்கைகளென்ன வென்பதைப் பின்காணுமாறு வரைந்திருக்கின்றார்:—

"அல்லா(ஹ்) அர்ஷின்மீது சரியாயிருக்கின்றான் என்று சொல்லும் இவ்வார்த்தை சம்பந்தமாய், முன்னோர்களாய அஹ்லுஸ் ஸுன்னதிகள் எவ்விதமாகவும் விவரித்துக் கூறினார்க ளில்லை. அன்றியும் இது விஷயத்தில் அவர்கள் வாக்கு வாதம் பண்ணிக்கொண்டிருந்தார்க ளில்லை. மேலும், இஃதே போலொத்த இதர விஷயங்களிலும் அவர்கள் இவ்வண்ணமே தான் நடந்து சென்றிருக்கின்றனர்."



(ஹிஜ்ரீ 385-ம் ஆண்டில் மரணமடைந்த, அபுல் ஹஸன் அலீபின் உமர் ஷாபியீயென்பவரின்) தாரகுத்னீயில் நஹ்ஷ் குராஸானீயின் (இவ்விஷயம் கிதாபுல் அஷ்ரிபாவின் இறுதியிலிருக்கின்றது. நஹ்ஷென்பார் லயீப்பாவியா யிருக்கின்றார். எனவே, இந்நாயக வாக்கியம் நபிகள்[ஸல்] அவர்கள்வரை சரியாய்ப் போய்ச் சேராமலு மிருக்கலாம். ஆனால், குறைந்தபக்ஷம் இதனால் அக்காலத்தின் நிலைமையை நாம் தெரிந்து கொள்ளுகின்றோம். இந்த நஹ்ஷ் தபஃதாபியீன்களுடைய காலத்திலுள்ளவர்.) மூலமாய்ஒரு ரிவாயத் செய்யப்பட்டிருக்கின்றது: லஹ்ஹாக்பின் முஜாஹிம், ஹஸன் பின் அபில் ஹஸன், தாவூஸ்யமனீ, மக்ஹூல் ஷாமீ, அம்ர் பின் தீனார் மக்கீ முதலிய மாபெருந் தலைவர்களும், இமாம்களும், முஹத்திதுகளும், தாபியீன்களுமான பெரியார்களெல்லாம், மக்காவின் பாலுள்ள மஸ்ஜித் கீப் என்பதில் ஒன்றுசேர்ந்த சமயம், அவர்கள் (கலா) கதர் சம்பந்தமான விஷயங்களில் ஈடுபட்டு வார்த்தையாடிக்கொண் டிருந்தார்கள். எனவே, இவர்களுள்ளெல்லாம் பெரியாரென ஒப்புக்கொள்ளப்பட்ட தாவூஸ் யமனீ என்பார் இதர்களை நோக்கி, 'நீங்களெல்லாம் சிறிது வாய்பொத்திப் பேசாமலிருப்பீர்களாயின் நான், ஹஜரத் அபூதர்தா அவர்களுடைய ஒரு நாயக வாக்கியத்தை நுங்களுக்கு எடுத்துச் சொல்லுகின்றேன்' என்று சொல்லி, எம்பிரான்[ஸல்]

அவர்களின் வாக்கியங்களைப் பின் காணுமாறு கூறினார்கள் :—

"ஆண்டவன் நுங்களுக்குச் (சில) கட்டளைகளை விதித்திருக்கின்றான். அவற்றை நீங்கள் வீணாக்கி விடாதீர்கள். மேலும், உங்களுக்குச் சில எல்லையை ஏற்படுத்தி யிருக்கின்றான்; அதை நீங்கள் கடந்து செல்லாதீர்கள். இன்னமும் சில விஷயங்களை நீங்கள் செய்ய வேண்டாமென விலக்கி யிருக்கின்றான். எனவே, நீங்கள் அவற்றைச் செய்யாதீர்கள். சில வஸ்துக்களை மறதியின்றியே சொல்லாமல் மௌனமுற்றிருக்கின்றான். எனவே, அவற்றை நீங்கள் அறியக் கஷ்டமெடுத்துத் தேடித் திரியாதீர்கள். (இப்படிச் செய்வீர்களாயின்) அல்லா(ஹ்)வின் அருளிருக்கின்றது; அதை முற்கொண்டு ஒப்புக்கொள்ளுங்கள்."

இவ்விடத்தில் (ஹிஜ்ரீ 852 அல்லது 854-ம் ஆண்டில் தேகவியோகமான ஷஹாபுத்தீன் அஹ்மத்பின் அலீபின் முஹம்மத்ஷாபியீ என்னும்) ஹாபிஜ் இப்னு ஹஜர் (அஸ்கலானீ) அவர்கள் செய்திருக்கின்ற விரிவுரை கேட்கத் தக்கதேயாம். எனவே, அவர் கூறுவதைக் கவனிப்பீர்களாக:—

"இம்மாதிரியான வியவகாரங்களில் தலையிட்டு வலிந்துரைகொள்வது, எம்பிரான்ஸல் அவர்களினாலோ, அல்லது வேறெந்த ஸஹாபியினாலோ சரியான முறையில் ரிவாயத் செய்யப்பட்டிருப்பதாய்க் காணப்படவில்லை. ஆனால், இம்மாதிரியான விஷயங்களை விளக்கமாய்ச் சொல்லவேண்டா மென்ற மறுப்பும் தென்படவில்லை. மேலும் எமது வள்ளலவர்களை நோக்கி எமதாண்டவன், 'உம்மீது இறக்கி வைக்கப்படுகின்ற அதை மனிதர்களுக்குச் சொல்லி விடுவீராக,' என்று உத்தரவு செய்திருக்கின்றான். இதனுடன் நில்லாது எமதாண்டவன், "இன்று நுங்களுடைய மார்க்கத்தை நுங்களுக்குப் பரிபூரணமாகச் செய்துவிட்டேன்," என்றும் கூறுகின்றான். எனவே, எல்லா விஷயங்களையும் பரிபூரணமாய் எமது வள்ளலவர்கள்ஸல் சொன்னதன் பின்னேயே இம்மாதிரியான வார்த்தையைச் சொல்ல வேண்டும். ஆகையால், ஆண்டவன் பக்கல் எந்த எந்தக் குண விசேஷங்களைச் சேர்க்க வேண்டும்? எது எதைச் சேர்ப்பது கூடாது என்பதை எமது நாயகம்ஸல் அவர்கள் கூறிச் சென்றே இருக்க வேண்டும். இதனால்தான் வள்ளலவர்கள்ஸல் தங்களுடைய சஹாபாக்களை நோக்கி, 'என் காலத்திலில்லாத உலக மக்களுக்கும், பின்னே தோன்றிக் கொண்டிருக்கும் ஏனைய மக்களுக்கும் யான் சொல்லுகின்ற விஷயத்தைச் சொல்லி விடுங்கள்' என்று கூறினார்கள். மேலும், இதன்படியே எமது வள்ளல்ஸல் அவர்களுடைய ஒவ்வொரு சிறிய காரியத்தையும், விஷயத்தையும், நல்லுபதேசத்தையும், இஃதே போன்ற இதர காரியங்களையும் சஹாபாக்கள் உலகத்தினர் பால் எடுத்தோதி யிருக்கின்றனர். இதனாலேற்படுவதென்னவெனின், ஆண்டவன் எப்படி நாடியிருக்கின்றானோ, அப்படியே ஒவ்வொருவரும் ஈமான் கொள்ள வேண்டுமென்பதே.

மேலே சொல்லிக்கொண்டு வந்த ஹாபில் சாஹிப் அவர்களுடைய கருத்தென்னவெனின், ஆண்டவன் தன்னுடைய மார்க்க சம்பந்தமாய் எவ்வளவு சொல்ல வேண்டி யிருந்ததோ, அதையெல்லாம் தன் ரசூலின்

மூல்மாய் மனிதர்களுக்குச் சொல்லிவிட்டான். அன்றி யும் சஹாபாக்கள் நாயகம்ஸல் அவர்களினின்றும் தாங்கள் எதைக் கேட்டார்களோ, அதை அப்படியே தமக்குப் பின்னுண்டானவர்களுக்கு எடுத்துக் காட்டிச் சென்றனர். எனவே, இதா விஷயங்களெல்லாம் மார்க்கத்தில் அத்தியாவசியமாய்க் காணப்படுமாயின், அதனையும் அன்னவர் கற்றுக்கொடுத்துச் சென்றிருப்பார்கள் என்பதாகும்.

(ஹி 1174-ம் ஆண்டில் காலஞ்சென்ற வலீய்யுல்லா பின் அப்துர் ரஹீம் என்னும்) ஹஜரத் ஷாஹ் வலீயுல்லா சாஹிப் அவர்கள் பின்காணுமாறு கூறியிருக்கின்றார்கள்:—

"எமதாண்டவன், அறிவினாலும், புத்தியினாலும், பஞ்சேந்திரியங்களினாலும் அறிந்துகொள்ள முடியாதவனாகவும், அவனுடைய குண விசேஷங்கள் ஆதார ஆதேயங்களின்மீது சார்ந்திருப்பவனே போலச் சார்ந்திருக்கின்றனவா வென்பது உணர்ந்துகொள்ள முடியாததாகவும், சர்வ சாதாரணமான எல்லா ஞானமும், அறிவும் அதனைத் தெளிந்துகொள்ள முடியாதனவாகவும்,மேலும் அவனுடைய அந்தரங்கங்களைநாம்அறிந்துகொண்டிருக்கும் எம்மொழிகளாலும், சொற்களாலும் நிறைவேற்றித் தெரிவிக்க முடியாதவனாகவும் மகாமகா மேலான உயரிய ஸ்தானத்தி லிருந்துகொண்டிருக்கின்றான். இஃது ஒரு பக்கம் கிடக்க. ஆண்டவனின் குணங்களை ஒரு சிறிதேனும் விளக்கிக் காட்டி மனிதனுடைய ஞானத்தை, உறுதியானதாகவும் பூரணமானதாகவும் செய்ய வேண்டுவது மற்றொரு பக்கல் மிக்க அத்தியாவசியமாய்க் காணப்படா நின்றது.



எனவே, ஆண்டவனுடைய அடை மொழிகளை அப்படியே உணர்ந்துகொள்ள முடியாமற் போயினும், அவற்றின் பயன்களைக் கொண்டும் அதனால் அத்தியாவசியமாய் உண்டாகும் காரியங்களைக் கொண்டும் ஒரு சிறிது உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். உதாஹரணமாக, நாம் ஆண்டவனுக்கு ரஹ்மத் தென்னும் அருள் இருப்பதாய்ச் சொல்லுகின்றோம். அதன் கருத்து நன்மை யென்னும் அருட் கொடையாய்க் காணப்படுகின்றது. அது மனத்தினின்று தோன்றும் சொந்தமான ஒரு நிலையன்று. (இதற்கே உண்மையில் ரஹ்மத் என்று சொல்லப் படுகின்றது.) இவ்விதமாகவே ஆண்டவனுடைய தாராளத் தன்மையையும், திராணியையும் வெளியாக்கும் பொருட்டு, மனிதர்கள் பால் சொல்லப்படும் அவ் வாக்கியங்களைக் கொண்டே அறிவிக்க வேண்டியவர்களா யிருக்கின்றோம். ஏனெனின், மனிதர்கள் பால் வழங்கப்பட்டு வரும் இச்சொற்களை விட மிக அர்த்த புஷ்டி தாத்தக்க மேலான சொற்களைக் கண்டுகொள்வது முடியாமலிருக்கின்றது. எனவே, இம்மாதிரியே ஆண்டவனின் அனேக குணங்களுக்கு மனிதர்களேபோலத்தான் ஒப்பிட்டுக் காட்ட வேண்டியதா யிருக்கின்றது. ஆனால், இதுவே ஆண்டவனின் உண்மையான குண விசேஷங்களுக் கொப்பாய் இருக்கின்றனவென் றெண்ணுவது கூடாது. 'அதுதான் அல்லா(ஹ்)வின் மகாத்தியத்துக்கும் அந்தஸ்துக்கும் சமுகத்துக்கும் ஒத்ததே போல் அமைந்து கிடக்கின்றது........... மேலும், ஆண்டவனுடைய சற்குண விசேஷங்களெல்லாம் இவ்வாறேதான் சொல்லப்பட்டு வருகின்றனவென்று உண்

மையான மதஸ்தர்களெல்லாம் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். ஆகையால், ஆண்டவனுக்கும் நம்முடைய வார்த்தைகளையே சொல்லலாம். ஆனால், இதற்கப்புறம் சென்று இதில் விதண்டா வாதம் செய்துகொண்டிருப்பது தகாது. இவ்வாறே முன்னோர்களான ஸஹாபாக்களும், தாபியீன்களும், தபஉ தாபியீன்களும் நடந்துகொண்டிருக்கின்றனர். ஆனால், துரதிருஷ்ட வசமாய்ச் சில முஸ்லிம்கள் தோன்றி, எவ்விதத் தக்க ஆதாரமுமின்றியே இவ்வியவகாரங்களில் தங்கள் இஷ்டமேபோல் தலையிட்டு வீண் புரட்சிகளை உண்டுபண்ணியிருக்கின்றனர்.''

ஷாஹ் சாஹிப் அவர்கள் பார்ஸீ மொழியில் கோவை செய்திருக்கும் தம்முடைய வசாயா வில் (மரண உபதேசம்) பின் காணுமாறு வரைந்திருக்கிறார்கள் :—

"இவ்வேழை முதன்முதலாய்ச் செய்யும் வசியத்தென்னவெனின், குர்ஆனிலும் எம்பிரான்[ஸல்] அவர்கள் திருவாக்கியங்களிலும் இஃதிகாத் என்னும் மனோ உறுதியிலும் வணக்கக் காரியங்களிலும் காணப்படும் சிக்கலான விஷயங்களில் காங்களை மூடிக்கொண்டு அவைகள் கூறுகின்றபடி நடந்து வரவேண்டும்......... அகீதாக்களென்னும் மனோ உறுதி சம்மந்தமாய் மூதாதையர்களான அஹ்லு ஸுன்னதிகள் நடந்து சென்ற வழியைப் பின்பற்ற வேண்டும். ஏவ்விஷயங்களை அம்முன்னோர்கள் ஆழ ஆராய்ந்து சிந்தனை செய்யாமலிருந்தார்களோ, அதனை நாம் விட்டுவிடவேண்டும். அன்றியும் பரிபூரண ஞானமற்றவர்கள் உளறி வைத்திருப்பதை ஏறெடுத்துப் பார்ப்பதும் தகாது.''



இதுவரை நாம் சகல விஷயங்களையும் பொதுவாய் எடுத் துரைத்துக்கொண்டு வந்தோம். இனிக் குறிப்பாய்ச் சில விஷயங்களைக் குறித்து நாம் பேசவேண்டியதா யிருக்கின்றது. ஏனெனின், அப்பொழுதுதான் இச் சில்லறை விஷயங்களில் முன்னோர்களான அஹ்லு ஸுன்னதிகள்—எமது வள்ளல்[ஸல்] அவர்களால் அக்காலத்தவர், மேலானவரென்றும் சிறந்தவரென்றும் சொல்லப்பட்டவர்கள், என்ன அபிப்பிராயங் கொண்டிருந்தனர் என்பதை நாம் சுலபமாய்த் தெரிந்துகொள்ளுதல் கூடும்.

## ஜப்ர் கத்ரின் மஸ்அலா

இஃதிகாதியாத் தென்னும் மனோ உறுதி சம்பந்தமான விஷயங்களினின்று இதில்தான் (தலைப்பில்வரைந்துள்ளதில்தான்) முதலாய்ப் பேச்சு வார்த்தைகளும் வாக்கு வாதங்களும் உண்டாயின. இவ்விஷயம் சாமானியமான தென் றெண்ணிவிடற்க. இவ்வியவகாரங்களில் உண்டாகும் கேள்விகளுக்கு மார்க்கமென்ன? இவைகட்கு பலாசிபர்களும் சரியான விடையிறுத்து விடலாமென் றெண்ணுவது முடியாத காரியம். அன்றியும், இப்பிரச்சினையை இஸ்லாம் மட்டுமல்லாது உலகத்தின் ஏனைய மதங்களெல்லாமும் தன்னகத்தே கொண்டுதா னிருக்கிறது. உண்மையைக் கவனிக்குமிடத்து, சமயத்தின் சூக்ஷ்மமே புத்திக்கு எட்டாத இப்பெரிய இரகசியத்தி னுள்ளேயே அமைக்கப்பட்டிருக்கின்ற தெனலாம். எனவே, இவ்விஷயத்தில் தலையிட்டு ஒரு காரியத்தை உண்டென்றோ அல்லது இல்லை என்றோ நாம் சொல்வோமாயின், உலகத்தின்

பால் காணப்படும் சர்வ சமயங்களின்மீதும் அது தாக்குகின்றதாகவே ஏற்படும்.

ஒரு சமயம் எமது வள்ளல்[ஸல்] அவர்கள் வீட்டினின்றும் வெளியே வந்தபோது, சில சஹாபாக்கள் கூடி உட்கார்ந்து வார்த்தையாடிக் கொண்டிருப்பதைக் கண்டு, 'எவ்விஷயமாகப் பேசிக் கொண்டிருக்கின்றீர்கள்?' என்று வினவ, சஹாபாக்கள் 'கத்ர் (கற்பனை) உடைய விஷய சம்பந்தமாய்ச் சம்பாஷித்துக் கொண்டிருக்கிறோம்' என விடையிறுத்தார்கள். இதைச் செவியுற்றவுடன் நயினார்[ஸல்] அவர்களின் முகாரவிந்தம் கோபத்தின் காரணமாக மிக்க சிவப்பு நிறமாய் மாறியது. அவர்களின் வதனம் மாதுளை விதை பதிக்கப்பட்டதேபோல் தென்பட்டது என ராவீ கூறுகின்றார். இதைக் கேட்டவுடன் ரசூல்[ஸல்] அவர்கள், 'உங்களுக்கு முன் உண்டான சமூகத்தினர்களெல்லாம் இவ்விஷயத்தினாலேயே நாசமடைந்தனர். எனவே, நீங்கள் இவ்விஷயத்தில் சண்டையிட்டுக் கொண்டிருக்க வேண்டாம் என வற்புறுத்துகின்றேன்,' என்று சஹாபாக்களுக்குக் கூறினார்கள்.

ஹஜரத் காஸிம் பின் முஹம்மத், (சித்தீக் அக்பரின் பேரனார்) மதீனாவின் தாருல் பிக்ஹின் பிரபல தலைவராய் விளங்கிக் கொண்டிருந்தார். இவர் ஒரு சமயம், சில மனிதர்கள் உட்கார்ந்து கொண்டு கத்ரின் பிரச்னை சம்மந்தமாய் வார்த்தையாடிக் கொண்டிருந்ததைக் கண்டு, 'எதை ஆண்டவன் விலக்கியிருக்கின்றானோ அதினின்றும் நீங்கள் தப்பிக் கொண்டிருப்பீர்களாக' என்று கூறினார்கள்.

அல்லா(ஹ்)வின் கலாம் (வார்த்தைகள்) பூர்விக



மானவையா? அல்லது புதிதாகச் சிருஷ்டிக்கப்பட்டனவா? அல்லது சிருஷ்டிக்கப் படாதனவா? என்னும் இப்பிரச்னை (ஆதியில் இரண்டாம் நூற்றாண்டில் கலீபாவாய் விளங்கிய) மாமூன் அப்பாஸீ என்பவரின் காலத்திலேதான் தோன்றிற்று. கலாம் என்பது அல்லா(ஹ்)வின் அடைமொழியாயிருக்கின்றது. எனவே, இஃதும் ஆண்டவனேபோல் ஆதியற்றதாகவும் சிருஷ்டிக்கப் படாததாகவுமே இருத்தல் வேண்டும். இதனால்தான் முஹத்திதீன்களும் ஜாஹிரிய்யாக்களும், ஆண்டவனின் கலாம் சிருஷ்டிக்கப் படாததே என்றுமே உறுதிகொண்டிருக்கின்றனர். முஃதஜிலாக்கள், "அல்லா(ஹ்)வின் கலாம் அவனுடைய நிர்க்குண பிரம்மத்தைத் தவிர்த்து வேறானதாகும். எனவே, அவனுடைய பிரம்மத்தை விடுத்து இதர வஸ்துக்களெல்லாம் புதியனவாகவும் சிருஷ்டிக்கப் பட்டனவாகவுவே இருக்கின்றன. இதனால்தான் எமது குர்ஆன், "அவனின் பிரம்மத்தைத் தவிர்த்து இதர வஸ்துக்களெல்லாம் அழிந்துபோகக் கூடியவையாயிருக்கின்றன" (28:88) என்று கூறுகின்றது எனக் கூறிக்கொண்டிருக்கின்றனர். மேலும், "குர்ஆனுக்குள் பிர்ஔன் ஹாமான் முதலியவர்களின் நாமங்களிருக்கின்றன. ஆதலால் அல்லா(ஹ்)வின் கலாம் பூர்விகமானதாகவும் சிருஷ்டிக்கப் படாததாகவும் இருக்குமாயின், இம்மனிதர்களும் சிருஷ்டிகளாயில்லாது பூர்விகமானவராய் ஆய்விடுவர்," என்றும் கூறுகின்றனர்.

ஆகவே, எக்காலத்தில் இப்பிரச்னை உண்டாயதோ, அது சமயம் திகழ்ந்த ஹனபிலா, அஷாயிரா, மாதுரீதிய்யாவைச் சார்ந்த மாபெரும் தலைவர்களான

உலமாக்களும் ஸுன்னத்தைச் சார்ந்த இமாம்களும், அல்லா(ஹ்)வின் கலாம் சிருஷ்டிக்கப் படாததும் பூர்விகமானதுமாகும் என்று கூறிக்கொண் டிருந்தனர். இது சமயம் இமாம் அஹ்மத் பின் ஹம்பல் அவர்கள் அரசரான மாமூனுடைய அபிப்பிராயத்துக்கு விரோதமாக மிகத் தைரியத்துடன் எதிர்த்து நின்றார்கள். எனவே, அவர்களும் அஹ்லு ஸுன்னதிகளுடைய நேரான மார்க்கம் இதுதான் என்று பகிரங்கமாய்க் கூறி நின்றார்கள். ஆகவே, முரட்டுத்தனமோ சமூகத் துவேஷமோ எதிரிடையான குரோதமோ ஒரு பக்கத்தில் கிடக்கட்டும். நீங்கள் சாந்தமாகவும் சமாதானமாகவும் ஆழ அமர்ந்து யோசித்துப் பாருங்கள். குர்ஆன் புதிதென்பதும், பூர்விக காலத்தியதென்பதும், சிருஷ்டிக்கப்பட்டதென்பதும், சிருஷ்டிக்கப்படாததென்பதும் முஹம்மது ரசூலுல்லாஹ்[ஸல்] அவர்களின் இஃதிகாதிலும் சஹாபாக்களுடைய மனோ உறுதியிலும் சேர்ந்துதானா யிருந்தன? (இல்லை, இல்லை.) எமது இஸ்லாமோ "குர்ஆன் அல்லா(ஹ்)வின் வாக்கியங்களா யிருக்கின்றன. அவை ஆண்டவனிடத்திருந்தே வந்தன என்று நாம் பரிபூரணமாய் நம்பவேண்டும்," என்றுதான் எச்சரிக்கை செய்துகொண் டிருக்கிறது.

இவ்வாறு வந்ததற்குக் காரணமென்ன வெனின், 'யாராயினும் குர்ஆன் அல்லது அல்லா(ஹ்)வின் கலாம் சிருஷ்டிக்கப் பட்டதா யிருக்கிறது' என்று புகல்வானாயின், அவன் காபிரா யிருக்கிறான் என அஹ்லு ஸுன்னதி உலமாக்கள் (கல்விமான்கள்) மார்க்கத் தீர்ப்பனித்திருந்தனர். இதனால், 'அது சிருஷ்டிக்கப் படாதது' என்று சொல்லப்பட வேண்டுமென்பது அன்ன



வரின் கருத்தன்று. ஆனால், அவர்களின் தாத்பரியமாவது குர்ஆனிலும் ஸுன்னத்திலும் (ஹதீதிலும்) காணப்படாத ஒரு விஷயத்தைப் புதியதாய் முஃதஜிலாக்களைப்போல் ஏன் கொணர்ந்து சேர்த்தல் வேண்டும்? இவ்வாறு செய்வது தகாது என்பதே அவர்களின் முக்கிய தாத்பரியமாகும். மேலும் இமாம் புகாரீ அவர்கள் 'ஜுஜ்வு அப்ஆலுல் இபா'தில் இதர பல வார்த்தைகளுடன் உலமாயெ ஸுன்னத்தவர்களுடைய பின்கண்ட வார்த்தைகளையும் வரைந்திருக்கின்றார்கள், அலீ பின் அப்துல்லா சொல்லுகின்றார்கள்:—

"குர்ஆன் அல்லா(ஹ்)வின் கலாமாகும். யாரேனும் அது சிருஷ்டிக்கப் பட்டது என்று சொல்வானாயின், அவன் காபிராவான்."

சுப்யான் பின் உயைனா அஹ்லுஸ் ஸுன்னதிகளுள் பெரியாராய் விளங்குகின்றனர். அவர்கள் பின் காணுமாறு மிகக் கோபத்துடன் கூறுகின்றார்கள்:—

"உங்கள் நிலைமைக்குப் பரிதாபம்! குர்ஆன் அல்லா(ஹ்)வின் கலாமா யிருக்கின்றது. நான் பெரியார்களுடன் சேர்ந்து பழகி யிருக்கின்றேன். நான் அன்னவர்களுடைய காலத்தையும் பெற்றுக் கொண்டேன். அவர்கள் (யாரெனின்) அம்ருப்னு தீனார், இப்னுமுன்கதிர்" என்பவர்களின் நாமங்களைக் குறிப்பிட்டதுடன் நில்லாது, மன்சூர், அஃமஷ், முஸ்அர் பின் கதாம் முதலியவர்களையும் சுட்டிக்காட்டினார்கள். மேலும் சுப்யான் பின் உயைனா சொன்னதாவது: (மேற் குறிப்பிட்டப் பெரியார்களான) "இவர்க

ளெல்லாம் முஃதஜிலாக்களையும், ராபிலிய்யாக்களையும், கத்ரிய்யாக்களையும் கண்டித்தார்கள். மேலும், இம்மாதிரியான வர்க்கத்தினரின் சகவாசத்தை வைத்துக்கொள்ள வேண்டாமென விலக்கியு மிருக்கின்றார்கள். மேலும், குர்ஆன் ஆண்டவனின் கலாமென்பதைத் தவிர்த்து வேறொன்றையும் நாங்களறியேம். யாரேனும், இதனைத் தவிர்த்து வேறு வார்த்தைகளைக் கூறுவானாயின், அவன்மீது அல்லா(ஹ்)வின் சாபமுண்டாகும்,'' என்பதே.

லாஹிரிய்யாக்க ளென்போர், சஹாபாக்களும் 'குர்ஆன் சிருஷ்டிக்கப் படாததென்று கூறியிருக்கின்றனர் என்று சில ரிவாயாத்துகளை (வார்த்தைகளை)க் கூறியிருக்கின்றனர்' என்றெடுத்து(த் தங்களுக்காதாரமாய்)க் காட்டிக்கொண் டிருந்தனர். ஆனால், 'இந்த ஹதீதுக ளெல்லாம் ஆதார மற்றனவும் பொய்யானவு மாகும்' என ஹாபிஜ் அபூ அஹ்மத் அவர்கள் கூறியிருக்கின்றார்கள். எவ்வாறெனின், "குர்ஆன் விஷயத்தில் சஹாபாக்கள் எவ்விதத் தர்க்கமும் செய்துகொண் டிருந்ததாய் ஆதாரமொன்றும் காணப்படவில்லை,'' என்பதே.

இஸ்ஹாக் பின் ராஹுவிய்யாவி னிடம் மனிதர்கள் சென்று, 'குர்ஆன் சிருஷ்டிக்கப் பட்டது' என்று இது சமயம் கிளர்ச்சி உண்டா யிருக்கின்றதே! இது விஷயமாய்த் தங்கள் அபிப்பிராய மென்ன? என்று வினவினார்கள். இதற்கு விடையில் அவர்கள் சொன்னதாவது:—

"குர்ஆன் அல்லா(ஹ்)வின் கலாமும், (வார்த்தையாகவும்) அவனது ஞானமும், அவனுடைய வஹீயுமா



யிருக்கின்றது. அது சிருஷ்டிக்கப் பட்டதன்று.''

மஹாத்மியம் பொருந்திய சஹாபாக்களுடைய சமூகத்திலெல்லாம் இருந்துகொண்டிருந்த அம்ருபின் தீனா ரவர்களும், இதுவேதான்தான் நல்லோர் செல்லும் மார்க்கமா யிருக்கின்றது என்று விளம்பி யிருக்கின்றார்கள். எப்படியெனின்:—

"இதன்படியே இவ்வும்மத்துகளின் இனிய முந்திய காலம் சென்றுவிட்டது. இந்தக் குர்ஆன் விஷயத்தில் அவர்கள் விகற்பஞ் செய்துகொண் டிருந்தார்களில்லை.''

ஹஜரத் இமாம் ஜைனுல் ஆபிதீன் அலீபின் ஹுஸைன் அவர்களிடம் ஒருவர் சென்று, "இந்தக் குர்ஆன் சம்பந்தமாய்த் தாங்கள் என்ன சொல்லுகின்றீர்கள்?'' என்று வினவ, 'குர்ஆன் ஆண்டவனுடைய வேதமாகவும் அவனது வார்த்தையாகவு மிருக்கின்றது' என்று கூறினார்க ளென்றும், மற்றொரு சொற்படி 'குர்ஆன் சிருஷ்டி கர்த்தாவு மன்று; சிருஷ்டிக்கப்பட்டது மன்று. ஆனால், (குர்ஆன்) சிருஷ்டி கர்த்தனின் வார்த்தைகளா யிருக்கின்றது' என்று கூறினார்க ளென்றும் சொல்லப்படுகிறது. (எந்த மனிதர்கள் குர்ஆன் சிருஷ்டிக்கப் பட்டதன்று எனக் கூறுகின்றனரோ, அவர்கள் இது சிருஷ்டி கர்த்தாவென்று ஒத்துக்கொள்ளாமற் போயினும், சிருஷ்டி கர்த்தனின் ஒரு பாகமாகவேனும் இருக்கின்றது என்று அத்தியாவசியமாய் ஒப்புக் கொள்ளும்படியாகவே ஏற்படும்.)

இவ்வாறே இமாம் ஜஃபர் ஸாதிக் அவர்கள் கூறியிருக்கின்றார்கள். அஃதாவது:—"குர்ஆன் சிருஷ்டி

கர்த்தாவு மன்று, சிருஷ்டிக்கப் பட்டது மன்று; ஆனால், உயர்த்தியான அல்லா(ஹ்)வின் கலாமா யிருக்கின்றது." மேலும், இம்மாதிரியே இமாம் அப்துல்லா பின் முபாரக் அவர்களும் அபிப்பிராயங் கொண்டிருக்கின்றார்கள்.

மன்சூர் பின் அம்மார் ஒரு முஹத்திதாவர். இவரிடம் ஒருவர் சென்று, "கலாமெ இலாஹீ அப்படியே ஆண்டவனா யிருக்கின்றதா? அல்லது அவனுடைய ஒரு பாகமா யிருக்கின்றதா? அல்லது அல்லா(ஹ்)வினின்று தனியே வேறாய்ப் பிரிந்து நிற்கின்றதா?" என்று வினவியபோது, இதற்கு விடையில் மன்சூர் சொன்னதாவது:—"ஆண்டவன் வீண் புரட்சிகளினின்று நம்மைக் காப்பாற்ற வேண்டும். மேலும், நம்மனைவரையும், அஹ்லுஸ் ஸுன்னதி வல்ஜமாஅத்தில் சேர்த்துவைக்க வேண்டும். நபிமார்களுக்குப் பின் மனிதர்கள் ஆண்டவன் விஷயமாய் வீணான குழப்பங்களை உண்டுபண்ணிக் கொண்டிருப்பது தகாது. குர்ஆன் சம்பந்தப்பட்ட இம்மாதிரியான விஷயங்களில் தலையிடுவது ஒரு வீண் நவீன பித்அத்தா யிருக்கின்றது என்றே எண்ணுகின்றோம். இதில் வினவுபவரும், விடையிறுப்பவரும் சேர்ந்தேயிருக்கின்றனர். தன்மீது கடமையல்லாத ஒரு விஷயத்தையே கேள்வி கேட்போன் செய்கிறான். மேலும், தன்மீது விதிக்கப்பட்டில்லாத ஒரு விஷயத்துக்காகவே கஷ்டப்பட்டு விடையிறுக்கிறான். அல்லா(ஹ்)வைத் தவிர்த்து இதர வஸ்துக்க ளெல்லாம் சிருஷ்டிக்கப் பட்டவைகளாகவே யிருக்கின்றன. குர்ஆன் அல்லா(ஹ்)வின் கலாமாகும். அதற்குப்பின் (அதிகமாய்ப் பேசா



மல்) நிறுத்திக் கொள்ளுங்கள். குர்ஆன் சம்பந்தமான எந்த வர்ணனையும் நுங்கள் புறமிருந்து சொந்தமாய்ச் சொல்லாதீர்கள். இல்லையேல், நீங்கள் வழி தவறிப் போவீர்கள்." மேலும், இம்மாதிரியான அனேக வார்த்தைகள் இமாம்களினின்றும் ஏற்பட்டிருக்கின்றன.

"அல்லா(ஹ்) வானத்தின்மீ திருக்கின்றான்; அன்றியும் மற்றெல்லா விடங்களிலு மிருக்கின்றான்." இவ்விரண்டு விதமான வார்த்தைகளும் குர்ஆன் ஷரீபில் கூறப்பட்டிருக்கின்றன. இதுவுமல்லாமல், "நீங்கள் எந்தப் பக்கம் திரும்புகின்றீர்களோ அந்தப் பக்கமெல்லாம் ஆண்டவன் இருந்து கொண்டிருக்கிறான்" என்றும், இன்னமும் "அருளாளன் அர்ஷின் மீது சரியாயிருக்கிறான்" என்றும் திருக் குர்ஆனின்பால் காணக்கிடக்கின்றன.

சில இமாம்கள் இவ்வாக்கியங்களுக்குத் தாத்பரியம் கொள்ளும்போது, ஆண்டவனுடைய மெய்ப்பொருள் வானத்திலேதா னிருக்கின்றது; ஆனால், அவன் தன்னுடைய ஞானத்தின் தோற்றத்தால் சகல இடங்களிலும் சர்வ சம்பூரணமாய் அமைந்தவனா யிருக்கிறான் என்று கூறுகிறார்கள். ஜஹ்மிய்யாக்க ளென்போர், 'அல்லா(ஹ்)வுடைய மெய்ப்பொருளே எல்லா இடங்களிலும் நிறைந்து கிடக்கின்றது' என்று கூறுகின்றனர். இமாம் மாலிக் அவர்களிடம் ஒருவர் சென்று, "அருளாளன் அர்ஷின் மீது சரியா யிருக்கின்றான்" என்று குர்ஆனில் காணப்படுகின்றதே! இதன் தாத்பரிய மென்னவென்று வினவியபோது, அவர்கள் இதனைக் கேட்டதும், தலை

குனிந்து கொண்டு சொன்னதாவது:—"சரியாயிருத்த லென்பது தெரிந்த விஷயமே. ஆனால், அஃது எப்படி யென்னும் விதம் தெரியாது. அதைக்கொண்டு ஈமான் கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகும். இதைப் பற்றிக் கேட்பது ஒரு நவீன பித்அத்தாகவே யிருக்கின்றது."

மேலே சொன்ன சில வார்த்தைக ளினாலேயே, இமாம் மாலிக் அவர்கள் முன் சென்ற பெரியார் களுடைய மூலக் கொள்கை என்னவா யிருந்ததென் பதை நன்கு விளக்கிக் காட்டி யிருக்கின்றார்கள் என் பது தெரிகின்றது. மேலும் அது பற்பல விதமான விதண்டா வாதங்களுக்கும் அறிவாராய்ச்சியினால் உண் டாகும் சகல சந்தேகங்களுக்கும் போதிய விடையாய் விளங்கா நின்றது. எப்படி யெனின், இதை விளக்கு வான் வேண்டியே அவர்கள் உணர்த்தி யிருக்கும் விஷயங்களைச் சிறிது விளங்கிக் கொள்வீர்களாக. அஃதாவது, நீங்கள் இஃதிகாத் கொள்ளும் ஒவ் வொரு மனோ உறுதி சம்பந்தமான விஷயமும் நீங்கள் கொண்டிருக்கும் மனப்பான்மைக்கும், நுங்களுடைய தர்க்க வாதங்களுக்கும், உங்கள் அறிவின் ஆதாரங் களுக்கும் தக்கவிதமாய் அமைந்திருத்தல் வேண்டு மென்று எண்ணங் கொள்வீர்களாயின், இது நுங் களுடைய தவறுகவேதா னிருக்கின்றது. ஏனெ னின், நாளை ஒருவர் தோன்றி, நுங்களைக் காட்டினும் மிக அழகாகவும், தீரமாகவும், தெளிவாகவும் ஒவ் வொரு விஷயத்தையும் எடுத்துக்கொண்டு, நீங்கள் கொண்டிருக்கும் மனப்பான்மைக்கு விரோதமாய்ச் சொல்லிக்கொண் டிருப்பாராயின், இதுசமயம் நீங் கள் கொண்டிருக்கும் மனோ உறுதியை மாற்றிக் கொள்ளப் போகின்றீர்களா? இல்லை; இரண்டு நாட் களுக்குப் பின் மற்றொருவர் தோன்றி, மற்ற மனிதர் களைக் காண மிக மிக மேலாய் ஒவ்வொரு வியவ காரத்தையும் விளக்கிக் காட்டிக்கொண்டு செல்வா ராயின், அது சமயமும் நுங்களுடைய புதிய மனோ உறுதி மாறுதலடையப் போகின்றதா? இவ்வண்ணமே பிரதி தினமும் (இல்லை, பிரதி மாதமும்) நுங்களுடைய மனோ உறுதியினை மாற்றிக் கொண்டிருக்கப் பிரியப் படுகின்றீர்களா? மேலும் பிரதிதினமும் உதயமாகும் கதிரவனுடனே நுங்களின் மார்க்கமும் மறைந்து கொண்டும் பின்னர்த் தோன்றிப்பிரகாசித்துக்கொண்டு மிருக்கப் போகின்றதா? (என்பதையே வினவு கின்றேன்).



நாம் மேலே கூறிக்கொண்டு வந்ததி லிருந்து சில நேயர்கள், அஹ்லுஸ் ஸுன்னதிக ளென்னும் மக்கள் பால் மார்க்கமென்பது அறிவுக்கு நேர் விரோதமான தென்றும், குறைந்த பக்ஷம் மார்க்க மென்பது புத்திக் கொத்ததா யிருக்க வேண்டியது அவசியமின்று என் றும் ஏற்படுகின்றன எனச் சந்தேகங் கொள்ளலாம். எனவே, இவ்வையத்தை இங்கு நிவாரணம் பண்ண வேண்டியது அத்தியாவசிமா யிருக்கின்றது. எனவே, முதன் முதலாய் இங்கு இரண்டு விஷயத்தைக் கவ னித்தல் வேண்டும்:

(1) நாம் கிரியை சம்பந்தமாகவும், அகீதாக்கள் சம்பந்தமாகவும், எந்த மட்டில் மார்க்கமென்று ஏற் றுக் கொண்டிருக்கிறோமோ, அதிலும் முக்கியமாய் எம்பிரான்[ஸல்] அவர்கள் எம்மாத்திரம் கூறிச் சென்றி

ருக்கின்றார்களோ (அதுவே உண்மையில் சத்திய மார்க்கமா யிருக்கிறது) அவைகளின் மூலக்கொள்கையான விஷயங்களும் அதினின்று பிரிந்த சில்லறை விஷயங்களும் அறிவுக்கும் யுக்திக்கும் பொருத்தமான மேலான ஸ்தானத்திலேயே அமைக்கப் பட்டிருக்கின்றன. இவைகளுள் ஒன்றேனும் மனிதர்களின் யுக்திக்கு விரோதமா யில்லை. இதற்கான ஆதாரங்களையெல்லாம் எமது ஷரீஅத் தன்னுடைய தஅவாவுடன் தலீலையும் விளக்கிக் காட்டியிருக்கிறது. இதை உற்றுக் கவனிக்கும் உத்தமர்கள் எமது ஷரீஅத்தின் கிரியைகளனைத்தும் சரியானபுத்திக்கு ஒத்தவையாகவேஅமைக்கப்பட்டிருக்கின்றன என்பதை உணர்ந்து கொள்வர். ஆனால், திருக் குர்ஆனி னின்றும், ஹதீதினின்றும் எடுக்கப்படாததும் உண்மையில் மார்க்கத்தின் மூலக்கொள்கை யல்லாததுமான இல்மெ கலாம் ஆகாத சிந்தனைகளினாலும் வாக்கு வாதங்களினாலுமே ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது. ஒரு சமயம் இஃது அறிவுக்கு விரோதமான விஷயங்களாகவும் கைக்குக் கிட்டாத வெறும் வீண் மனோபாவங்களாகவும் இருக்கலாம். ஆனால், இதனால் எமது இஸ்லாமே அறிவுக்கு ஒத்த வண்ணமா யில்லை என்று கொள்வது கூடாத காரியமாகும்.

(2) இரண்டாவதாக, கவனிக்க வேண்டியதாவது: ஒரு காரியம் அறிவுக்கு மாற்றமா யிருக்கிறதென்று நாம் சொல்வோமாயின், அவ்வாறு கூறுவதன் உள் தாத்பரிய மென்னவெனின்; நம் அறிவானது முதன் முதலாகவே ஒரு விஷயத்தை மகா உறுதியாகத் தீர்மானம் பண்ணிக்கொண்டு விட்டது;



இப்போது அதை மாற்றுவது முடியவே முடியாது. இவ்வாறிருக்கும் சமயம் மார்க்கம் ஒரு புதிய விஷயத்தை விளக்குகின்றது. இப்புதிய விஷயத்தை ஒப்புக்கொண்டு ஏற்கனவே அறிவானது முடிவு செய்து கொண்டிருக்கின்ற தீர்மானத்தை மாற்றிக்கொள்ளுவது முடியாது என்பதேயாகும். ஆனால், ஈங்குச் சிறிது ஆழ்ந்து கவனிக்க வேண்டும்: மார்க்கத்துக்கும் அறிவுக்கும் ஒவ்வாத சில விஷயங்கள் உண்மையிலேயே அறிவைக்கொண்டு மட்டும் ஸ்திரமாகிவிட்டனவா? அவற்றிற்கு மாற்றமாக எவ்விஷயமும் உண்டாதல் கூடாது என்று முடிவாகி விட்டதாகவா எண்ணுகின்றீர்கள்? அதையே உண்மையெனக் கொண்டு அதற்கு விரோதமாய்க் காணப்படும் விஷயங்களெல்லாம் தவறானவே என்று கருதுகின்றீர்கள்? இல்லை; இல்லை. ஒரு விஷயத்தைத் திடீரென இஃது அறிவுக்கும் ஞானத்துக்குமே முற்றும் முரணானதா யிருக்கின்றது என்று சொல்லிவிடாதீர்கள். ஆனால், இவ்விஷயம் நம்முடைய அறிவைக்கொண்டு தீர்மானிக்க முடியாததாய் இருக்கின்றது என்று தாராளமாய்ச் சொல்லுங்கள்.

(3) இங்கு நீங்கள் இறுதியாக மற்றுமொரு ஆக்ஷேபஞ் செய்யலாம். அஃதாவது, அறிவைப் பிரதானமாகக் கொண்டு நமது இஸ்லாம் நிர்மாணிக்கப்படவில்லை யென்றால், உலகத்தின்பால் காணப்படும் ஏனைய மார்க்கங்களும் சமயங்களும் இவ்வாறுதான் காணப்படுகின்றன. எனவே, இதர மதங்களின்மீது நாம் ஏனோ வீணான மனஸ்தாபங்கள் கொள்ளுதல் வேண்டும்? என்பதே. இது சரிதான். ஆனால், நாம் சொல்வ

தென்னவெனின், இஸ்லாம் சொல்லிக்கொண்டிருக்கின்ற விஷயங்க ளனைத்தும் அறிவுக்கும் ஞானத்துக்கும் ஒரு சிறிதேனும் மாற்றமாயில்லை. ஆனால், இஸ்லாமல்லாத வேறு இதர மார்க்கங்களில் சொல்லப்பட்டிருக்கும் அனேக விஷயங்கள்தாம் அறிவினுக்குப் பொருத்த மற்றனவாய்க் காணப்படுகின்றன. ஆகையால், அந்த இதர மார்க்கங்களி லுண்டான விஷயங்கள் உண்மைதானா வென்று பார்க்க வேண்டுமாயின், அதுசமயமே தக்க அறிவைக்கொண்டு ஆராய்ச்சி செய்து தீர்மானம் பண்ணவேண்டும். இன்னமும் நமது தாத்பரியத்தை நன்கு விளங்கிக் கொள்வீர்களாக: குர்ஆனும் உண்மையான நாயக வாக்கியங்களும், இஸ்லாத்தின் சட்டதிட்ட போதனைகளெல்லாம் 'நம்முடைய அறிவுக்கு ஒத்தனவாய்த் தாம் அமைந்து கிடக்கின்றன' வென்று கூறிக்கொண்டிருக்கின்றன. அவற்றின்மீது நீங்கள் மனோ உறுதி கொள்ளல் வேண்டும். எதைக் குர்ஆனும் ஹதீதும் விளக்கிக் காட்டவில்லையோ, அதை ஒரு சிறிதேனும் கூட்டியோ குறைத்தோ விரித்தோ சுருக்கியோ நம்மிஷ்டப்படி சொல்வது தகாது. அஃதாவது, மார்க்கமென்னும் இப்பாதையில் நாம் நமது மனோ இச்சையின்படி நடந்து செல்லாது பரம்பொருளான ஆண்டவனால் அளிக்கப்பட்ட பிரகாசத்தைப் பின்பற்றியே நடந்து செல்லல் வேண்டும் என்றும் மிகத் துலக்கமாய் ஓதிக்கொண்டிருக்கின்றன.

(4) இறுதியாக இன்னமுமொரு ஐயத்தை நீங்கள் அகற்றிக்கொள்ளுதல் வேண்டும். அஃதாவது: நான் இதுகாறும் சொல்லிக்கொண்டு வந்ததிலிருந்து,



'நான் அறிவை ஒன்றுக்கு முதவாத ஒரு பொருளாய்க் கொண்டிருக்கின்றேன்' என்றெண்ணி விடாதீர்கள். நான் சொல்வதெல்லாம், புத்தியின் பயனைக் குறிப்பிட்ட ஓர் எல்லைக்குள் ளிருக்கின்ற விஷயங்களைத் தாம் உணர்ந்து கொள்ளுதல் கூடும் என்பதே. பஞ்சேந்திரியங்களுக்கும், ஐம்புலன்களுக்கும் அப்பால் சென்று கிடக்கும் விஷயங்களை யெல்லாம் நமது அறிவினாலேயே நன்கு தெரிந்துகொண்டு விடலாமென்றெண்ணுவது ஒரு முடியாத காரியமாகவே யிருந்துகொண்டிருக்கின்றது. இதனால் அறிவென்பது ஓர் உபயோகமற்ற பொருள் என்று எண்ணிவிடாதீர்கள். ஏனெனின், ஆண்டவன் ஒவ்வொரு சிருஷ்டிப் பொருளுக்கும் சகல விஷயங்களிலும் மட்டுத் திட்டத்தை ஏற்படுத்தி யிருப்பதேபோல் இந்த அறிவுக்கும் ஒரு வித எல்லையை ஏற்படுத்தி யிருக்கின்றான். உதாரணமாக, பார்வை ஓர் எல்லைவரை நோக்குகின்றது; அதற்கப்பால் பிரயோஜனப்படுவ தில்லை. செவிமடுத்தலும் இங்ஙனமே ஒரு குறிப்பிட்ட வட்டத்தைத் தேடி நிற்கின்றது. குறிப்பிட்ட எல்லைக்கப்பால் அதுவும் பிரயோஜன மற்றதாகவேதான் போய் முடிகின்றது. இவ்வாறே மனித அறிவும் ஓர் எல்லையை வேண்டி நிற்கின்றது; அதற்கப்பால் ஒன்றுக்கும் பிரயோஜனப்படுவதில்லை. மேலும், ஐயறிவுக ளெல்லாம் தமக்கு ஏற்படுத்தப்பட்ட எல்லைக்குள் மட்டும் தமது காரியங்களைச் செய்துகொண் டிருப்பதேபோல், மனிதனுக்குள் ளமைக்கப்பட்ட அறிவென்னும் ஞானமும் ஒரு குறிப்பிட்ட மட்டுக்குள்ளேயே தன்னுடைய காரியங்களைச் செய்துகொண் டிருக்கும். எனவே, ஒரு

மனிதன், நாம் பஞ்சபூதங்களினு லமைக்கப்பட்ட ஒரு தேகத்தைப் பெற்றிருக்கிறோ மாயினும், நமது அறிவால் பஞ்சேந்திரியங்கள் சம்பந்தமற்ற பரலோக சமாசாரங்களை யெல்லாம் ஏனோ சரியாய்த் தெரிந்து கொள்ள முடியாம லிருக்கின்றது? என்று வீண் புகார் செய்வானாயின், அவன் முதன் முதலாக, 'நான் லக்ஷ்மணபுரியில் உட்கார்ந்துகொண் டிருக்கின் றேன். என்றாலும், இங்கிருந்து எனக்கு நேரே ஏனோ லண்டனி லிருக்கும் சகல கட்டடங்களும் புலப்படுவதில்லை?'' என்று முறையிட்டுக் கொள்ளு தல் வேண்டும். இவ்வாறே பிரான்ஸ் தேச யுத்த மைதானத்தில் நடந்து கொண்டிருக்கும் பீரங்கி வெடிகளின் சப்தம் ஏனோ இந்தியாவில் நமக்குக் கேட்காம லிருக்கின்றது? என்று மனவருத்த முற்றுக் கஷ்டப்படல் வேண்டும். [எனவே, சில அறியாத மாக்கள் சர்வ வல்லமையும் பொருந்திய சாக்ஷாத் பரம் பொருள் என்பவனை அறிந்துகொள்வான் வேண்டி, இல்லை, தத்ரூபமாய் இவ்வூனக் கண்களால் கண்டு கொள்ளலா மென்று தூரதிருஷ்டி (டெலஸ்கோப்) கண்ணாடியை மாட்டிக்கொண்டு கண்டகண்ட விடங் களி லெல்லாம் பார்த்துவிட்டு, ஆண்டவனே யில்லை யென்று கூறிக்கொண் டிருப்பவர்களும் இப்படிப் பட்ட அறியாத்தனத் துள்ளேயே சிக்குண்டுழல்கின்ற னர். இன்னார் உணவை உட்கொள்ளும்போது வாயி னால் ஏன் உதரத்தை நிரப்ப வேண்டும்? மூக்கினாலும் மற்றும் வேறு வழியாகவும் உணவை உட் செல்லும் படி செய்யலாமே! ஏன் செய்வதில்லை? இம்முறைக ளால் வயிறும் நிறையாது; இரைப் பையினால் ஏற்படும்



பிரயோஜனமு முண்டாகாது என்று சொல்லப்படு மாயின், ஒரு காரியத்துக்காக, அதுவும் குறிப்பாய், ஓர் எல்லைக்குட்பட்டுக் கிடக்கக்கூடிய வஸ்துக்கள் சர்வ காரியங்களையும் பிரயோஜனங்களையும் ஏன் தருவதில்லை யென்று வீண் வார்த்தை பேசுவதால் யாது பிரயோ ஜன முண்டாகப் போகின்றது? ஹாபிஸ் பாகவீ]

فطرة الله التى فطر الناس عليها لا تبديل لخلق الله ذالك
الدين القيم ولكن اكثر الناس لا يعلمون

(இஃது) அல்லா(ஹ்)வின் இயற்கையா(னமார்க் கமா)யிருக்கிறது; அதன்மீதே மானிடர்களை அவன் சிருஷ்டித்தான். அல்லா(ஹ்)வின் சிருஷ்டியுள் (எவ் வித) மாற்றமும் உண்டாவதில்லை. அதுவே உண்மை யானதும் நேர்மையானதுமான மார்க்கமா யிருக் கிறது. ஆனால், அனேக மனிதர்கள் (இதை) அறிந்து கொள்ளுபவர்களா யில்லை. (30 : 30)

اللهم ارنا الحق حقا وارنا الباطل باطلا فاهدنا صراطا مستقيما



The Guardian Press, Ltd., 158-B Broadway, Madras.—1932.

டெக்குத் தீக்கவாறு விலையை மிகக் குறைவாக வைத்திருக்கிறோம். வாங்கிப் பார்த்தால் உண்மை தெரியும். சாதாரணமாய் 2400பக்கங்களில் அடங்கக்கூடிய விஷயம் இந்த 480 பக்கங்களில் மிகத் தெளிவாகவும், முழுமையாகவும் நுழைக்கப்பட் டிருக்கிறது. தமிழில் இதைவிடச் சிறந்த த'ப்ஸீரைக் காணவே முடியாது. உயர்ந்த அச்சு; திக் காகிதம். நேர்த்தியான காலிகோ பைண்டு கட்டியது. விலை ரூபா 4—8—0.

## :குர்ஆன் ஷரீ'பின் 30-ம் பாகம் அ'ம்மயத் (அல் 'ஹம்து' ஜு'ஜு) (இரண்டாம் பதிப்பு)

அல்'ஹம்து' ஜு'ஜுவென்று சாதாரணமாய்ச் சொல்லப் படும் அ'ம்மயத் ஜு'ஜு' 10 அங்குல நீளமும் $6\frac{1}{2}$ அங்குல அகலமுமுள்ள ராயல் 8 பக்க ஸைஸில் 201 பக்கங்கள் கொண்டதாய் அழகிய செந்தமிழ் மொழிபெயர்ப்புடனும், இன்தமிழ் வியாக்யானத்துடனும் கண்ணைக்கவரும் பான்மையாய் இப்பொழுது வெளிவந்துள்ளது. அழகான பெரிய எழுத்தில் அரபு ஆயாத்துக்களும், ஒவ்வோர் ஆயத்தின்கீழ்க் கொட்டை எழுத்தில் தர்ஜுமாக்களும், அதனதன்கீழ் விரிவான அழகிய இனிய நெடுவுரைகளும் அமைக்கப்பட் டிருக்கின்றன. நேர்த்தியான பளபளப்புள்ள வெள்ளைத்தாளில் அதிக அழகாக அச்சிடப்பட் டிருக்கிறது. பைண்டும் அதிகத் திக் பைண்டாகவும் நல்ல அட்டைகளுடனும் மிக்க வசீகரமாக அமைக்கப்பட் டிருக்கிறது. திக் காகிதம், உயர்ந்த அச்சு. காலிகோ பைண்டு. விலை ரூபா 2.

## :குர்ஆன்ஷரீபின் 30-ம் பாகம் அ'ம்மயத் ஜு'ஜு அல்லது அல்'ஹம்து' ஜு'ஜு

இப்பெயருடன் ஷை $10 \times 6\frac{1}{2}$ ஸைஸிலேயே அரபியிலேயே ஆயாத்துக்களைத்தலைப்பில்போட்டு, அவற்றின்கீழ்ப்பெரியஎழுத்தில் அவற்றின் அர்த்தம்மட்டும் எழுதி மிக அழகான திக் பேப்பரில் அச்சிட் டிருக்கிறோம். இதில் வியாக்யானம் கிடையா தாகையினால் இதை மத்ரஸாவில் ஓதும் பிள்ளைகளும், பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணவர்களும், அர்த்தம் மட்டும் தெரிந்துகொள்ள விரும்பும் இதரர்களும் வாங்கிப் படிப்பது மிகவும் பிரயோஜனமா யிருக்கும். நமது மத்ரஸாக்களில் ஓதும் பிள்ளைகள் கிளிப்பிள்ளையைப்போல் அரபியை மட்டும் ஓதக் கற்றுக்கொடுக்கப்பட்டு வரு



கிறார்கள். அவர்களுக்கு அதனுடைய அர்த்தத்தையும் சிறகச் சிறுக இளமையிலேயே புகட்டி வருவோமாயின், அஃது அவர்கள் மனத்தில் பசுமரத் தாணியேபோல் பதிந்து நல்ல பிரயோஜனத்தைக் கொடுக்கும். இதை ஒவ்வொரு மத்ரஸா உஸ்தாதுகளும் பள்ளிக்கூட உபாத்தியாயர்களும் பெற்றோர்களும் கவனித்து, தம் மக்களை இந்நூலை அவசியம் படிக்க ஏற்பாடு செய்வார்களாக.

விலை அணு 12 தான்.

## நபிகள் நாயக மான்மியம் (முதல் வால்யூம்)

மகா நேர்த்தியான அச்சு! மிகப் பூர்த்தியான பைண்டு!!

3 கலர் ஆப்டோன் படங்கள் நிறைந்தது.

"புஸ்தகம் ஹஸ்தபூஷணம்" என்பது இதற்கே தகும்!

மூன்று ஆண்டுகட்கு மேலாக எழுதப்பட்டு, ஓராண்டுக்கு மேலாக அச்சிலிருந்து வந்த இந்த முதல் வால்யூம் காணக் கண்ணையும் :கல்பையும் கவரத்தக்க மாதிரியில் மிக அழுத்தமான கிளேஸ் காகிதத்தில் ஏராளமான செலவிலே 450 பக்கங்கள் வரையுள்ள ராயல் 8 பக்க ஸைஸில் பற்பல விதமான பல வர்ணச் சித்திரப் படங்களுடனே கில்ட் பைண்டில் வெளியா யிருக்கின்றது. இது பத்ரு யுத்தம் வரை 20 அதிகாரங்களில் அழகிய மெய்யான சரித்திர பூர்வமான அரிய விஷயங்களைச் செறியப் பெற்றுள்ளது. இதனைக் கையிலெடுத்த பிறகே இதன் விலை இம் மாபெருங் கிரந்தத்திற்கு மிகமிகக் குறைவென்பதை அறியப் போகின்றீர்கள்.

நபிகள் நாயகத்தின் மெய்யான சரித்திரத்தை இற்றை நாளிலே எல்லா மதத்தினரும் வாசித்துணருதல் அத்தியாவசியமாகும். இதனால் முஹம்மத் நபி[ஸல்] யாரென்பதும், அவரது உண்மையான உயிர் வாழ்க்கை எப்படிப்பட்ட தென்பதும், அதிலிருந்து மானிடர்கள் அடையக்கூடிய படிப்பினை எத்தகைய தென்பதும் செவ்வனே விளங்கக் கிடக்கும். எனவே, ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்கும் பெருத்த நன்மை விளையும். ஆதலின், எல்லா முஸ்லிம்களும் தலைக்கொரு பிரதி வாங்குவதுடன், தம் அயல் மதச் சகோதரர்களையும் வாங்குமாறு தூண்டியோ அல்லது அன்னவர்கட்குத் தாங்களே வாங்கிக்கொடுத்தோ நல்லுதவி புரிவார்களாக. விலை ரூபாய் 4 தான்.

## நாயக வாக்கியம் 451, நாயக சரித்திரச் சுருக்கத் துடன் (3-ம் பதிப்பு)

இதில் நபிகள் நாயகமவர்களுடைய ஜீவித சரித்திரம் சுருக்கமாக விளக்கி எழுதப்பட் டிருப்பதோடு, அவர்கள் மனித கோடிகளின் நன்மையைக் கோரித் திருவாய் மலர்ந்தருளிய 451 திருவாக்கியங்களும் ('ஹதீது' ஷரீ'புகளும்) அச்சிடப்பட் டிருக்கின்றன. இதர மதஸ்தர்களும் நாயகமவர்களுடைய சரித்திரத்தையும் மகிமையையும் அவரது போதனைகளேயும் அறிந்துகொள்ளல் வேண்டும். ஆதலின், இஃது எல்லோருக்குமே இன்றியமையாத புத்தகமாகும். இப்புத்தகம் சட்டைப் பைக்குள் அடங்கும் விதமாக ஒரு சிறிய ஸைஸில் உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டுக் காலிகோவினுல் அழகிய கில்ட் பைண்டும் செய்யப்பட் டிருப்பதால் எப்பொழுதும் கூடவே வைத்திருந்து எந்த நேரத்திலும் அசட்டையின்றி அச்சட்டையினின் றெடுத்துப் பார்த்துக்கொள்ள உபயோகமானதா யிருக்கும். இதன் இறுதியில் சேர்த்திருக்கும் "விஷய சூசிகை"யால் வேண்டிய வாக்கியங்களேக் கஷ்டமின்றி எடுத்துப் பார்க்கலாம். இதன் 3-ம் பதிப்பில் 14 பக்கங்கொண்ட முன்னுரை யொன்று ஹதீதுகளேப் பற்றிய வெள்ளேயான விருத்தாந்தத்துடன் புதிதாய்ச் சேர்க்கப்பட் டிருக்கிறது. விலே அணு 14 தான். மேற்கண்ட ஹதீது ஷரீபுகள் தமிழறியாத முஸ்லிம் பெண்களுக்கென்று அரபுத் தமிழிலும் அச்சிடப்பட் டுள்ளன.

விலே ரூபா 1-0-0.

## இஸ்லாம் (சித்திரப் படங்களுடன்) (4-ம் பதிப்பு)

இது முஸ்லிம்க ளெல்லோருக்கும் அவசியமான ஒரு மகா சிறந்த தமிழ் நூலாகும். இதில் இஸ்லாத்தின் ஐந்து பரல்களும் (கடமைகளும்) மிகத் தெளிவாகவும் விளக்கமாகவும் புத்திக்கும் யுக்திக்கும் மிகப் பொருத்தமாகவும் விவரிக்கப்பட் டிருக்கின்றன. ஒவ்வொரு கடமையின் சார்பான தத்துவமெல்லாம் விஸ்தரிக்கப்பட் டிருப்பதுடன் (மஸ்அலாக்கள்) அனுஷ்டானத்திற்கு வேண்டிய விவரங்களனைத்தும் சாகோபசாகையாகக் கூறப்பட்டிருக்கின்றன. இஸ்லாத்தின் கடமைகள் சார்பான எந்த விஷயத்தையும் இதில் அதி சுலபமாக எடுத்துத் தெரிந்து கொள்ளலாம். அவசியமான இடங்களில் அரபு வாக்கியங்களும் அவற்றின் தமிழ் மொழிபெயர்ப்புக்களும் நிரம்பக் கொடுக்கப்பட் டிருக்கின்றன. இதிலுள்ள மஸ்அலாக்களெல்லாம் சரியான மூலக்கிரந்தங்களி லிருந்து தழுவிப் படிப்போருக்கு மிக எளிதில் விளங்குமாறு அதிகவிளக்கமாகப் புதிய முறையில் செந்தமிழ் நடையில் எழுதப் பட்டிருக்கின்றன.



இதில் தொழுகைக்கு வேண்டிய 10 நிலேகளும் இதுவரையில் பார்த்திராத அதிக விசித்திரமான சித்திரப்படங்களால் ஆங்காங்கே விளக்கப்பட் டிருக்கின்றன. இதனுல் ஒவ்வொருவரும் பிறர் உதவியின்றித் தாமே தொழுகையைக் கற்றுக்கொள்ளலாம்.

இதன் அனுபந்தத்தில் குர்ஆனின் அல்ஹம்து ஸூராவும் இறுதிப் பதினறு ஸூராக்களும் எல்லோரும் படிக்கும்படியான விதத்தில் மகா அழகான அரபு எழுத்துக்களால் தமிழில் அர்த்தத்துடனும் ஓதும் விதத்துடனும் எழுதப்பட்டிருக்கின்றன. இப்படிப்பட்ட ஸூராக்களேயும் அர்த்தங்களேயும் இம்மாதிரி இதுவரை ஒருபோதும் ஓரிடத்திலும் கண்டிருக்கவே மாட்டீர்கள் என்பது திண்ணம். இத் தமிழ் நாட்டில் இப்படிப்பட்ட நூல் வெளியானது இதுதான் முதல் முறையாகும். விலே ரூ 1-0-0 தான்.

## ஈமான் (இஸ்லாத்தின் மூலக் கொள்கை)

இவ்வழகிய நூல் இஸ்லா மார்க்கத்தின் ஈமான் சம்பந்தமான மூலக்கொள்கையாகிய ஏழு அம்சங்களேப்பற்றி விரிவாகவும் விளக்கமாகவும் புத்திக்கும் யுக்திக்கும் பொருந்தும் வண்ணம் இனிய தமிழில் எழுதப்பட்டுள்ளது. "ஈமான்முஜ்மல்" (விவரிக்கப்படாத ஈமான்) "ஈமான் முபஸ்ஸல்" (விவரிக்கப்பட்ட ஈமான்) ஆகிய இவற்றின் விவரமும் காணப்படுவதுடன் இஸ்லாத்தில் ஈமான் கொள்ளவேண்டிய விஷய விளக்கமும், அதன் துஆவும் உடன் காணப்படும். சிறுவர்களும் உணர்ந்து கொள்ளத்தக்க விதமான வரையப்பட் டிருக்கிறது. அவசியமான அரபு வாக்கியங்களும் சேர்க்கப்பட் டிருக்கின்றன. இஃது ஒவ்வொருவருக்கும் அவசியமான நூல். அதிகம் தடிப்பான காகிதத்தில் அச்சிட்டு மிக நேர்த்தியாக பைண்டு செய்யப்பட்டது. விலே அணு 6 தான். வேண்டுவோர் 7 அணு ஸ்டாம்பு அனுப்பவேண்டும். இதுதான் தா. இ. ன் முதற் பிரசுரம்.

## இஸ்லாம் எப்படிச் சிறந்தது ?

### (சித்திரப்படங்களுடன் 2-ம் பதிப்பு)

டாக்கா சர்வ கலாசாலே அறிஞர் (நவ்முஸ்லிம்) ஸிராஜுல் இஸ்லாம் (முன்பெயர் தாஸ் குப்தா) என்பவரால் எழுதப்பட்ட

விஷயங்களும் இதர அரிய விஷயங்களும் மூன்று பாகங்களாக அமையப்பெற்ற நூல். கிறிஸ்து மதம், ஹிந்து மதம், பௌத்தம், ஜைனம் முதலியவற்றுடன் இஸ்லாம் ஒப்பிட்டுக் காட்டப்பட்டிருக்கிறது. இப்புத்தகத்தில் கல்கத்தா காளி, பூரி ஜகந்நாதின் விக்கிரஹம் ஆகியவற்றின் படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. படிப்போருக்கு இதனால், அளவற்ற பயனுண்டாகுமென்றே நாம் அதிக தைரியமாகக் கூறுவோம். இம்மதத்தின் அருமையும் பெருமையும் இதைக் கையில் வாங்கிய பின்னரே நன்கு தெரிய வரும். விலை 10 அணாதான்.

## முஸ்லிம்களின் முன்னேற்றம்

இஃது ஓர் அழகிய சிறந்த நூல். இதில் நம்முடைய முன்னேற்றத்துக்குரிய உணர்ச்சியானது முஸ்லிம் உலகத்தில் எவ்வாறு தழைத்தோங்கி வருகிற தென்னும் விஷயம் விளக்கி எழுதப்பட்டிருக்கிறது. ஆபிரிக்காவின் உட்பிரதேசத்தில் உலகத்துக்குத் தெரியாமல் ஸென்னூஸிக ளென்னும் ஒருவகை இரகசியக் கூட்டத்தார்கள் எவ்வாறு இஸ்லாத்துக்கு வேண்டிய காரியங்களை அந்தரங்கமாய்ச் செய்துவருகிறார்க ளென்னும் நுண்ணிய விஷயமும் இதில் காணப்படும். விலை அணா 6 தான். வேண்டுவோர் 7 அணா ஸ்டாம்பு அனுப்பலாம்.

## ஆரியருக்கொரு வெடிகுண்டு (2-ம் பதிப்பு)

இஃது எல்லோருக்கும் இனாம் கொடுக்கப்பட வேண்டிய நூலே யாயினும், பெரும்பாலும் ஹிந்துக்களுக்கும் இனாம் கொடுக்கப்பட வேண்டியிருப்பதால் நம் முஸ்லிம் நண்பர்களுக்கு இதன் கொள்முதல் கிரயத்தை மட்டும் அதிச் சொல்பமாக வைத்திருக்கிறோம். பதினாயிரக் கணக்கான பிரதிகள் தமிழ்நாடுமுழுதும் ஹிந்துக்களுக்குள்ளும் முஸ்லிம்களுக்குள்ளும் அளவில்லாமல் பரத்தப்படல் வேண்டும். நம் முஸ்லிம் நண்பர்கள் ஏராளமாக இதை வாங்கித் தம் ஹிந்து நண்பர்களுக்கு இனாமாக விநியோகிக்க வேண்டும். ஆரியருக்கும் அன்னவரின் வேதங்களுக்கும் இதுதான் சரியான கடாதவுலாகும். இவ்வரிய பெரிய 236 பக்கங்கள் கொண்ட உயரிய மறுப்பு நூலின் விலை அணா 12 தான்.

## மறுகமலம் (12 வியாசங்களுள்ளது)

1920-ல் எம்மால் பிரசுரிக்கப்பட்ட 12 இதழ்களும் இப்புத்தகத்தில் ஒருங்கே அச்சிடப்பட்டிருக்கின்றன. (1) இஸ்லாத்தின் இணையில்லா அற்புதம், (2) இஸ்லாத்தின் இனி வரும் உன்னதம், (3) இஷா அத்தெ இஸ்லாம், (4) எமது கொள்கை, (5) நிரந்தரமான அற்புதம் (6) விசித்திர வினாக்கள், (7) ஆத்மாவின் மூவகை நிலை, (8) வீண் செலவு, (9) மனிதருக்கேற்ற மாதிரி, (10) இஸ்லாமும் இதர மதங்களும் என்னும் அருமையான அழகிய 10 விஷயங்க ளடங்கிய 206 பக்கங்கொண்ட இவ்வரிய புத்தகத்தின் விலை அணா 8 என்று குறைக்கப்பட்டிருக்கிறது. தா. இ. சந்தாதாரர் கட்டு விலை அணா 6. வேண்டுவோர் தபால் செலவும் சேர்த்து 8 அணா ஸ்டாம்பு அனுப்ப வேண்டும்.



## இயேசுவின் இரகசியம்

இஸ்லாத்தைத் தாக்கி எழுதிய கிறிஸ்துவப் பாதிரிமார்களின் 14 வினாக்களுக்குத் தக்கவிடை இதில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. குர்ஆனிலிருந்தும் பைபிளிலிருந்தும் போதுமான ஆதார ஆதேயங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. கிறிஸ்துவர்களின் வாய் அடங்கும்படியான சரியான கடாவுதல் இதில் கூறப்பட்டிருக்கிறது. கிறிஸ்துவருடன் மல்லாடும் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் ஏனையோருக்கும் இஃது அத்தியாவசியமானது. கிறிஸ்துவர்களின் கேள்விகளுக்குப் பதில் கூறத் தெரிந்துகொள்வதுடன் முஸ்லிம்கள் அறிந்துகொள்ள வேண்டிய பல நுண்ணிய விஷயங்களும் இதில் பொதிந்து கிடக்கின்றன. திருக் குர்ஆன் ஆயாத்துக்களை அரபியிலேயே எழுதி அவற்றிற்கு அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலின் இஃது எல்லா முஸ்லிம்களுக்கும் அத்தியாவசியமான தென்றே உறுதியாய்க் கூறுவோம். விலை ரூபா 1-0-0. 2-ம் பதிப்பு அச்சாய் வருகிறது.

## ஆரிய சமாஜிக் கர்ப்பணம் (2-ம் பதிப்பு)

"ஆரியருக்குகொரு வெடிகுண்டு" என்னும் பாம் புஸ்தகத்தைப் போல் இதுவும் ஆரிய சமாஜிகளின் வாயை அடக்குவதற்குப் போதிய நூலாகவே அமைந்திருக்கிறது. இஸ்லாத்தில் பிறந்து, பீ. ஏ. பட்டம் பெற்றுப் பிறகு சிரத்தானந்த சூழ்ச்சியால் ஆரிய சமாஜத்தைத் தழுவி, அதிலும் பெரியதோர் தலைவராய் விளங்கி அம்மார்க்கத்தின் அந்தரங்க ஊழல்களை யெல்லாம் அதிகமாகத் தெரிந்துகொண்ட பிறகு தீனுல் இஸ்லாத்தைத் தழுவியிருக்கும் காஜீ மஹ்மூத் தரம்பால் என்பவரால் உர்து பாஷையில் எழுதப்

பட்டிருக்கும் குப்ருதோடென்னும் அழகிய நூலின் தமிழ்மொழி பெயர்ப்பாகும் இது. இதன் முன் ஆரியசமாஜிக ளெல்லாம் இடியோசை கேட்ட சர்ப்பமே போல் அடங்கி ஒடுங்கி விடுவார்களென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. இதைக் கையிலெடுத்த பிறகே இதன் அருமையையும் பெருமையையும் அறிந்துகொள்ளப் போகிறீர்கள். எல்லோருக்கும் இந்நூல் எட்டவேண்டுமென்ற நல்லெண்ணங்கொண்டு இதன் விலையையும் ரூபா 1-லிருந்து அணா 12 ஆகக் குறைத்திருக்கிறோம்.

## குத்பாப் பிரசங்கம்

(ஜும்ஆ'வில் ஓதக்கூடியது)

குத்பாவில் எங்கெங் கெல்லாம் அரபு இருக்க வேண்டுமோ, அங்கங் கெல்லாம் அரபு மேற்கோள்களுடன் மௌலவீ பாவில் ஹாபிஸ் சாஹிபவர்களால் எழுதப்பட்டு, தா. இ. ஆசிரியர் பா. தா. அவர்களால் செந்தமிழில் மேற்பார்வை யிடப்பட்டு, மிக்க நல்ல மாதிரியாய்த் தையார் செய்யப்பட்டிருக்கிறது. ஆறுமாதப் பிரயாசைக்குப்பின் 54 குத்பாக்களுடன் 368 பக்கங்கொண்டதாய் அழகிய பைண்டுடன் இனிய தெளிவான தமிழில் வெளியாயுள்ளது.

இதில் வருஷ முழுமைக்கு முள்ள 52 ஜும்ஆ குத்பாக்களும், இரண்டு பெருநாளுக்கு முள்ள 2 ஈது குத்பாக்களும் சேர்த்து, மொத்தம் 54 குத்பாக்கள் இதில் வெளியாயுள்ளன. ஒவ்வொரு குத்பாவுக்கும் முகவுரையும் முடிவுரையும் (ஹம்தும் ஸலவாத்தும்) அரபே; ஜும்ஆ ஈதின் இரண்டாவது குத்பா முழுதும் அரபே.

இந்தக் கி(த்)தாபானது ஜும்ஆவிலும் ஈதிலும் ஓதுவதற்கு மட்டுமேதான் பயன்படுமென் றெண்ணிவிட வேண்டாம். இப்பெரிய கிரந்தத்தில் மகா அரிய பெரிய விஷயங்களெல்லாம் சேர்க்கப்பட்டிருப்பதால், இது நம் முஸ்லிம் ஆண்பெண் அனைவர்க்குமே சதா உபயோகப்படுமென்பது எமது அபிப்பிராயமாகும். இஃது இதற்கு முன்னுள்ள வேறெந்த குத்பாக் கி(த்)தாபுகளையும் போலல்லாது மிக்க நல்ல முறையில் எழுதப்பட் டிருப்பதால், இதைக் கொண்டு நம் சோதர சோதரிகள் தமது லௌகித வைதிக வாழ்க்கையில் பெரும் பயனும் புத்துணர்ச்சியும் பகுத்தறிவும் பெறுவ



ரென்பது திண்ணம். இதில் குத்பா தாய்மொழியில் ஓதலாமென்பதற்கு வேண்டிய ஆதாரங்களும் காட்டப்பட்டுள்ளன.

விலை ரூ. 1-8-0.

## ஜியாரத்துல் குபூர்

(144 ஆகாத கருமங்களுடன்)

இம் மேலான நூலில் உள்ள விஷயங்களாவன: ஆண்டவனுக்கு இணைவைத்தலான வகையையும், அவைகளுக்கு வேண்டிய மறுப்புக்களையும், அல்லா(ஹ்) அல்லாதவரிடம் வேண்டுதல்செய்யும் விஷயங்களையும், நமது இஸ்லாத்தில் எவ்வாறு ஜியாரத் செய்ய வேண்டுமென்னும் விதத்தையும் நீங்கள் நன்குணர்ந்து கொள்ள வேண்டமா? சமாதியினருகே சென்று எவ்வாறு வேண்டுதல் செய்யவேண்டு மென்பதையும், எதெதைக் கப்ரினருகே சென்று கேட்கலா மென்பதையும், நேர்ச்சை செய்துகொள்ளும் விதங்களையும், மரண மடைந்தவர்களை வஸீலாவாய்க் கொள்ளும் விஷயங்களையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டமா? கிராமத்துண்டாவதன் வியவகாரங்களையும், குத்பு, கௌது, ஜாமிஃபர்த் என்பவர்களின் விஷயங்களையும், கிஸ்ர்அலை அவர்கள் சம்பந்தமான எல்லாக் கருமங்களையும், இவை போன்ற ஷிர்க் பித்அத்துகளான இதர ஆகாத கருமங்களை யெல்லாம் உணர்ந்துகொள்ள வேண்டமா? அப்படியானால் உடனே இந்த ஜியாரத்துல் குபூர் என்னும் நூலை வாங்கிப்பாருங்கள். ஷிர்க் பித்அத்துகளான அனாசார கிரியைகளை யெல்லாம் ஒழிக்க எண்ணும் ஒவ்வொரு புண்ணியவான் கையிலும் இஃது அத்தியாவசியா யிருக்கவேண்டும். உடனே எழுதுங்கள். அரை மாதத்தில் இதில் 600 காபிகள் செலவாய் விட்டன.

விலை அணா 12 தான்.

## ஹாத்திம் தாயீ (பல விசித்திரப் படங்களுடன்)

இணையில்லா அற்புத தீர விரச் செயல்களடங்கிய நூல்.
கையிலெடுத்தவர் முடியும்வரை கீழேவைக்கப் பிரியப்படார்.

பாரஸீக பாஷையில் ஆக்கப்பட்ட இந்நூல் பற்பல பிற பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டும், சினிமாக்களில் படக் காட்சிகள் காண்பிக்கப்பட்டும் வருவதை யாவரும் அறிவீர்கள்.

610 பக்கங்கள் கொண்ட இந்நூலில் காணப்படும் அரிய தீரவீரச் செய்கைகள் படிப்போர் மனத்தைப் பரவசமுறச் செய்யும். காதற் கதைகள் தேகத்தைப் புளகமுறவும் செய்யுமென்பதில் ஐயமில்லை. ஒப்பற்ற கருணையங்கடலாகிய ஹாத்திம் தந்நலம்பேணுது தம்முயிரையும் பிறர் சேவையில் ஈடுபடுத்தி இன்னல்களிடையே செல்வது மிகவும் போற்றிப் புகழத்தக்கதா யமைந்திருப்பதுடன், படிப்பவருக்கு அரிய படிப்பினையையும் நீதிச்சான்றுகளையும் அளித்து நிற்கின்றது. மிகுந்த கற்பனுசக்தியால் ஆக்கப்பட்டிருக்கும் இந்நூற்குத் தக்க முறையில் தழுவி இயற்றப்பட்ட தமிழ்மொழி பெயர்ப் பின்மை கண்டு எமதாபீஸில் முதனூலுக்கொப்பவே மிகவும் நேர்த்தியான முறையில் செய்து முடித்துள்ளோம். தமது அரிய நண்பரான முனீர் (ஷாம் தேச அரசகுமரன்) என்பவருக்காக ஹாத்திம் செய்த தியாகமும், எடுத்துக்கொண்ட சிரமமும் அளவிட வொண்ணு. முனீர் என்ற அரசகுமரர் பர்ஜக் என்ற வியாபாரியின் மகளாகிய ஹுஸ்ன்பானுவென்ற கட்டழகியின்மீது அதிமோகங் கொண்டு தங்கருத்தை வெளியிட, அதற்கு அப்பெண்மணி இணங்காது, தான் விடுக்கும் ஏழுவினுக்களுக்கும் தக்கவிடை யிறுத்தாலன்றி மணம் சாத்தியமில்லை யென்று கூறிவிட்டாள். ஏழு வினுக்களுக்கும் ஏழு முறை பிரயாணப்பட்டு ஹாத்திம் எல்லையற்ற இன்னல்களை யெல்லாம் கடந்தும், தீரச் செயல்கள் பலபுரிந்தும் வெற்றியுடன் திரும்பி இறுதியில் ஹுஸ்ன்பானுவை முனீருக்கு மணமுடித்து வைக்கும் வரலாறுகளைப் படித்துணர்ந்து ஆனந்திக்க வேண்டுமேயன்றி, எடுத்துக் கூறுவது சற்றும் பொருந்தாது. ஹாத்திமின் தாராளப் பரோபகார சிந்தையும், தைரியமும், கூரிய புத்தியும், ஆபத்துவேளைகளில் கலங்கா நெஞ்சமும் படிப்பவர் மனத்தை மிகவும் கவரும். மற்றும் இந்நூலில் பரிகள், தேவுகள் இவைகளின் நடை உடைபாவனைகளும், மற்ற வரலாறுகளும், அற்புத சக்திகளும் படிப்போர் வியப்புறும் வகையில் அமைக்கப் பட்டிருக்கின்றன. நிகரற்ற கற்பனைகளாயினும் படிப்பவர் மேன்மேலும் உத்ஸாகத்துடனேயே பக்கங்களைப் புரட்டிச் செல்லுவர். சர்வ வல்லமையுள்ள ஆண்டவன்மீது நம்பிக்கைவைத்து நேர்மையான பாதையில் செய்யும் எக்காரியமும் முட்டின்றி முடியும் என்பதற்கு இந்நூலில் மிகுந்த பிரமாணங்கள் காணப்படுகின்றன. பல படங்களுடன் கூடியது. விலை ரூ. 2—12—0.





## தாஜ்மஹால் (படங்களுடன் 2-ம் பதிப்பு)

(துரைத்தனத்தார் அங்கீகாரம் பெற்றது)

இதில் தாஜ்மஹாலின் முழு விவரமும் ஷாஜஹான், மும்தாஜின் சரித்திர விவரமும், உயிர் வாழ்க்கையும் நிரம்பித் ததும்புவதுடன், I ஷாஜஹானின் சரிதை, II தாஜ்மஹாலைக் கட்டியது யார்? III மும்தாஜ்மஹால் என்னும் மூன்று அனுபந்தங்களும் அழகுடன் பொதிந்திருக்கின்றன. இதில் பல ஆதாரமுள்ள நூல்களிலிருந்தே விஷயங்கள் திரட்டப் பட்டிருப்பதால், இந்நூலை ஒருமுறை வாசித்த மாத்திரத்திலேயே தாஜ்மஹாலையும், ஷாஜஹான் மும்தாஜின் சரித்திரத்தையும் அக்கால முகல் ராஜ்யத்தின் நிலைமையையும் பற்றிச் செவ்வனே தெரிந்து கொள்ளலாம். தாஜ்மஹாலைப் பற்றி இத்துணைச் சம்பூரணமாய் வேறெந்த நூலிலிருந்தும் இத்தமிழ் நாட்டில் நீங்கள் தெரிந்துகொள்ளமாட்டீர்கள். இது முதற்பதிப்பைக் காட்டினும் மிக நன்றாகத் திரட்டப் பட்டிருக்கிறது. இப்பொழுது இதில் 74-பக்கங்களுண்டு மும்தாஜை ஷாஜஹான் விவாகம் செய்துகொண்ட வரலாறு, மும்தாஜ் பேகம் மரணமடைந்த வரலாறு முதலிய வெல்லாம் மிக நன்ருகச் சிறுவர்களுக்கும் விளங்குமாறு எழுதப்பட்டிருக்கின்றன. விலை அணு 6.

## நூர்ஜஹான் (படத்துடன்)

(ஜஹாங்கீரையும் அவர் மூலமாய் முகல் தர்பாரையும் அக்காலத்தில் ஆட்டிவைத்த நூர்ஜஹான் சக்ரவர்த்தினியின் உண்மையான சரித்திரம் படத்துடன்)

முகலாய சக்ரவர்த்தினிகளுள் மிகப் பெயர்பெற்று விளங்கிய நூர்ஜஹானின் உண்மையான சரித்திரமொன்றும் இதுகாறும் தமிழில் வெளி வந்ததில்லை; இப்பொழுதுதான் சரியான சரித்திர ஆதாரங்களைக் கொண்டு எம்மால் இந்நூல் முதன் முதலில் வெளியிடப் பட்டிருக்கிறது. நூர்ஜஹானின் குணதோஷங்களைப்பற்றி எழுதி வருங்கால் நாமும் முஸ்லிமென்னும் பட்சபாதத்தினுல் உண்மையான விஷயமொன்றையும் திரித்துக் கூறி விடவில்லை; எல்லாவற்றையும் உள்ளன உள்ளவாறே ஒளியாமல் எடுத்தெழுதி யிருக்கிறோம். இதன் கிரயம் அணு 8 தான்.

## நமது பரதகண்டம் (முதற்பாகம் ஆரியசூரியன்)

திரு. வி. கலியாணசுந்தர முதலியாரின்
முகவுரையுடன் கூடியது

இதில் நமது பரத கண்டம் ஆதியில் எவ்வாறிருந்ததென்றும், பிறகு எவ்வாறு அன்னியரால் அபகரிக்கப்பட்டதென்றும், அதனால் நமக்கேற்பட்டுள்ள நஷ்டம் இன்னதென்றும் வெகு விரிவாக விளக்கி எழுதப்பட்டுள்ளது. இதில் பின்வரும் 8-அத்தியாயங்களும் அனுபந்தமும் காணப்படுகின்றன. இதில் 10 ஆப்டோன், சாதாரணப் படங்களும் காணப்படும். 1. இந்தியா தேசீயப் பெயரன்று 2. பாரதமக்கள் குலப் பாகுபாடு, 3. ஆரியர்கள், 4. ஆரியராஜ சிகாமணிகள், 5. ரஜபுத்திரர்கள், ஷிம்ஹளர். 6. பரத கண்டத்தின் மீது அன்னிய நாட்டார் கண்ணேக்கம், 7. முஸ்லிம்கள். 8. முஸ்லிம் ராஜ பஹதூர்கள். முதலிய பல அருமையும் பெருமையும் வாய்ந்த அத்தியாயங்களின்கீழ் வெகு விரிவாக விஷயங்களை விளக்கிச் சாதாரண படிப்புள்ளோரும் விளங்கிக்கொள்ளும் விதமாக பல சித்திரப் படங்களுடன் அழகாக எழுதப்பட்டு உயர்ந்த திக்பேப்பரில் அச்சிடப்பட்டு உயர்ந்த பைண்டும் செய்யப்பட்டுள்ளது. விலை ரூபா 1—14—0 தான்.

இதன் இரண்டாம் பாகம் (அன்னிய நாட்டுக் கிரகணம்) விலை ரூபா 1—14—0.

## கௌஹர்ஜான் காதல் (அல்லது) கரளபுரி ரஹஸ்யம்

நாவலெல்லாம் நல்லார்சோல் நாவலாமோ? நம்பாலுள்ள நூலெல்லாம் கௌஹர்ஜான் நூலாமோ?

என்னுமாறேபோல் இத்தமிழுலகிலுள்ள நாவல்களனைத்தும் இந்த "கௌஹர்ஜான்" ஒரே பக்கத்துக்கும் ஈடாகுமோ வென்பதை இதைக் கையிலெடுத்தாரே உடனே உணர்ந்து கொள்ளக்கடவர். இதன் முதலேடு முதல் கடையேடுமட்டும் எல்லாம் மர்மம்! எல்லாம் மாயம்!! எல்லாம் சுழல்!!! எல்லாம் பிரேமை!!!! இதனை ஒரு முறை கையிலெடுத்தோர் "முற்றிற்று" வரை ஒரே மூச்சில் படித்து முடிக்காது கீழே வையார்; சாப்பாட்டுக்கும், சயனத்துக்கும் கூடச் செல்லத் துணியார் என்பதற்கு ரூபாய் 10,000 பந்தயம் கட்டலாம். இதன் இரண்டாவது அத்தியாயத்தில் ஆரம்ப



மாகும் மாயர மர்மத்தின் இரகசியத்தை இறுதி அத்தியாயத்தின் இறுதியேடு செல்லுமட்டும் ஒருபோதும் உணர்ந்துகொள்ள மாட்டீர்கள். நீங்கள் இதுகாறும் எத்தனைத் துப்பறியும் நாவல்களைப் படித்திருப்பினும், இந்த "கௌஹர்" நாவலின் இறுதிக்குச் செல்லுமுன் இதன் முடிபு இன்னவாறுதான் போய் முடியுமென்று ஒரு சிறிதும் ஓர்ந்து கொள்ளமாட்டீர்கள். "எடுத்தவர் படித்து முடிக்காது கீழே வைக்க மனந்துணியாத நாவல்" என்று இதனைக் கூறுவது ஒரு சிறிதும் மிகையாகா தென்பதைத் தாங்களே கையிலெடுத்த பின் நேரில் தெரிந்து கொள்வீர்கள்.

இதில் கூறப்பட்டிருப்பதெல்லாம் மர்மத்துக்குள் மர்மம், சுழலுக்குள் சுழலாகவே அதிக மர்மத்துடன் ஆழச் சுழன்று கொண்டே செல்லும். படித்தால் பரவச மடைவீர்கள்!! இது சத்தியம்!! இரண்டு பாகத்திலும் பல வர்ணச்சித்திரப்படங்கள் அதிகமுண்டு.

362 பக்கங்கொண்ட முதல் பாகம் விலை ரூபா 1—8—0

378 பக்கங்கொண்ட இரண்டாம் பாகம் விலை ரூபா 1—8—0

## பண்டிதை மெஸ்மெரிஷா அல்லது ஒரு பயங்கரமான கப்பற் கொள்ளைக்காரி

இதில் பல அழகிய சித்திரப்படங்களும் காணப்படும். இதுவரை நீங்கள் பார்த்திராத கொலை சம்பந்தமான போட்டோப் படமொன்றும் முகப்புப் படமாக வைக்கப்பட்டிருக்கிறது. நாவல் முழுதும் படிக்கத்திடுக்கமா யிருக்கும். பார்க்கப் பார்க்கப் பரமானந்தமாயிருக்கும். காதல் ரசத்திலும் இத்துணை அருமையான காதலின்பத்தை எங்கும் கண்டிருக்க மாட்டீர்கள். விவாக தினத்தன்று லண்டனில் கைது செய்யப்படுகிறுள்; மகா ஆச்சரியத்துடன் லண்டன் சிறையினின்றுந் தப்பி நடுத் தீவில் விவாகம் நிறைவேறுகிறது.

எல்லாம் எலெக்ட்ரிக் வேகம்? எல்லாம் மின்சார வசியம்! அடி, தடி, கொள்ளை, கொலை, அரெஸ்ட், பயங்கர விசாரணை, அதிசய வெளிப்பாடு. கையிலெடுத்தவர் படித்து முடிக்காமல் கீழே வையார். இரவில் படித்தால் உங்களுக்கே திகிலுண்டாய் விடும்.

தடித்த காகிதத்தில் 310 பக்கங்கொண்ட சேர்த்தியான புத்தகமாய் வெளியாயிருக்கிறது. விலை ரூபா. 1—8—0.

## ஷம்ஸுல் ஹுதா வால்யூம்

**இனிய தமிழ் நடை ! உயரிய விஷயங்கள் ! அழகிய பயிண்டு.**

இந்த அழகிய வால்யூமில் முஸ்லிம்களுக்கு அவசியமான மார்க்க, சமூக விஷயங்கள் தெளிவான அத்தாட்சிகளுடன் வெளிவந்துள்ளன. நபிகள் நாயகச் சரித்திரச் சுருக்கம் குத்பாத் தர்ஜுமாவின் அவசியம், பெண் கல்வி, சுகாதாரம், பிரசங்கம் செய்வதன் முறைகள், ஆன்ம சம்பந்தமான இரகசிய விஷயங்கள், பெண்மணிகளின் ஒழுக்கங்கள் முதலிய விஷயங்கள் போதிய ஆதாரங்களுடன் விளக்கப்பெற்றிருக்கின்றன. மேலும், செய்யுட் சிறப்புக்கள், சிலேடைக் செம்மொழிகள், அகட விகட ஹாஸ்யங்கள் அனைத்தும் மலிந்து மிளிர்கின்றன. சுருங்கக் கூறுமிடத்து வாழ்க்கை நலத்தையும், சமூக முன்னேற்றத்தையும் எதிர்நோக்கி நிற்கின்ற எத்துறையாளர்க்கும், பிரசங்கஞ் செய்வோர்க்கும், வாலிபச் சிங்கங்கட்கும் இந்த நூல் அருந்துணை புரியக்கூடியதென்றே கூறுவோம். புத்தகம் ஒன்றுக்கு ரூ. 2-8-0.

தபாற் செலவு பிரத்தியேகம். அயல் நாட்டார் ரூ. 3-4-0 முன்பணமாக அனுப்பவேண்டும்.

## கள்ளக்காதலன் துரோகவலை

மனதை யள்ளும் இன்பரசங்கள், கிழவர்களுக்கும் யௌவனந் திரும்பும் காதல் வேட்டைகள், ஆச்சரிய மோசடிகள், மெச்சத்தகுந்த குணாதிசயங்கள், படிக்க ஆனந்தமும், அறிவும் நீதிமார்க்கத்தில் பற்றும் உண்டாக்கும். உண்மை நாவல்—வெறுங் கற்பனை மட்டுமல்ல. மேனாடுகளில் அறிவாளிகள் அங்கீகரிக்கும் முறையில் எழுதியது. கற்பலங் காரியான மேரி என்ற மோகனாங்கியை இரு வாலிபர்கள் மோகித்தல், மணக்க முயற்சிகள் செய்தல். இந்தக் காதல் வேட்டை பல அத்தியாயங்களிலும் விரிந்தோடுகிறது. தர்க்கமும், விகடமும், சொற்சாதுரியமும, வாதங்களும், போட்டிக் காதலின் பெருக்கும், கள்ளக்காதலன் வீசும் விபரீதக் கணக்கற்ற துரோகவலைகளும் ஒன்றன்பின் ஒன்றாய்ப் பல அத்தியாயங்களில் வர்ணனை யழகுடன் எழுதப்பட்டுள்ளன. விலை ரூபா 2 தான். தபால் செலவு 8 அணா. ஸிலோன், வெளிநாட்டு நண்பர்கள் ரூபா 2-10-0 முன்பணம் அனுப்பவேண்டும். (3 புத்தகங்களுக்கும் மொத்தமாக முன்பணம் ரூபா 6 அனுப்பினால் தபால் செலவு இனாம் !)

# தாருல் இஸ்லாம் புஸ்தகசாலை,

## ⇝ பிரசுரங்கள் ⇜

| | ரூ. | அ. |
|---|---|---|
| "ஜவாஹிருல் புர்கான்" :குர்ஆன் ஷரீபின் தமிழ் மொழி பெயர்ப்பு விரிவான வியாக்யானத்துடன் 2, பாகங்கள் (3,வெளியீடுகள்) காலிகோ பைண்டு | 4 | 8 |
| ஷை மூன்றும் வெளியீடு (அம்மயத்) ,, .... | 2 | 0 |
| ஷை நான்காம் வெளியீடு ஸயகூல் ராப்பர் பைண்டு | 1 | 8 |
| நாயக மான்மியம் - கில்ட்பைண்டு .... .... | 4 | |
| குத்பாப் பிரசங்கம் காலிகோ பைண்டு .... | 1 | 8 |
| இஸ்லாம் சித்திரப்படங்களுடன் (4-ம் பதிப்பு),, .... | 1 | 0 |
| நாயக வாக்கியம் 451, 1 & 2 பாகம் .... ,, .... | 0 | 14 |
| இஸ்லாம் எப்படிச் சிறந்தது? (2-ம் பதிப்பு) .... | 0 | 10 |
| ஈமான் (3-ம் பதிப்பு) .... .... .... | 0 | 6 |
| முஸ்லிம்களின் முன்னேற்றம் .... .... | 0 | 6 |
| ஆரியருக்கொரு வெடிகுண்டு (2-ம் பதிப்பு) .... | 0 | 12 |
| ஆரியசமாஜிக்கர்ப்பணம் (2-ம் பதிப்பு) .... | 0 | 12 |
| தாஜ்மஹால் (பல படங்களுடன் 2-ம் பதிப்பு) .... | 0 | 6 |
| மறுகமலம் (12 வியாசங்கொண்டது) .... .... | 0 | 8 |
| ஜுபைதா அல்லது பழிக்குப்பழி (அழகிய சிறு கதை) | 0 | 4 |
| மஹேந்திரஜாலம் (பாதிரி ரஸ்புட்டீன் சரிதை) .... | 0 | 12 |
| நூர்ஜஹான் - (பல படங்களுடன்) .... .... | 0 | 8 |
| தௌஹர்ஜான் காதல் 1 & 2 பாகம், பாகம் 1-க்கு | 1 | 8 |
| பண்டிதை மெஸ்மெரிஸா 3-ம் பதிப்பு .... .... | 1 | 8 |
| மலை விழுங்கி மகாதேவன் .... .... .... | 0 | 6 |
| ஹாத்திம்தாயீ (அநேக படங்களுடன்) டக்ஷீன்பைண்டு | 2 | 12 |
| லோகாதிசய விளக்கம் (பல படங்களுடன்) .... | 1 | 4 |
| சுவாசமே உயிர் (பல படங்களுடன்) .... .... | 1 | 8 |
| ஜியாரத்துல் குபூர் (144, ஆகாத கருமங்களுடன்) .... | 0 | 12 |

## இதர பிரசுரங்கள் :

| | | |
|---|---|---|
| மணவாழ்க்கையின் மர்மங்கள் (3-ம் பதிப்பு) .... | 2 | 4 |
| ஜீவ வசிய பரம ரகசியம் (2-ம் பதிப்பு) .... .... | 3 | 0 |
| இயேசுவின் இரகசியம் .... .... .... .... | 1 | 8 |
| நமது பரத கண்டம் 1 & 2 பாகம், பாகம் 1-க்கு .... | 1 | 14 |

